# ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியம்

தாமிரபரணி புஷ்கர நிறைவு

விழா மலர் - 23.10.2018

பூசப்படித்துறை, திருநெல்வேலி

# ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியம்

**(பூர்வ பாகம்)**

1905-ல் ஸ்ரீ ஏ.ஆர். கணபதி சாஸ்திரி அவர்களால்
பதிப்பிக்கப்பட்ட சமஸ்கிருத மூலம் மற்றும்
தமிழ் உரைநடையைத் தழுவித் தொகுத்தளிக்கப்படுவது

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு
**ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்**
அவர்கள் அருளாணையின் வண்ணம் ஆக்கப்பெற்று
2018 அக்.12 முதல் 23 வரை நிகழும்
தாமிரபரணிப் புஷ்கரப் பெருவிழா நிறைவு நாளில்
விழாக் குழுவினரால் வெளியிடப் பெறும் நூல்மலர்
முதல் பிரதி பெறுபவர்
மாண்புமிகு **க.பாண்டியராஜன்** அவர்கள்
அமைச்சர் தமிழ் வளர்ச்சி தமிழர் பண்பாடு மற்றும் தொல்லியல்துறை

பதிப்பாசிரியர்
**புலவர் வே.மகாதேவன்**
சென்னை-43

வெளியிடுவோர்
**தாமிரபரணி புஷ்கரப் பெருவிழாக் குழுவினர்**
ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பொன்விழா மெட்ரிக்
மேனிலைப்பள்ளி
சங்கர்நகர், திருநெல்வேலி - 627 357.

# ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியம்
## (பூர்வ பாகம்)
# தாமிரபரணி புஷ்கர விழா நிறைவு மலர்

1905-ல் ஸ்ரீ ஏ.ஆர். கணபதி சாஸ்திரி அவர்களால்
பதிப்பிக்கப்பட்ட சமஸ்கிருத மூலம் மற்றும்
தமிழ் உரைநடையைத் தழுவித் தொகுத்தளிக்கப்படுவது


| | | |
|---|---|---|
| பதிப்பித்தவர் | : | புலவர். வே.மகாதேவன் |
| முதல் பதிப்பு | : | 23.9.2018 |
| அச்சாக்கம் | : | ஸ்ரீ அய்யனார் பிரிண்டர்ஸ்<br>சூளைமேடு<br>சென்னை - 600 094.<br>கைபேசி : 7200063084 / 9941163085 |
| பக்கங்கள் | : | 164 |
| நன்கொடை | : | ரூ.1,000/- 200/- |

நூலை வெளியிடுவோர்
**தாமிரபரணி புஷ்கரப் பெருவிழாக் குழுவினர்**
**ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பொன்விழா**
**மெட்ரிக் மேனிலைப்பள்ளி**
சங்கர்நகர், திருநெல்வேலி - 627 357.
தொலைபேசி எண்கள் 6379817176 / 6379815646
மின்னஞ்சல் முகவரி: thamirabaranipushkarani2018@gmail.com


---

தாமிரபரணிப் புஷ்கரப் பெருவிழாக் குழுவினருக்கு ரூ.1,000/-
நன்கொடை அளிப்பவர்களுக்கு அளிக்கப்பெறும் நூல்மலர்

# தாமிரபரணிப் புஷ்கரப் பெருவிழாக் குழு 2018
## ஆலோசகர்கள்

***1. ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு***
***ஸ்ரீ சங்கர விஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள்***
*ஸ்ரீ சங்கரமடம், 1, சாலைவீதி, காஞ்சிபுரம் - 631 502.*

***2. ஸ்ரீஅகோபிலம் ஜீயர் சுவாமிகள் அவர்கள்***
*அகோபில மடம் கிளை, சேலையூர், தாம்பரம் - 600 612.*

***3. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்***
*தருமபுரம் ஆதீனம், தருமபுரம் அஞ்சல், மயிலாடுதுறை வழி*
*நாகை மாவட்டம் - 609 001. தொலைபேசி : 04364-223207*

***4. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்***
*திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை அஞ்சல் - 609 803.*
*நாகை மாவட்டம். தொலைபேசி : 04364-232021*

***5. ஸ்ரீ-ல-ஸ்ரீ சங்கரலிங்கதேசிக பரமசாரிய ஸ்வாமிகள் அவர்கள்***
*சூரியனார்கோயில் ஆதீனம், சூரியனார்கோயில்,*
*திருமங்கலக்குடி - 612 504. தஞ்சை மாவட்டம்.*

***6. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்***
*மதுரை ஆதீனம், தெற்காவணி மூலவீதி, மதுரை - 625 001.*

***7. தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்***
*திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி.*

***8. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்***
*துழாவூர் ஆதீனம், துலாவூர், கொரட்டி அஞ்சல், குன்றக்குடி வழி.*
*சிவகங்கை மாவட்டம் - 630 206. தொலைபேசி: 04577264446*

***9. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்***
*திருநறையூர் மடம், வள்ளல் சந்தான மடத்துத் தெரு,*
*திருநறையூர், நாச்சியார்கோயில், கும்பகோணம்-612 602.*
*தஞ்சை மாவட்டம்*

***10. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்***
*வரணி ஆதீனம், மேலவீதி, வேதாரண்யம் - 614 810.*
*நாகை மாவட்டம்.*

***11. ஸ்ரீ-ல-ஸ்ரீ கயிலை மாமுனிவர் அவர்கள்***
*அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - 612 504.*

***12. ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி தம்பிரான் சுவாமிகள் அவர்கள்***
*மௌன மடம், சிதம்பரம்.*

**தலைவர்கள்**

***ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச தேசிக சத்தியஞான பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்*** *செங்கோல் ஆதீனம், பெருங்குளம் - 628 752. தூத்துக்குடி மாவட்டம். தொலைபேசி : 04630271411*

***ஸ்ரீ-ல-ஸ்ரீ சத்தியஞான மகாதேசிக பரமாசாரிய ஸ்வாமிகள் அவர்கள்***

*வேளாக்குறிச்சி ஆதீனம், கல்லிடைக்குறிச்சி. 9443113025*

**அமைப்புச் செயலர்கள்**

***திருமதி. உஷாராமன்,*** *செல் : 9443087092*

***திருமதி. நிர்மல் ராமரத்தினம்***

**செயலாளர் (அரசு தொடர்பு)**

***திரு.ஆதிநாராயணன்,*** *அகிலி.*

**ஒருங்கிணைப்பாளர்**

***திரு. நாராயணன்,*** *மேலாளர், காஞ்சிமடம், நெல்லைக் கிளை.*

**அலுவலக முகவரி**

தாமிரபரணி புஷ்கரப் பெருவிழாக் குழு அலுவலகம்
ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பொன்விழா மெட்ரிக் மேனிலைப்பள்ளி
சங்கர்நகர், தாழையூத்து, திருநெல்வேலி - 627 357.
தொலைபேசி எண்கள் 6379817176 / 6379815646

**மின்னஞ்சல் முகவரி**

thamirabaranipushkarani2018@gmail.com

His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**

Srimatam Samsthanam

No.1, Salai Street, KANCHEEPURAM - 631 502



Date : ....................

ஸ்ரீமத்ராமாயணம் முதல் இதிஹாஸ புராணங்கள் போற்றும் மஹிமையுடைய தாம்ரா எனப்பெறும் தாம்ரபர்ணியானவள் கங்கையிலும்உயர்ந்தவளென்று மாஹாத்ம்யங்கள் தெரிவிக்கின்றன. அத்தகைய இந்தப் புண்யநதியில் இந்த வர்ஷம் மஹாபுஷ்கரம் நிகழ இருப்பது நம்முடைய புண்ய பலனேயாகும். இந்தச் சூழலில் தாம்ரபர்ணியின் பெருமைகளைத் தொகுத்து தாம்ரபர்ணி மஹிமை என்னும் தலைப்பில் புலவர் மஹாதேவன் வெளியிட இருப்பதை எண்ணி மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம். இந்த நூலில் தாம்ரபர்ணி மாஹாத்ம்யத்தை எளிய தமிழில் ஆர்வத்தோடு படிக்கும் வண்ணம் தந்திருப்பது ஆஸ்திக உலகிற்குப் பேருபகாரமாக அமையும். ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தரீ ஸமேத ஸ்ரீசந்த்ரமௌளீச்வரஸ்வாமியின் க்ருபையால் இந்த நூல் நல்லமுறையில் வெளிவந்து ஆஸ்திகர்களுக்கு பக்தியைப் பெருக்கட்டும் என்றும் இயற்றியவரும் வெளியிட்டவர்களும் ஐஹிகாமுஷ்மிக ச்ரேயஸ்ஸை அடையட்டும் என்றும் ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி:

ஸ்ரீவிளம்பி-கன்யா-சுக்ல-ஸப்தமீ

காஞ்சிபுரம்

16.10.2018

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
24-வது குரு மகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
அவர்கள்
திருவாவடுதுறை - 609 803. நாகை மாவட்டம்
போன் : 04364-232021

நாள் : 16.10.2018

## அருள் வாழ்த்துரை

உம்பர் தமக்கும் மேலோன் உவந்துதன் இடத்திற் கொண்ட
அம்பிகை கரத்தில் தோன்றி அகத்தியர் கரத்தில் ஏந்தும்
செம்பிடை வழிந்து தென்பால் திகழ்மலை இருந்து பூவில்
பம்பிய வளத்தின் ஓடிப் பயன்தரும் பொருநை வாழி !

– *திருநெல்வேலித் தலபுராணம்.*

ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியம் - பூர்வபாகம் என்னும் தொகுப்பு நூல் ஒன்றினைத் திருவாளர். புலவர். வே. மகாதேவன் அவர்கள் உருவாக்கி உள்ளமை அறிந்து மகிழ்ச்சி அடைகின்றோம்.

தாமிரபரணி நதியின் தோற்றம். அருள்மயமான மகிமை உள்ளிட்ட செய்திகளைப் புராணங்கள் சொல்லும் முறையில் எளிய இனிய தமிழில் நூலாசிரியர் எழுதியுள்ளமை பாராட்டத்தக்கது. இந்நூலினைக் கற்போர் தாமிரபரணி நதியின் பெருமைகளை விரிவாகவும் தெளிவாகவும் அறிந்து கொள்ளும் நல்வாய்ப்பைப் பெறுவர்.

'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை ' என்பார் திருவள்ளுவர். அம்முறையில் புண்ணிய நதிகளை மாசுபடுத்த அஞ்ச வேண்டும். நதிகளை நன்முறையில் பேணி வர வேண்டும். நதியின் பெருமை கூறும் இதுபோன்ற நூல்களைப் படிக்கும் போது அத்தகைய விழிப்புணர்வு ஏற்படும்.

திருவாளர். புலவர். வே. மகாதேவன் அவர்களின் ஆன்மீக எழுத்துப் பணிகள் மேன்மேலும் சிறந்து தழைக்க வேண்டுமென நமது ஆன்மார்த்த மூர்த்திகளாகிய ஸ்ரீ ஞான மாநடராஜப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

பெறுநர் :
*திருமிகு. புலவர். வே. மகாதேவன் அவர்கள்,*
சென்னை.



உ Phone : 0435 - 2456655

Siva Siva

**SRI KASI MUTT**

"Kailaimaamunivar" Sri-La-Sri Kasivasi

**MUTHUKUMARASWAMI THAMBIRAN** Swamigal,

Head of Sri Kasi Mutt, Thiruppanandal - 612 504,

Thanjavur District, Tamil Nadu

*17.10.2018*

# ஆசியுரை

*மாதவம் செய்த தமிழகத்தின் தென்பாண்டி நாட்டை வளம் கொழிக்கச் செய்யும் நதி பொருநை நதி. தாம்ரபர்ணீ எனப்படும் இந்நதி இலக்கியம், புராணம் ஆகிய வகைகளிலான நூல்களில் புகழ்ப்பெறும் பெருஞ்சிறப்புடையதாகும்.*

*'ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியம்' என்னும் சுலோக வடிவிலான நூல் 100 ஆண்டுகளுக்கு முன் ஏ.ஆர்.கணபதி சாஸ்திரி என்னும் அறிஞரால் பதிப்பிக்கப் பெற்றது. அவர் அந்நூலைத் தமிழ் உரைநடையாக மொழி பெயர்த்தும் வெளியிட்டார். அவ்வுரை நடையைச் சுருக்கி அதன் பூர்வபாகத்தைத் தொகுத்துப் புலவர் வே.மகாதேவன் தாம்ரபர்ணீ புஷ்கரத் திருவிழாவின் நிறைவு விழாவில் இதனை வெளியிடுகிறார்.*

*பிற நாடுகளின் நதிகள் ஆன்மிக, சமயத் தொடர்புடையனவாகச் சுட்டப் பெறுவனவல்ல; நம் பாரதத்தின் நதிகள் ஆன்மிகத் தொடர்பும் சமயங்களின் தொடர்பும் மிக்கவையாக ஆன்றோர்களால் அறிவிக்கப் பெற்றவை. இங்கே குடிநீர், விவசாய ஆதாய வரவாக மட்டும் நதிகளை நாம் பார்ப்பதில்லை. அவற்றில் நீராடினால் பாபம் நாசமாகும்; புண்ணியம் கிட்டும்; வீடும் எய்தலாம் என்னும் அளவுக்கு மதிக்கிறோம். இவ்வகைப் பயன்களை இந்நூல் நன்கு விவரிக்கிறது.*

*நம் ஸ்ரீ காசிமடத்தின் நிறுவனரும் அருட்பெருங்கவிஞரும் தவராஜசிங்கமும் பொருநை நதிக்கரைத் தலமான ஸ்ரீவைகுண்டத்தில் அவதரித்த புனிதருமாகிய ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள், 'காணு காணு நதிகளெல்லாம் புனற்கங்கையே' என்று தாம் அருளிய காசிக் கலம்பகத்தில் அறிவித்தருளினார். அவ்வருளுரையின்படி பொருநையும் கங்கையே ஆகும்.*

அறுபத்தொரு தலைப்புக்களாகப் பகுக்கப்பெற்றுள்ள இவ்வுரை நடைநூல் அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில் எளிதாகச் செய்யப்பட்டுள்ளது. இதன்கண் அகத்திய முனிவரின் அருட்செயலால் பொருநை தோன்றிய வரலாறும் அதன் கிளை நதிகளாகிய கடனா முதலியவை தோன்றிய வரலாறுகளும் இவற்றில் தீர்த்தாடனம் செய்யும் முறைகளும் அப்போது சொல்லத்தக்கனாகிய துதி மந்திரங்களும் அவற்றுக்கான பலன்களும் விரிவாக எழுதப் பெற்றுள்ளன. பல உப கதைகளும் வருதலால் இந்நூல் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டுகின்றது.

தாம்பிரபரணி புஷ்கரப் பெருவிழாவை ஒட்டி இத்தொகுப்பாசிரியர் மூன்று நூல்களை வெளியிட்டுள்ளார். இவை அளவால் சிறியன வாயினும் பொருட் சிறப்பாலும் பொருநை நதியின் சிறப்புக்களை தெளிதின் தெரிவிப்பனவாகவும் பொருநையின் புராண வரலாற்றுச் செய்திகளை முற்ற உரைப்பனவாகவும் இருத்தல் குறிக்கத்தக்கனவாகும்.

புலவர் வே.மகாதேவன் இத்தகு ஆன்மிக எழுத்துப்பணிகளைத் தொடர வேண்டுமெனவும் அவை அடியார்களின் பக்தியை மிகுவிப்பனவாக அமைந்து சிறக்க வேண்டுமெனவும் எல்லாம் வல்ல செந்திலாதிபன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்

சிவசிவ

சாதிகள்ஒழியட்டும் எல்லாம்நிறைவாகட்டும் சமத்துவம்வெல்லட்டும்

கோவை காமாட்சிபுரி ஆதீனம்

**ஞானகுரு சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள்**

நிறுவனர், ஸ்ரீஅங்காளபரமேஸ்வரி சித்தர்பீடம் மகாசமஸ்தானம்

உலக சமாதான தெய்வீகப் பேரவை

காமாட்சிபுரம், திருச்சி சாலை, ஒண்டிபுதூர் அஞ்சல்.

கோயம்புத்தூர் - 641 016.

தொ.பே. 0422-2273353 / 9843016211 / 9843716211

மின்னஞ்சல்: gnanaguru.kamatchipuri@gmail.com

# வாழ்த்துரை

*நலம் பெருக்கும் தாமிரபரணி நதி*
*வளம் பெருக்கும் தமிழகத்தில்*
*அருள் தெய்வநலம் கமழும் தாமிரபரணி*
*பொருள் விளக்கம், புகழ் விளக்கம்*
*புராண விளக்கம் யாவும் தொகுத்துப்*
*பொருந்தவே மறைநூல் மலர்தார்*
*அருந்தவப் புதல்வர் மகாதேவனால்*
*திருந்தப் படித்துப் பயன்பெறுவோம்*
*அன்னை தாமிரபரணி புகழை.*

*(ஒப்பம்) சிவலிங்கேஸ்வர சுவாமி*
*காமாட்சிபுரி ஆதீனம், கோவை - 641 016.*

*நாள்: 30.8.2018*

# பதிப்புரை

*பேரன்புடையீர் வணக்கம்.*

*தாமிரபரணியின் பெருமையை விளக்கும் வகையில் ஏனைய நதிகளுக்கு இல்லாத நிலையில் மிகப்பெரியதொரு புராண நூல் இருத்தலையும் அது 1905-ல் திருவனந்தபுரத்தைச் சேர்ந்த திருமிகு. கணபதி சாஸ்திரியார் அவர்களால் பதிக்கப் பெற்றிருத்தலையும் அறிந்தேன். அந்நூலினைத் தேடினேன்; கிடைத்தது. அந்த நூலின் வடமொழி பகுதி கிரந்த எழுத்தில் பதிக்கப்பெற்று அதன் பொருள் அக்காலத்திய மணிப்பிரவாள நடையில் பதிப்பிக்கப் பெற்றிருத்தலையும் படித்தறிந்தேன்.*

*1905-ல் சாஸ்திரியாரால் பதிக்கப்பெற்ற நூல் பூர்வபாகம். இது 32 அத்தியாயங்களை உடையது. இதன் அடுத்த பகுதியான உத்தரகாண்டம் மேற்படி ராமாசாஸ்திரியார் குடும்பத்தினரின் பேருதவியால் கிடைக்கப்பெற்று சென்னை சமஸ்கிருத கல்லூரியினரால் 2018-ல் வெளியிடப்பட்டுள்ளது.*

*முதல் பாகம் மட்டும் தாமிரபரணி புஷ்கர நிறைவு விழா மலராக வெளியிடப்பெறுகிறது.*

*இந்த நூலுக்கு ஆசியுரை வழங்கிய துறவியரையும் அணிந்துரை அளித்த சான்றோர்களையும் வணங்கி மகிழ்கிறேன்.*

*கம்பனைச் சடையன் புரந்ததுபோல என்னை ஆதரித்து இத்தகைய நூல்கள் வெளிவரக் காரணமாகவுள்ள தினமலர் **ஆர்.ஆர்.கோபால்ஜி** அவர்களை இத்தருணத்தில் நெஞ்சார நினைந்து நன்றி செலுத்துகிறேன்.*

*இந்த நூலினை தாமிரபரணி புஷ்கர விழா மலராக வெளியிடும் துறவியர்களை ஆலோசகர்களாகக் கொண்ட புஷ்கர பெருவிழாக் குழுவினருக்கு என் மனமார்ந்த நன்றியறிதலை உரித்தாக்கிக் கொள்கிறேன்.*

*இந்த நூலில் ஏதேனும் குற்றமிருப்பின் சுட்டிக்காட்டினால் திருத்திக் கொள்வேன் என்று விண்ணப்பிப்பதுடன் இதனை ஏற்றுப் போற்றுமாறு சமய அன்பர்களைப் பணிவுடன் வேண்டிக் கொள்கிறேன்.*

இப்படிக்கு
வே.மகாதேவன்

*23/10/2018*
*சென்னை.*

## வித்துவான் வே. மகாதேவன் பற்றிச் சில தகவல்கள்



- நினைவில் வாழும் தமிழறிஞர் பேராசிரியர் கா.ம.வேங்கடராமையா - அன்னபூரணி தம்பதியருக்கு நான்காவது மகனாகத் திருப்பனந்தாளில் 09.02.1950-இல் பிறந்தவர்.
- திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் வித்துவான் பட்டம் பெற்றவர் - மதுரைத் தமிழ்ச் சங்கத்தினரின் பண்டித வித்துவான் பட்டமும் - தமிழ்நாட்டரசு தொல்லியல் துறையின் கல்வெட்டியல் சான்றிதழும் பெற்றவர் - திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தமிழ் முதுகலைப் பட்டம் பெற்றவர் - கும்பகோணம் அரசினர் ஆடவர் கலைக்கல்லூரியில் பகுதிநேர வகுப்பில் இணைந்து பயின்று எம்.ஃபில். பட்டம் பெற்றவர்.
- ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மேல்நிலைப்பள்ளியில் முதுநிலைத் தமிழாசிரியராக 2001 வரை பணியாற்றியவர். பின் தன்னார்வப் பணி ஓய்வு பெற்று இதழியலாளராகப் பணிபுரிந்து வருபவர்.

**ஆக்கிய நூல்கள்**

சிறியதும் பெரியதுமாக 25-க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியவர். இவற்றுள் 15 நூல்கள் குறிப்பிடத்தக்கவை. தமிழுக்கு இவர் தந்த மிகச் சிறந்த நூலாகச் சோழர் செப்பேடுகளைக் குறிப்பிடலாம்.

**சோழர் செப்பேடுகள் - அரிய பணி**

பாண்டியர் செப்பேடுகளும் பல்லவர் செப்பேடுகளும் தமிழாராய்ச்சி நிறுவனத்தவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ளன. சோழர் செப்பேடுகளைத் தொகுத்துத் தமிழில் பதிப்பிக்கும் பணியை மேற்படி நிறுவனங்கள் செய்யவில்லை. இக்குறையைத் தீர்க்கும் வகையில் இவர் சோழர் செப்பேடுகளைத் தொகுத்துப் பதிப்பித்துள்ளார். இந்த நூல் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தினரால் வெளியிடப்பட்டுள்ளது.

**பிற நூல்கள்**

1. கொடும்பாளூர் வேளிர் வரலாறு, 2. வரலாற்றுப் போக்கில் பழையாறை மாநகர், 3. கல்வெட்டுத் தேன்துளிகள், 4. சிவபாதசேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள், 5. கல்வெட்டுக்கள் - வினாவிடை விளக்கம், 6. மகதைப்பெருமாள் பொன் பரப்பினானான வாணகோவரையன், 7.அர்த்தமுள்ள சிந்தனைகள், 8. கிரிவலப் பாதையிலே,9. ஸ்ரீகாஞ்சி சங்கர மடம் - ஆழ்வியல் ஆய்வு,

*10. தஞ்சையில் பங்காரு காமாட்சி, 11. ஒளிவளர் விளக்கே போற்றி, 12. ஸ்ரீசங்கர மடத்தின் தமிழ்ப் பணிகள், 13. காஞ்சிப் பெரியவருக்குக் கனகாபிஷேகங்கள், 14. குடந்தையின் பெருமையும் மகாமக மகிமையும். 15. காவிரி மகாத்மியம், 16. நலமெலாம் நல்கும் தாமிரபரணி.*

**எழுதிய கட்டுரைகள்**

*தினமலர் இணைப்பிதழாக வியாழன் தோறும் வெளிவரும் பக்தி மலரில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதுதல். இதுவரை வெளிவந்த கட்டுரைகள் சுமார் 4000-க்கு மேல் இருக்கும். 2. அமுத சுரபி, கலைமகள், சிவசுந்தரி, சிவஒளி மற்றும் குமரகுருபரன் முதலான மாத இதழ்களில் அவ்வப்போது ஆய்வுக் கட்டுரைகள் எழுதுதல்.*

**பெற்ற சிறப்புகள்**

- *அருட்செல்வர் பொள்ளாச்சி நா.மகாலிங்கம் அவர்களால் சென்னை இராஜேஸ்வரி ஹாலில் பொற்கிழி நல்கிப் பாராட்டப்பெற்றமை (07.10.1988)*
- *சென்னை சென்டினேரியன் டிரஸ்ட் சார்பில் 'சேவா ரத்னா' என்ற விருது தந்து சிறப்பிக்கப்பெற்றமை (04.02.1999)*
- *மதுரை ஆதினகர்த்தரால் 'சைவஞானபானு' என்ற பட்டம் கொடுத்துப் பாராட்டப் பெற்றமை (04.06.2004)*
- *பனசை - செந்தமிழ்க் கல்லூரிப் புலவர் குழுவினரின் சார்பில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் அவர்கள் 'சைவத்தமிழ்மணி' என்ற பட்டமும் பொற்பதக்கமும் வழங்கிச் சிறப்பித்தமை (23.10.2004)*
- *தருமை ஆதினகர்த்தர் அவர்களால் 'பக்திக் கலைச் செல்வர்' என்ற பட்டமும் பொற்பதக்கமும் வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றமை (06.09.2011)*
- *சூரியனார்கோவில் ஆதினகர்த்தர் அவர்களால் 'சாசன ஆராய்ச்சிச் செம்மல்' என்ற பட்டம் தந்து சிறப்பிக்கப் பெற்றமை (25.04.2012)*
- *திருவாவடுதுறை ஆதினகர்த்தர் அவர்கள் 'சைவத் தமிழ்ச் செல்வர்' என்ற பட்டமும் பொற்கிழியும் அளித்துச் சிறப்பித்தமை (14.10.2013)*

**- இரா. பாலாஜி - கும்பகோணம்**

# தாமிரபரணி புஷ்கரம் - 2018

***உம்பரர் தமக்கு மேலோன் உவந்து தன் இடத்தில் கொண்ட***
***அம்பிகை கரத்தில் தோன்றி அகத்தியர் கரத்தில் ஏந்திச்***
***செம்பிடை வதிந்து தென்பால் திகழ்மலை இருந்து பூவில்***
***பம்பிய வளத்தில் ஓடிப் பயன்தரும் பொருநை வாழி***

**- திருநெல்வேலித்தல புராணம்**

## நினைத்தாலே இனிக்கும்

திருவாரூரில் பிறக்க முக்தி; சிதம்பரத்தைத் தரிசிக்க முக்தி; திருவண்ணாமலையை நினைக்க முக்தி என்ற பழமொழி வழக்கில் உண்டு. தாமிரபரணியைத் தரிசித்தாலும் நினைத்தாலும் ஸ்நானம் செய்தாலும் அதன் தீர்த்தத்தைப் பருகினாலும் எல்லாப் பாவங்களும் அகலும்; முக்தி கிடைக்கும் என்று ஸ்ரீதாம்ரபர்ணீ மகாத்மியம் புகழ்ந்துள்ளது.

***ஸ்மரண தர்சனாத் த்யானாத் ஸ்நானாத் பாநாத் அபித்ரூபம்***
***கர்ம விச்சேத்திநீ ஸர்வ ஜந்தூனாம் மோக்ஷதாயிநீ***

*என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.*

## பேர் சொன்னால் போதும்

***தர்மத்ரவா, பகவதி, தாம்ப்ரா, மலயநந்தினீ***
***பராபரா, அமிருதஸ்யந்தா, தேஜிஷ்டா, கர்மநாசினீ***
***முக்திமுத்ரா, கர்மகலா, கலிகல்மஷநாசினி***
***நாராயணீ, பிரம்மநாதா, நாதேயி, மங்களாலயா***
***மருத்வதீ, அம்பரவதீ, மணிமாதா, மஹோதயா***
***தாபாக்னீ, நிஷ்களா, நந்தா, த்ரயீ, திரிபதகாத்மிகா***

*என்பன 24 புண்ணியத் திருநாமங்களாகும். தாமிரபரணியின் இத்திருநாமங்களை உள்ளன்புடன் உச்சரித்தாலே போதும்; உயர்வுகள் தானே வந்து சேரும்.*

# ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியம்

## I

## இமவான் மகளான பார்வதிதேவி

*சிவமும் சக்தியும் பிரிக்க இயலாதவை. இறைவனது அருளே அவனது சக்தியாகும். 'அருளது சக்தியாகும் அரன்தனக்கு' என்பது சிவஞானசித்தியார். சிவம் இன்றேல் சக்தியில்லை; சக்தியின்றேல் சிவமில்லை. இரண்டும் பிரிப்பற நிற்கும் பரம்பொருட் கூறுகள்.*

### ஸ்ரீபுர தேவி

*சக்தி ஒருத்தியே. அவளே முழுமுதல்வி. ஆனாலும் சக்தி தேவியைத் திரிசிக்தி என மூன்றாகச் சதுர்சக்தி என நான்காகப் பஞ்ச சக்தி என ஐந்தாக ஆறாதாரசக்தியென ஆறாகச் சப்தமாதர்கள் என ஏழாக அஷ்டசக்திகள் என எட்டாக நவசக்திகள் என ஒன்பதாகத் தசமகாவித்தைகள் எனப் பத்தாகப் பகுப்பதுண்டு.*

*சக்திகளில் மிகச்சிறந்தவளான மூலமூர்த்தியான ஆதிசக்தி யைப்பற்றித் தாம்ரபர்ணீ மகாத்மியம் மிகப்பல செய்திகளைக் குறிப்பிட்டிருக்கிறது. அவள் ஆதிமாதாவானஸ்ரீபுர தேவதை என்று முதலாம் அத்தியாயத்தில் 74-ஆம் சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறாள். இவள் தாமரை மலர் போன்ற கரங்களை உடையவள்; செந்தூரம் போன்ற மேனி படைத்தவள்; அழகு என்று உருவகிக்கப்படும் சமுத்திரத்தின் அலைபோல் இருப்பவள்; அநேக யோனிகளுடைய கூட்டங்களால் வணங்கப்படும் திருவடிகளை உடையவள்; புண்சிரிப்பு என்னும்பால்மழையைப் பொழிபவள் என்கிறது தாம்ரபரணீ மகாத்மியம்.*

### பர்வதராஜனின் வேண்டுகோள்

*இமவான் என்று சொல்லப்படுகின்ற பர்வதராஜன் தனக்கு நல் மகவு வேண்டித் தவம் செய்தான். அவன்முன் லோக மாதா காட்சி தந்தாள். அவளை நோக்கி, ''அம்பிகையே , உலகம் காக்கும் உத்தமியே! எனக்கு அருள் செய்ய வேண்டும். இந்திரன் முதலியவர்களால் துதிக்கப்படும் மேன்மை பொருந்தியவளே; உலகில் உள்ள தீமைகளைத் தொலைக்கும் உத்தமியே; உனக்கு வந்தனம்.*

*மாயையால் அசுரர்களை மாய்த்தவளே! பாவம் தொலைக்கும் தன்மை படைத்த திருவடித் தாமரைகளை உடையவளே! உலக சிருஷ்டியின் தொடக்கக் காலத்தில் மூலப்ரக்ருதியாக நிற்பவளே!*

அதன்பின் பிரகஸ்பதியைக் காட்டிலும் பேச்சுச் சாமர்த்தியம் உள்ளவளாக அதாவது நாதரூபிணியாக இருப்பவளே!

நீயே ரஜோகுணத்தின் சித்திக்காகப் பிரமனைப் படைத்தவள். உலகைக் காக்க நாராயண ரூபிணியாக இருப்பவள்.நீயே நிமிஷமாகவும் (கலை) முப்பது நிமிஷமாகவும் (காஷ்டை) நாற்பதெட்டுநிமிஷமாகவும் இருப்பவள். மேஷம் முதலான ராசிகளாகவும், அஸ்வினி முதலான நட்சத்திரங்களாகவும் கூறப்படுபவள். மொத்தத்தில் நீ காலமே வடிவான காவிய நாயகி.

தேவதைகள் எல்லாரும் உன் மகிமையால் உருவானவர்கள். சுகமோ மோட்சமோ யார் யார் எதை எதை விரும்புகிறார்களோ அதனை அளிக்கும் அன்னை நீ என உன்னைப் புகழ்கின்றன வேத வாக்கியங்கள்.

நீயே கருமம்; நீயே காலம்; நீயே குணங்கள்; நீயே ஆசாரம்; நீயே சூக்கும ரூபிணி. உன்னிடத்தில் உலகமெல்லாம் இருக்கிறது. அது உன்னுடைய மேன்மையை அடைக்கலமாகவும் அடைந்திருக்கிறது.

சகல தேவதைகளும் உன்னையே ஆராதிக்கிறார்கள். யோகிகள் எல்லாம் தம் மனத்தில் உன்னைத் தான் தியானிக்கிறார்கள். சாமானியர்கள்தத்துவ ரூபமானகருவிகளால்உன்னைத்தான்சிந்திக்கிறார்கள்.

வேதங்கள், ஆகமங்கள், மந்திரங்கள் இவைகளைக் கொண்டு தேடிப்பிடிக்கும்போதுசிலநேரங்களில்நீஅகப்பட்டவளைப்போலக் காணப்படுகிறாய். ஆனால், உன்னை முழுமையாக உணர யாராலும் முடிவதில்லை. ஒருகால் அது பரமசிவனால் மட்டும் முடியுமோ என்னவோ?

இப்படிப் பல்வேறு மகிமைகள் உடைய நீ என்முன் காட்சி தந்தது அதிசயத்திலும் அதிசயம்தான். சிந்தாமணி என்ற ரத்தினம் கிடைத்தது போல நான் மகிழ்வடைகிறேன். உன் ஒளிபொருந்திய உருவம் கண்டு மிகவும் நடுங்குகிறேன். அம்மையே! உன்னை என் மகளாகப் பாவித்துச் சுகமாக வாழ்ந்திருக்க விரும்புகிறேன். தாயே எனக்குத் தயை புரிய வேண்டும்'' எனப்பலவாறாகத் துதித்தான் பர்வதராஜன்.

அன்னையும் அவன் வேண்டுகோளுக்கு இசைந்தாள்; பெண்ணாக மாறினாள். இமவானும் அவன் மனைவி மேனையும் குழந்தையை எடுத்து முத்தமிட்டுக் கொண்டாடினார்கள். அவள் இமவானின் அரவணைப்பில்நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள். மங்கைப் பருவத்தை அடைந்தாள். அப்போது ஒரு அதிசயம் நடந்தது.

# (2)

## பார்வதிதேவி பெற்ற பங்கஜமாலை

சிவபெருமானுக்கும் பார்வதி தேவிக்கும் திருமணம் நிகழ்த்த நிச்சயித்தான் மலையரசன் இமவான். நகர் அலங்கரிக்கப்பட்டது. திருமணத்துக்கு முன்னதாகப் பார்வதி தேவி மணப்பெண் ஆக்கப்பட்டாள். கல்யாண வேஷம் பூண்டாள்; காப்புக் கட்டிக் கொண்டாள். அதன்பின் அவள் ஆதிமாதாவான ஸ்ரீபுர தேவியை முறைப்படிப் பூஜித்தாள்.

காணிக்கைகளைத் தந்தாள். தூபம், தீபம், கர்ப்பூரம் முதலானவற்றைச் சமர்ப்பித்தாள். அந்நிலையில் அவள் பூஜைகண்டு மகிழ்ந்த ஸ்ரீபுரதேவி பார்வதி முன் தோன்றினாள்.

### பாராட்டும் பரிசும்

ஸ்ரீபுரதேவி பார்வதிதேவியின் பூஜைகண்டு மகிழ்ந்து, ''குழந்தாய்! உன் பூஜைகண்டு மகிழ்ந்தேன். உன்னிடத்தில் நிரந்தரமான சுகம் இருக்கிறது. உன்னிடம் பதினான்கு உலகங்களும் இருக்கின்றன. இவ்வுலகங்கள் அனைத்தும் உன்னையே சார்ந்திருக்கின்றன. நீ சம்புவுக்குப் பத்தினியாகி இந்த உலகங்களைத் தீங்கின்றிக் காப்பாற்ற வேண்டும்'' என்று அருள்செய்தாள்.

மிக விரைந்து செயல்பட்டாள். தன் கழுத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்த உயரியதொரு தாமரை மாலையை எடுத்துப் பார்வதியின் கழுத்தில் இட்டாள். தாமரை மலரைக் காட்டிலும் சிவப் புற்றிருந்த கையைப் பார்வதிதேவியின் தலையில் வைத்தாள்; ஆசிர் வதித்தாள். அதன்பின் பார்வதி தேவியிடம் தான் பரிசாக அளித்த மாலையின் மகிமையை விளக்கினாள்.

### மாலையும் மகிமையும்

''பர்வத ராஜகுமாரியே! தேவதைகள் உனக்குக் கொடுப்பதற்காகப் பூஜை செய்து வைத்திருந்ததும் நான் அணிந்திருந்ததுமான மாலையை நான் இப்போது உனக்குத் தந்திருக்கிறேன். நீ இந்த மாலையைச் சாதாரண மாலையாக நினைக்காதே. எனக்குப் பிரியத்தைத் தரக்கூடிய சிறந்த மாலையாக இதனை நினைக்க வேண்டும். இந்த மாலையால் ஜனங்கள் எல்லாரும் எக்காலத்திலும் சுகம்பெற்று வாழ்ந்திருக்கக் கூடிய நிலை வரும். இந்த மாலை உலக நன்மைக்கானதாய் இருக்கும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை'' என்று உத்தரவு விடுத்தாள். இதனைத் தாம்ரபர்ணீ மகாத்மியம் முதல் அத்தியாயத்தில் உள்ள

***அவேஹி பரமாம் மாலாம் மாமகிம் ஹ்ருதயங் கமாம்!***

***அநயா மாலயா லோகா பவந்து சுகினஸ்ஸதா!! (83)***

***ஜகதாமு பகாராய பவேதேஷாந ஸம்சய:***

***இத்யுக்த்வான் தர்ததே தேவீ லோகாநாம் பஸ்யதாம் ததா (84)***

என்ற சுலோகங்களால் அறியலாம்.

எல்லாரும் வழிபட்ட நிலையில் ஸ்ரீபுரதேவி திடீரென மறைந்தாள். மகாமங்கள ரூபியான பார்வதி தேவிக்கு ஸ்ரீபுரதேவி மாலை தந்தமையைக் கண்டு அவள் தாய் தந்தையர் பெரிதும் மகிழ்ந்தார்கள். அதன்பின் அந்த மாலை விளைவித்த அற்புதங்கள் மிகப்பல. அது அடுத்து யாரை அடைந்தது என்பது சிந்திக்க வேண்டிய செய்தி.

## (3)

## பரமசிவன் கழுத்தில்பங்கஜ மாலை

கயிலை மலையில் நடந்த பார்வதி கல்யாணத்தைப் பற்றிப் புராணங்கள் பல்வேறு விதமாக விவரித்திருக்கின்றன. தாம்ரபர்ணீ மகாத்மியம் ஒரு அரிய செய்தியை விவரித்துள்ளது. ஸ்ரீபுரதேவி பார்வதிக்குக் கொடுத்த மாலையைப் பற்றி விவரிக்கிறது அந்த நூல்.

### தேவர்கள் வருகை

திருமண விழாக் காண ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீதேவியுடன் கருடன் மீது எழுந்தருளி வந்தார். அநேக பரிவாரங்களுடன் வந்தார். அதுபோலவே சரஸ்வதி தேவியுடன் நான்முகன் வந்தார். இந்திரன் முதலான அட்டதிக் பாலகர்களும் தரன் முதலான அஷ்ட வசுக்களும் அசுவினி தேவர்களும் தாதா முதலான துவாதச ஆதித்யர்களும் மிருகவயாதன் முதலான 11 ருத்திரர்களும் பூத முதலான ஏழு உலகங்களிலும் அதல முதலான ஏழு உலகங்களிலும் இருப்பவர்களும் நாகங்களும் நதிகளும் கயிலைக்கு வந்தார்கள்.

நாரதர் முதலான தேவரிஷிகளும் வசிஷ்டர் முதலான பிரம்ம ரிஷிகளும் கயிலையில் திரண்டனர். அந்தநிலையில் பரமசிவன் மணக்கோலத்துடன் ரிஷப வாகனத்தில் எழுந்தருளினார்.

### திருமணம்

வாத்தியங்கள் ஒலித்தன; குதிரைகள் கனைத்தன; யானைகள் பீறிட்டன; அப்போது கயிலாயத்துக்கு விஜயம் செய்தார் சிவபெருமான்.

பர்வதராஜன் சிவபெருமானைப் பக்தியுடன் எதிர்கொண்டு அழைத்தான். அரண்மனைக்குக் கொண்டு வந்தான். ரத்தின சிம்மாச

னத்தில் அமர்த்தினான். பாத்யம் மதுபர்க்கம் முதலானவை தந்தான். முறைப்படி மணமண்டபத்தில் அக்னியை வளர்த்து மந்திரங்கள் ஓதிப் பார்வதி தேவியை உதகதாரையுடன் தானம் பண்ணினான்.

### பரமசிவன் கழுத்தில் பங்கஜ மாலை

ஸ்ரீபுரதேவியால் ஆசீர்வதித்து அளிக்கப்பட்ட மகத்துவம் பொருந்திய மாலையான தாமரை மாலை பார்வதிதேவியின் கழுத்தை அலங்கரித்துக் கொண்டிருந்தது. மணமேடைக்கு வந்த பார்வதி அந்தத் தாமரைப் பூமாலையை எடுத்துத் தன்னுடைய கணவனான சிவபெருமானுடைய திருக்கழுத்தில் தோள்மாலையாகச் சமர்ப்பித்தாள். அப்போது ஆகாயத்திலிருந்து மலர் மழை பொழிந்தது; தேவ துந்துபிகள் ஒலித்தன; அனைவரும் ஆனந்தமுற்றனர்.

### ஆகாசவாணி சொன்ன செய்தி

அசரீரியை ஆகாசவாணி என்று சொல்வார்கள். ''திருமணம் காரணமாக வடக்கே கயிலையில் அனைவரும் கூடியதால் தென்திசை உயர்ந்து கொண்டிருக்கிறது. கூடிய விரைவில் பாரதத்தைச் சமப்படுத்தா விட்டால் தீங்கு விளையும்'' என்றது அசரீரி. இதுகேட்ட சிவபெருமான் எடுத்த முடிவு என்ன? என்று காண்போமா.

## (4)

## அகத்தியர் கழுத்தில் தாமரை மாலை

ஆகாசவாணியின் எச்சரிக்கையைக் கேட்டவுடன் சிவபெருமான் தெற்கே அனுப்பத்தக்க முனிவர் - பாரதத்தைச் சமப்படுத்தும் வலிமைபடைத்தவர் அகத்திய முனிவர் என முடிவெடுத்தார். உடனே கும்ப முனிவன் எனப்படும் அகத்திய முனிவரைத் தன் அருகில் அழைத்தார்.

### சிவன் இட்ட கட்டளை

அகத்திய முனிவரை அருகில் அழைத்த சிவபெருமான் எல்லா அறங்களையும் அறிந்துணர்ந்த அறிவாளியான அவரைப் பார்த்து ''கும்பமுனியே, நீங்களோ அல்லது நானோ சென்று முடிக்க வேண்டிய மகத்தான வேலை ஒன்று இருக்கிறது. இப்போது பூமியின் தெற்குப் பாகம் அந்தப் பகுதியில் இயங்கும் மற்றும் இயங்காப் பொருள்களின் அதாவது சராசர ரூபமான பாரமில்லாத காரணத்தால் உயரக் கிளம்பிவிட்டது. விரைவில் அழியும் நிலையில் இருக்கிறது. அந்த அச்சத்திலிருந்து அனைவரையும் காப்பாற்ற வேண்டிய நிலை

ஏற்பட்டிருக்கிறது. நான் சென்று அதனைச் செய்யும் நிலையில் இல்லை.

எனவே, நீங்கள் உங்கள் மனைவியாகிய லோபாமுத்திரையுடன் தென்திசை நோக்கி விரைந்து செல்ல வேண்டும். இந்தத் திருக்கல்யாணத்தில் பங்கேற்க முடியவில்லையே; கல்யாண தரிசனம் கிட்டவில்லையே என்றெல்லாம் மனக்கவலை கொள்ள வேண்டாம். இந்தக் கல்யாணக் கோலத்தைத் தாங்கள் விரும்பும் இடங்களிலெல்லலாம் பக்தர்கள் எல்லாருடைய நன்மையைப் பொருட்டும்தங்களுக்குக்காண்பிப்போம்''என்றுகட்டளையிட்டார். அகத்திய முனிவரும் தென்திசைநோக்கிச் செல்ல முற்பட்டார்.

## அகத்தியருக்கு அளித்த தாமரை மாலை

மனைவியான லோபாமுத்திரையுடன் தென்திசை நோக்கிப் புறப்படத் துவங்கிய அகத்திய முனிவருக்குத் தன் பூதகணம் ஒன்றின் மூலம் தாமரை மாலை ஒன்றினைக் கொடுத்தனுப்பினார். அந்த மாலை ஸ்ரீபுரதேவியால் பார்வதி தேவிக்கு அளிக்கப்பட்ட மாலை. சிவபெருமானுடைய திருத்தோள்களில் பார்வதிதேவியின் கைகளால் இடப்பெற்ற மாலை. சிவபெருமானின் தோள்களை அலங்கரித்துக் கொண்டிருந்த தாமரை மாலை. மாலையை எடுத்துச் சென்று அகத்தியருக்கு அளிக்கும் நிலையில் சிவபெருமான் அகத்தியரைப் பார்த்து, ''இந்தத் தாமரை மாலையானது தாங்கள் புனித நீராடுதல், அருந்துதல் முதலான செயல்களைச் செய்வதற்குக் கருவியாகப் பலித்தல் கூடும். மிகவும் தூய்மை படைத்தவளான பராசக்தியால் அளிக்கப்பட்டதான இந்த மாலையானது எதிர்காலத்தில் தீர்த்த (ஜல) ரூபம் (வடிவம்) அடையும். அந்த நிலையில் அதனால் தடையில்லாத சிறந்த மேன்மை தென்னகத்து உண்டாகப் போகிறது'' என்று திருவாய் மலர்ந்தருளினார். இதனை

***பவிஷ்யந்தி - அநயா ஸாக்ஷாத் பராசக்த்யா பவித்ரயா!***

***நூநம் ஸ்ரேயாம்ஸி பூயாம்ஸி ஸ்ரஜா தீர்த்த ஸ்வரூபயா!! (27)***

***என்னும் தாம்ரபர்ணீ மகாத்மியப் பகுதியால் (அத்.2)*** அறியலாம்.

## மகிழ்ந்தனர் தேவர்கள்

உலகத்தில் ஏற்பட்டிருக்கக் கூடிய கெடுதலைக் காதில் கேட்டு வடமலை தாழ்ந்ததினால் தெற்கே சென்று தவம்செய்ய முடிவெடுத்த நிலையிலிருந்த அகத்திய முனிவர் சற்றே மனக்குழப்பத்துடன் தன் மனைவியுடன் கூடிச் சிவகணம் தந்த மலர்ந்த தாமரை மாலையைத் தன் இரண்டு கைகளால் பெற்றுக் கொண்டார். தொழுதுவாங்கித்

*தலையில் வைத்துக் கொண்டார்; வணங்கினார். அந்த நிலையில் ஆகாயத்திலிருந்து மலர்மழை பொழிந்தது. 'இது நல்லது நல்லதென' முனிவர்களும் தேவர்களும் சித்தர்களும் மகரிஷிகளும் கொண்டாடிப் புகழ்ந்து பேசினார்கள்.*

*அகத்தியர் தாமரை மாலையைதன் தன் மனைவியான லோபாமுத்திரையிடம் தந்தார். உடனே அந்த மாலை மாற்று வடிவம் கொண்டது; மங்கையாயிற்று.*

## (5)

## தாமிரபரணியானது தாமரை மாலை

*பராசக்தியால் பார்வதி தேவிக்கு அளிக்கப்பட்டதும் மிக உயர்வுள்ளதுமான தாமரை மாலையை அவள் திருக்கல்யாணக் காலத்தில் சிவபெருமானுக்கு அணிவித்தாள். அந்தத் தாமரை மாலையைச் சிவபெருமான் உருத்திர கணங்களின் மூலம் கும்ப முனிவரான அகத்தியருக்குத் தந்தார். அவர் உலகத்தில் நேரிட இருக்கும் கெடுதலைக் காதில் கேட்டதால் மனக்குழப்பத்துடன் இருந்த நிலையில் சிவனால் அளிக்கப்பட்ட மலர்ந்த தாமரை மாலையை மனைவியுடன் இருந்து இரண்டு கைகளால் பெற்றுக் கொண்டார்.*

### மகிழ்ந்தனர் தேவர்கள்

*தாமரைமலர்மாலையைதொழுது, வாங்கித்தலைமேற்கொண்டார் அகத்திய முனிவர். அந்த நேரத்தில் ஆகாயத்திலிருந்து மலர்மழை பொழிந்தது. திருக்கல்யாணத்திற்காக கூடியிருந்த முனிவர்களும் சித்தர்களும் மகரிஷிகளும் பெரிதும் சந்தோஷமடைந்தனர். ஆஹா நல்லது நடந்தேறுகிறது எனக் கொண்டாடினார்கள்; புகழ்ந்து பேசினார்கள். அப்போது ஒரு அதிசயம் நிகழ்ந்தது.*

### மாலை மங்கையானது

*அவர்கள் எல்லோரும் சந்தோஷமாகப் பார்த்துக் கொண்டிருந்த நிலையில் அகத்தியர் மனைவியான உலோபா முத்திரையின் கையிலிருந்த மாலை ஒரு அழகிய மங்கையாக மாறியது. இதனை*

***தப்தசாமீ கராகாரா கந காம்பர தாரிணீ***
***மகா மணிகணா கீர்ணா மகுடாங்கத தாரிணீ***

*என்ற தாமிரபரணி மகாத்மிய சுலோகம் (2-32) விளக்கும்.*

*அந்தக் கன்னியின் மேனி புடம்வைத்த தங்கம்போல் தகதகவென ஜொலித்தது. அவள் கழுத்தை நவரத்தின மாலைகள்*

அலங்கரித்தன. கிரீடம், தோள் வளை, கைவளை முதலான எல்லா ஆபரணங்களையும் கொண்டு சர்வாலங்கார பூஷிதையாய்க் காட்சி தந்தாள் அந்தப் பூவை. சிமிழ் போன்ற கொங்கைகள்விளங்க சிற்றிடை உடையவளாய் இருந்தாள் அந்தச் சேயிழை. அவளைப் பார்த்தவர்கள் அதிசயித்தார்கள்; ஆச்சரியப்பட்டார்கள். அவளுடைய அழகுக்கு அடிப்படையாக இருக்கக் கூடிய சுரி குழலைப் பார்த்து மகிழ்ந்தார்கள். சந்தோஷக் கடலில் ஆழ்ந்தார்கள்.

அகத்தியரின் மனைவியும் விதர்ப நாட்டு அரசகுமாரியுமான உலோபமுத்திரைஅந்தக்கன்னிகையைஉச்சிமோந்தாள்;ஆலிங்கனம் செய்து கொண்டாள். ஏழை ஒருவனுக்குப் புதையல்கிடைத்தால் அவன் எப்படி மகிழ்வானோ அதுபோல் அவள் மகிழ்ந்தாள்.

### பெயர்க்காரணங்கள்

தேவர்கள் எல்லாரும் அந்த நதியான மங்கையின் உடற்சிவப்பு நிறத்தைக் கண்டார்கள். அவளைத் 'தாம்ரபர்ணீ' என்று கூறினார்கள். சிலர் 'தாமிரை' என்றார்கள். வேறுசிலர் மணிகளைத் தாங்கி இருத்தலால் அவளை 'மணிகர்ப்பிணி' என்றார்கள். அவளுடைய உத்தமோத்தம குணங்கள் காரணமாக அவளைப் பரை' என்று போற்றிக் கொண்டாடினார்கள்.

தாம்ரபர்ணீயின் பெருமைக்குப் பெருமை சேர்க்கும் விதத்தில் தேவர்கள் பல பரிசுப் பொருள்களைத் தந்தார்கள். அவைபற்றிய விவரம் காணலாமே.

## (6)

## தேவர்கள் தந்த பரிசுகள்

தாமிரபரணி தோன்றியவுடன்தேவர்கள் பெரிதும் மகிழ்ந்தார்கள். அவர்கள் தாம்ரபர்ணீ தேவிக்குப் பல்வேறு பரிசுப் பொருட்களைக் கொடுத்தார்கள் என்ற செய்தி 1905-ல் வெளியிடப்பட்ட தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் மட்டும் உள்ளது.

### மூவர் தந்த பரிசுகள்

முதல் மூவரில் சிவசக்தியாக 'இருக்கக் கூடிய பார்வதிதேவி தன் திருக்கரங்களால் மிகவும் பெருமை பொருந்திய பூமாலை ஒன்றைத் தாமிரபரணிக்குத் தந்தாள். திருமால் பீதாம்பரம் ஒன்றை மேலாடையாக அவளுக்குத் தந்தார். இமயமலையில் இருக்கும் பெரு நீர்நிலைகளில் ஒன்றான மானச தடாகம் என்னும் ஏரியில் மலர்ந்த தாமரை மலர்களால் தொடுக்கப்பட்ட உயரியதொரு தாமரை மாலையைப் பிரமன் அவளுக்குத் தந்தான்.

## மற்றவர் அளித்தன

அங்கே கூடியிருந்த தேவர்களில் பலர் தாமிரபரணி தேவிக்குப் பரிசுகளைத் தந்தார்கள். நீருக்கு அதிபதியாகச் சொல்லப்படுபவன் வருணன். அவன் மிக உயரியதொரு சங்கை தாமிரபரணிக்குத் தந்தான். அது அவள் கையை அலங்கரித்தது. அதுமட்டுமன்றி மூன்று கோடி சிறந்த புண்ணிய தீர்த்தங்களையும் அவளுக்குக் கொடுத்தான்.

செல்வத் திருமகள் லட்சுமிதேவி. அவள் மணிகள் பொருத்தப்பட்ட உயரிய வீணையைத் தந்தாள். கிளியைச் சாத்திரத்தின் அடையாளமாகச் சொல்வதுண்டு. எல்லாவகையான சாத்திரங்களின் ரூபமாக இருக்கும் ஒரு பெண்கிளியைச் சரஸ்வதி தேவி தாமிரபரணிக்குத் தந்தாள்.

## நதிகள் தந்தவை

அங்கு வந்திருந்த நதிகள் போட்டி போட்டுக் கொண்டு தாமிரபரணிக்குப் பரிசுகளைத் தந்தன. கங்காதேவி முத்துமாலை தந்தாள். யமுனை நெய்தல் மாலையை அளித்தாள். சராவதி சீமந்தரேகையில் அணியத் தகுந்த சிந்தூரத்தைக் கொடுத்தாள். காவிரி குங்குமம் அளித்தாள். துங்கபத்திரை கண்களுக்கு மை கொடுத்தாள். புண்ணியமான கோதாவரி கஸ்தூரியும் மையும் அளித்தாள்.

## தோழியர் பதின்மர்

அகத்திய முனிவருடன் தென்னாடு செல்லவிருக்கும் தாமிரபரணியைத் தனியே அனுப்ப மகாமேரு விரும்பவில்லை. பெண் பிள்ளைகளான பத்துப்பேரை தோழியர்களாக உடன் அனுப்பினார் சிவபெருமான் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம். அவர்கள் முக்தா, மணிமதி, பூர்ணாபூர்ணை, கோரை, குமுத்துவவதி, சியாமாவதி, சந்திரசேனை, கடனை, கடகை, அருணை என்ற பெயர் கொண்டவர்கள் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம். இவையனைத்தும் நதிகளாகும்.

## நதிகளாய்த் தோழியர்

இந்தப் பதின்மரில் மணிமுக்தா என்பது மணிமுத்தாறாகும். கோதை என்பது கோதையாறாகும். குற்றாலத்தில் உள்ள மெயின் அருவியாகப் பொழிவது சித்ரா நதி. சியாமா நதி என்பது பச்சையாறு எனவும் ஆத்ரா நதி என்றும் சொல்லப்படுவதாகும். ரமா நதி ராமநதி என்று சொல்லப்படும். அருணை என்பது அடவி நயினார் அணையில் உள்ள நதியாகும். பூரணா பூர்ணை என்று சொல்லப்படுவது காரையாறாகும். கடகை சிவசைலம் மலையின் மேல்புறத்திலும்

கடனை சிவசைலம் மலையிலும் உற்பத்தியாகக்கூடிய ஆறாகும். (பாலா என்ற நதி தனி ஆறாகக் கோதையூரானின் தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் சொல்லப்பட்டுள்ளது. சித்ராநதி மிக இளமையாக தோன்றினாள், ஆகையால் அவளுக்குப் பாலா என்ற பெயருண்டு என்பது திருக்குற்றாலப் புராணத்தால் அறியப்படும் தகவலாகும்.)

பத்துத் தோழியர் புடைசூழ அகத்தியர் மற்றும் உலோபா முத்திரையுடன் பயணப்பட்டாள் தாமிரபரணி தேவி. அந்தநிலையில் அங்கே குழுமியிருந்த சகலவிதமான தேவதைகளுடைய சரீரங் களிலிருந்தும் சக்தி புறப்பட்டது. தாம்ரபர்ணீ என்ற கன்னிகையின் மேல்பிரவேசித்தன. அந்தக் காட்சி அற்புதக் காட்சியாக அமைந்தது. அதன்பின் அகத்தியர் பரமசிவனை வணங்கித் தாமிரபரணியுடன் புறப்பட்டார்.

## அரிய உவமைகள்

தாம்ரபர்ணீ உதயமானதை ஒரு அரிய உவமையின் மூலம் ஜனகாதி முனிவருக்கு விளக்கினார் வியாசர் என்கிறது மகாத்மியம். தேவர்கள் முதலானவர்களால் கொண்டாடப்பட்டுக் கங்காதேவியானவள் பகீரதன் தவத்துக்கு இரங்கித் தேவஸ்தானத்தை விட்டுப் பாரதபூமிக்கு வந்தவள். உலக மாதாவான தாமிரபரணி தேவியானவள் புன்சிரிப்புடன் முனிசிகாமணியுடன் அவ்விடம் விட்டுப் பாரத பூமியின் தென்திசைநோக்கி எழுந்தருளினாள் என்கிறார் அவர்.

அகத்தியர் சந்தன பர்வதத்தில் ஆசிரமம் அமைக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பாரத பூமிக்கு வந்தார். சந்தன பர்வதம் என்று சொல்லப்படுவது மலய மலை எனப்படும் பொதிகை மலையாகும். அந்தநிலையில் முனிவர்கள் சூதமாமுனிவரிடம் இந்தப் புராண வரலாறு எங்களுக்கு அமுதம் போன்று இனிமையைத் தருகிறது. அகத்திய முனிவர் எப்படி மலையப் பர்வதத்துக்குச் சென்றார்? முதலான சிலவினாக்களை எழுப்பினார்கள். அதற்கு முன்னொரு காலத்தில் வேதவியாசர் சுகப்பிரம்ம ரிஷிக்குச் சொன்ன புண்ணிய பூர்வ சரிதத்தைச் சூதமாமுனிவர் விவரித்த செய்தி தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 3-ஆம் அத்தியாயத்தில் உள்ளது.

## (7)

## அகத்தியர் குற்றாலம் வருகை

முன்னொரு காலத்தில் வேதவியாசர் சுகப்பிரம்ம ரிஷிக்குத் திருவாய் மலர்ந்தருளிய புண்ணியமான பூர்வசரிதமே தாம்ரபர்ணீ மகாத்மியமாகும். இந்த மகாத்மியத்தைக் காதால் கேட்டால் போதும்

அஸ்வமேத யாகம் செய்த புண்ணிய பலன்கிடைக்கும் என்று சொன்ன சூதமாமுனிவர், அகத்திய முனிவர் கயிலாயத்திலிருந்து புறப்பட்டு இடையில் தரிசித்த தலங்களை விளக்கி இருக்கிறார்.

## வடநாட்டுத் தலங்கள்

அகத்தியர் சராவதியைத் தாண்டினார்; நரநாராயணர் ஆலயத்தைத் தரிசித்தார்; கேதாரத்தை வணங்கினார்; சோமேசனைத் தொழுதார்; ஹரித்துவாரில் பூஜைகள் புரிந்தார்; அதற்குக் கிழக்குப் பக்கத்தில் தொன்மைக் காலம்தொட்டே இருக்கின்ற பிரம்மவர்த்தம் என்ற பகுதியைத் தாண்டினார். அதன்பின் அயோத்தியையும் குருக்ஷேத்திரத்தையும் கண்டு வணங்கினார். சரயூ நதியைக் கடந்தார். அதன்பின் உஜ்ஜயினியில் கோயில் கொண்டுள்ள மகாகாளரை வணங்கினார்; கோகர்ணத்தைத் தரிசித்தார்; பின்னர் ஸ்ரீசைலத்து எம்பெருமானை வணங்கினார்; அவர் இடைவழியில் கிருஷ்ணா, கோதாவரி, துங்கபத்ரா ஆறுகளைக் கடந்தார். திருப்பதிப் பெருமாளை வணங்கினார்.

## தென்னாட்டுத் தலங்கள்

தென்னகம் வந்த அகத்தியர் பக்தர்களுக்கு அருள வேண்டும் என்ற நோக்கத்துக்காகக் காஞ்சிபுரத்தில் கமல பீடத்தில் வீற்றிருக்கின்ற பராசக்தியான காமாட்சியையும் ஏகாம்பர நாதரையும் வரதராஜ பெருமாளையும் வணங்கினார். கம்பா என்று சொல்லப்படும் மகாநதியைக் கடந்தார். சிதம்பரத்தில் அதிசூக்குமமாக இருக்கும் சிதம்பரேசனை வணங்கினார். மத்தியார்ஜுனம் என்னும் இடைமருதுறையும் ஈசனையும் தொழுதார். பின்னர் மதுராபுரிக்கு வந்தார். அங்கே சுந்தரேசரைரையும் மீனாட்சியையும் தரிசித்தார். அதன்பின் வெகுதூரம் யாத்திரை செய்து மரங்கள் அடர்ந்ததும் நீலநிறமுடையதும் சந்தன மரங்களுக்கு இருப்பிடமான மலயம் என்ற பெயர் பெற்ற மலையைக் கண்டார்.

## மலய மலை வர்ணனை

மலய மலையில் கஸ்தூரியின் மனம் பொருந்திய மந்தமாருதமான தென்றல் வீசிக் கொண்டிருந்தது. சந்தனம், அசோகம், இலுப்பை, மகிழமரம், மருதமரம் முதலான மரங்கள் அடர்த்தியாக நெருங்கிக் கிடந்தன. அந்த மலைக்கு அகத்திய முனிவர் தன் துணைவியுடனும் தாம்ரபர்ணீ தேவியுடனும் விஜயம் செய்தார்.

## மலய மன்னனின் வரவேற்பு

மலய பர்வத ராஜன் அகத்திய முனிவருடைய வருகையை அறிந்தான். தூய்மையான ஆடை முதலானவற்றை அணிந்து அநேக

வேடர்களும் சேவகர்களும் புடைசூழ அகத்தியரை எதிர்கொண்டு அழைத்தான். 'வருக வருக' தேவரீர்க்கு நல்வரவு என்று உரக்கக் கூறினான்; வணங்கினான். அவருடைய பாதத்தில் தன் தலை படும்படி வந்தனம் பண்ணினான்.

அதன்பின் அவன் அகத்திய முனிவருக்குப் பாத்தியம் அளித்தான்; அர்க்யம் சமர்ப்பித்தான்; மதுபர்க்கம் கொடுத்தான். மந்திர விதிப்படி இவற்றைச் செய்தவன் இருகைகளையும் தலை மேல் தூக்கி விண்ணப்பம் செய்து கொண்டான்.

''தங்கள் தரிசனத்தால் நான் சிறப்புற்றவனாகி விட்டேன். புண்ணியமும் பெற்றுவிட்டேன். உங்கள்வரவை நான் செய்த தவப்பயன் என நினைக்கின்றேன்.தங்கள் வருகைக்குக் காரணம் என்ன என்று தெரிந்து கொள்ளலாமா? அடியேன் தங்களுக்குச் செய்ய வேண்டிய காரியங்கள் என்ன?'' என்று பிரார்த்தித்தான். அகத்திய முனிவர் தான் மலயத்துக்கு எழுந்தருள்வதற்கான காரணம் என்ன என்பதை அவனுக்கு விரிவாகச் சொன்னார். அந்தநிலையில்..

## பரசிவன் இட்ட கட்டளை

அகத்திய முனிவரும் தான் வந்த காரணத்தை மலய மலையரச னிடம் விவரித்துக் கொண்டிருந்த நேரத்தில் அங்கே இரண்டு தேவ முனிவர்கள் ஆகாயத்திலிருந்து எழுந்தருளினார்கள். தும்புரு என்பதும் பர்வதம் என்பதும் அவர்கள் திருநாமங்கள். அவர்கள் முனிவனையும் அரசனையும் துதித்து மகிழ்ச்சியுடன் பரமசிவன் இட்ட கட்டளையைத் தெரிவித்தார்கள்.

''பர்வத ராஜனே! நீ சென்ற ஜன்மத்தில் செய்த பூஜையின் பலனாகத் - தவத்தின் காரணமாக இப்போது பெரும் புண்ணியவானாக இருக்கிறாய். மங்களத்தைத் தரக்கடியதும் நதிகளில் சிறந்ததுமான தாமிரபரணியானவள் சிவன் அருளால் அகத்திய முனிவரால் இவ்விடத்துக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறாள். இவளை உனக்குப் புத்திரியாக ஏற்க வேண்டியது. இவள் தீர்த்த ரூபம் பெறும்போது உனக்குச் சிறந்த மேன்மை உண்டாகப் போகிறது'' என்று அவர்கள் இறைவனின் கட்டளையைத் தெரிவித்தார்கள். அகத்திய முனிவர் மகிழ்ந்தார். மலை ராசனும் அவளை மகளாக எற்றான். அப்போது ஆகயத்திலிருந்து மலர்மழை பொழிந்தது.

## அகத்தியர் செய்த பூஜை

மூன்று உலோகங்களும் நன்மையை அடைவதற்காக அமுதமயமான சிவலிங்கம் ஒன்று அந்தநேரத்தில் அங்கே

தோன்றியது. அகத்திய முனிவர்அதில் பரமசிவனை நிறுவினார்; பூஜை செய்தார்.

அவரைப் போலவே மலய ராஜனும் இறைவனை இன்பத்தை விளைவிக்கும் வகையில் மகத்தான பூஜை செய்தான். இதனால்மகிழ்ந்த சிவபெருமான் பார்வதி தேவியுடன் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டார். அகத்திய முனிவரை நோக்கி, ''முனிவரே உம்மால் பூமி சமம் செய்யப்பட்டதால் உலகத்தில் உள்ள உயிர்கள் காப்பாற்றப்பட்டன. அதனால் மகிழ்ந்தோம். இவ்விடத்துக்கு அருகில் நமது வாசஸ்தலம் இருக்கிறது. அங்கே விசித்திரமான சித்ரசபையும் உள்ளது. மலயராஜனுடன் அங்கு சென்று நம்மையும் பார்வதி தேவியையும் பூஜை செய்து அந்த இடத்து வரலாறுகளைக் கேட்டு மகிழவேண்டும்'' என்றார்.

அதன்பின் ''நான்கு வேதங்களும் பர்வதத்தின் வடிவைப் பெற்று நான்கு பக்கங்களிலும் இருக்கின்றன. நடுவிலுள்ள மலையான பொதிகை மலையில் குப்திசிருங்கம் என்ற கொடுமுடி இருக்கிறது. அது நம்முடைய பிரணவாகார அதாவது ஓங்கார க்ஷேத்திரம் ஆகும். அந்தப் பகுதிக்கு அருகில் தாங்கள் நிலையானதொரு ஆசி ரமத்தை அமைத்துக் கொண்டு தங்க வேண்டும். தாமிரபரணியும் தங்களுடன் இருக்க வேண்டும்'' என்று அருள்செய்த சிவபெருமான் பர்வதராஜனிடம், ''உன்மகளான தாமிரபரணியால் விசேஷமான மகிழ்ச்சி உங்களுக்கெல்லாம் கிடைக்கப் போகிறது'' என்றும் சொன்னார்.

அன்று முதல் அந்தப்பகுதி 'தேவதத்தம்' என்ற பெயருடன் வழங்கப்பட்டது. தேவதத்தத்தில் இருந்த மலையான தேவ தத்தாச்சலத்தில் சிவபெருமானைப் பூஜிப்பவர்களுக்கு எல்லா நன்மைகளும் கிடைக்கும் என்று அருளினார். மலய ராஜனுடைய மனைவியான கந்தவதி என்பவள் தாமிரபரணியைப் புத்திரியாகப் பெற்றது இமவானுடைய மனைவியான மேனை கங்கையைப் புத்திரியாகப் பெற்று ஒப்பற்ற மகிழ்வடைந்ததற்குச் சமமானதாக இருந்தது என்கிறது மான்மியம். அதன்பின் அவர்கள் திரிகூடம் என்று சொல்லப்படும் பகுதிக்குச் சென்றார்கள்.

(8)

## குற்றாலத்தில் அகத்தியர்

திரிகூடம் என்னும் சிறப்பான தலம். அங்கே உள்ள சித்ரசபை என்னும் நடராஜ சபைக்கு அகத்தியர் சென்றமை, தரிசித்தமை,

அந்தத் தலத்தில் உள்ள விஷ்ணு விக்ரகத்தைச் சிவலிங்கமாகச் செய்தமை, கோபுர வாசலுக்கு கிழக்குப் பக்கத்தில் இருக்கும் தரணிபீடத்தையும், வேத விருட்சத்தையும் பராசக்தியையும் வணங்கியமை ஆகிய செய்திகளைத் தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் உள்ள 4,5-ஆம் அத்தியாயங்கள் விளக்கியுள்ளன.

## சித்ர சபையில் வழிபாடு

சித்ர சபையை வழிபட வேண்டும் என்பது சிவபெருமான் அகத்தியருக்கு இட்ட கட்டளைகளில் ஒன்று. அதன்படித் திரிகூடம் சென்ற அகத்தியர் நாற்புறமும் ஒளிமயமான சித்ரச பையை அடைந்தார். அங்கே தாண்டவம் செய்து கொண்டு ஒளிவீசும் நடராஜப் பெருமானைத் தரிசித்தார்; பெருமகிழ்வுற்றார்; திருவைந்தெழுத்து மந்திரம் ஓதிப் பரமசிவனை வழிபட்டார். அவர் சதருத்திரீயம் என்ற மந்திரத்தினால் ஈஸ்வரனைத் துதித்தார். அதன்பின் அவர் சிவானுக்கிரகம்பெற்றுச் சற்றுத் தென்பக்கத்தில் மரம் ஒன்றின் அடிப்பகுதியில் உள்ள விஷ்ணு விக்ரகத்தைச் சிவலிங்க வடிவாகச் செய்தார். அகத்தியர் விஷ்ணுவை சிவமாக்கிய வரலாறு வேறு ஒரு பகுதியில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

## தரணிபீடம்

தரணி பீடம் பற்றித் திருக்குற்றாலப் புராணம் விரிவாகச் சொல்லவில்லை. விஷ்ணுவின்திருமேனியைச்சிவலிங்கமாக்கியபின் ஆகாய வாணியின் கட்டளைப்படி வடக்குப் பகுதியில் ஒரு மேட்டில் பொன்னிறத்தைப் பழிக்கும் திருமேனியுடைய பராசக்தி தோன்றினாள். இருவரும் அவளைச் சாக்ஷியாக இருக்க வேண்டும் என்று வேண்டினர். வாதிட்டனர். அந்த வாதத்தில் அகத்தியர் ஜெயித்தார். மத்தியஸ்தராகத் தரணி பீடத்தின் மேல் பீடிகா தேவியாக எழுந்தருளிய பராசக்தி வாசஸ்தலமே இந்த பீடம். இந்தச் செய்தி இன்னொரு பகுதியில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

திரிகூட மலைக்கு அந்தப்பெயர் வரக்காரணம் என்ன? அங்கே பராசக்தி நிலைகொள்ள என்ன காரணம்? என்ற விவரங்களைச் சுகப்பிரம்ம ரிஷிக்கு விவரித்த செய்தி 5-ஆம்அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதுபற்றிய விவரம் அறிதற்பாவது.

(9)

# திரிகூடமும் பராசக்தியும்

முன்னொரு காலத்தில் தாவர சங்கம உருவமாய் இருக்கக்கூடிய அண்டகோளங்கள் அனைத்தும் பிரளயத்தில் மறைந்திருந்தன;

எல்லா இடத்திலும் இருள் பரவியிருந்தது. அப்போது, எந்தத் தொழிலும் செயல்படாத நிலை நிலவியது. அந்தக் காலக்கட்டத்தில் பிரமம் என்று கூறப்படும் பரம்பொருள் நாத சொரூபத்தில் திடீரென உண்டானது. அப்போது அங்கே பராசக்தி வெளிப்பட்டாள்.

## பராசக்தியின் இயல்பு

பராசக்தி வெண்மை, சிவப்பு, கருமை என்னும் மூன்று நிறங்கள் உடையவளாய் இருந்தாள்; சத்துவம், ரஜஸ், தமோகுணங்கள் என்னும் முக்குணம் பொருந்தியவளாய் இருந்தாள். மற்றொருவனால் உண்டாக்கப்படாதவளாக அதாவது சுயம்புவாகத் தோன்றினாள். மூவுலகுக்கும் தாயாக அற்புதமாகக் காட்சியளித்தாள். மாத்ருகா ரூபிணியாக இருந்தாள். இப்படிப் பெருமைகள் பல பெற்றவளான பராசக்தி சூக்சும ரூபிணியாகத் தோன்றினாள்.

## சக்தி ஆற்றியன

பராசக்தி நுண்ணுருவிலிருந்து நீங்கி உலக நன்மைக்காகச் சிறந்த தொரு உடலைப் பெற்றுக் கொண்டாள். தன் மாயா சக்தியினால் சிருஷ்டி, திதி, சம்ஹ்ருதி என்ற மூன்று சக்திகளால் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். அவள் சிருஷ்டியை நடத்தும்படிப் பிரமதேவனையும் உலகைக் காக்கும்படி விஷ்ணுவையும் அழித்தலைச் செய்யும்படி உருத்திரனையும் நியமித்தாள். அம்மூவரும் அவள் கட்டளைப்படியே செயல்பட்டு வந்தார்கள்.

## திரிகூடமலை

அன்னை பராசக்தியால் தொழில்படுத்தப்பட்ட பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்கிற மூவரும் சேர்ந்திருந்தபடியால் அதுகாரணமாக அவர்கள் இருந்த இம்மலை திரிகூடம் என்று பெயர் பெற்றது. அந்த மும்மூர்த்திகளுக்காக லோக மாதாவான பராசக்தி திரிவேத அதாவது மூன்று வேதங்களின் ரூபமாக இவ்விடத்தில் (பலாவாக) வீற்றிருந்த அருள்புரிந்து வரும் காரணத்தினாலும் இந்த மலை திரிகூடம் என்று சொல்லப்படுகிறது.

எல்லா யுகங்களையும் இந்த உலகத்துக்கு வேண்டிய கட்டுப்பாடுகளைச் செய்து இந்தத் தலத்தில் தன் ஆற்றலைச் செலுத்தித் தானே சுயம்புவாக மும்மூர்த்திகளாக இருப்பதைத் தெரிவிக்கும் காரணத்தினாலும் இந்த மலை திரிகூடம் என்று சொல்லப்படுகிறது என்ற காரணங்கள் தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

## மாயையில் உருவான நகரம்

உதும்பரன் என்றொரு அசுரன் முன்னொரு காலத்தில் இருந்தான். அவன் மருமகன் நிசும்பாசுரன் என்பவனாவான். அவனும் அவன் தம்பியுமான சும்பாசுரன் என்பவனும் மற்றச் சகோதரர்களும் இறந்து போனார்கள். அவர்களுள் உதும்பராசுரன் என்பவன் போர்க்களத்திலிருந்து பயந்து ஓடினான். மலைய பர்வதத்தை அடைந்தான். அசுர சிற்பியான மயனிடம் தான் வசிக்க ஒரு பெரிய கட்டடம் கட்டித்தர வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அசுரத் தச்சனும் தன் மாயா சக்தியால் மலைய பர்வதத்தினுடைய அடிவாரத்தில் ஒரு பெரிய குகையை அமைத்தான். அதில் ஒரு நகரத்தை உண்டுபண்ணினான்.

மயன் என்னும் அசுரத் தச்சன் மாயையில் உருவாக்கியதும் பகைவரால் வெல்ல முடியாததுமான அந்த நகரத்தில் பாதுகாப்பாக வாழ்ந்த உதும்பராசுரன் இரவு நேரத்தில் மாறுவேடத்தில் வெளியில் வருவான்; முனிவரையும் மக்களையும் துன்புறுத்துவான். இதனால் பலரும் இறக்கவே பாதிக்கப்பட்டவர்கள் துர்காதேவியைச் சரண டைந்தனர்.

## துர்கை அருளுதல்

அசுரனால் பாதிக்கப்பட்ட அனைவரும் துர்காதேவியை உள்ளம் உருகத் துதித்தனர். பராசக்தியைப் பலவாறாகப் பிரார்த்தித்தனர். எங்களைக் காத்தருள வேண்டுமென்று வேண்டினர். அன்னையைப் புகழ்ந்தனர். அவள் திருவடிகளை வணங்கினர். அவர்களுடைய பக்திக்கு இரங்கிய பராசக்தி அங்கே தோன்றினாள்.

அங்குத் தன்னை வழிபட்டவர்களை நோக்கி ''நான் தங்களுக்குச் செய்ய வேண்டிய என்ன? தங்கள் விருப்பத்தைக் கூறினால் முடித்துத் தருகிறேன். மன வருத்தம் கொள்ள வேண்டாம்'' என்று அருளினாள். அந்த நிலையில் அனைவரும் மீண்டும் அவளை 'ஜயஜய' எனப் போற்றித் துதித்தார்கள். உதும்பரன் என்ற அசுரனால் இரவு நேரங்களில் ஏற்படக்கூடிய தொல்லைகளை விவரித்தார்கள். ''அவனைக் கொன்று எங்களுக்கு அருள் செய்ய வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். துர்காதேவியும் அவ்வாறே செய்கிறேன் என்று வாக்களித்தாள்.

## அசுரனின் அழிவு

பராசக்தி மாயாசுரனுடைய மாயையைக் கெடுத்தாள்; நிலவறையைத் தோண்டினாள்; அசுரர்கள் இருந்த குகையில்

புகுந்தாள்; சிங்கநாதமிட்டாள்; ஓசை கேட்ட அசுரர்கள் இடி விழுந்தாற்போல் அதிர்ச்சியடைந்தனர்.

துர்கையைச் சூழ்ந்துகொண்டு ஆயுத மழையைப் பொழிந்தனர். அவர்கள்ஏவியஆயுதங்களையெல்லாம்தடுத்தெறிந்தாள்;தகர்த்தாள்; எண்ணத்தொலையாத ஆயிரக்கணக்கான யானைகளையும் கோடிக் கணக்கான குதிரைகளையும் பிரளய காலத்துத் தீயைப்போல விழுங்கி அழித்தாள். ஒரு முகூர்த்த காலத்துக்குள்ளேயே அந்தக் குகையில் இருந்த அசுரர்கள் அனைவரும் அழிந்து போனார்கள். குகை சூனியமாயிற்று.

இறந்த அசுரர்களில் 2,500 பேர் பராசக்தியிடம் பக்தி செலுத்தினார்கள். அவளும் அவர்களுக்கு அருள் செய்தாள். அவர்கள் வெல்ல முடியாத மகா பூதகணங்கள் ஆனார்கள். அவர்கள் துர்காதேவியால் க்ஷேத்திர பாலகராக நியமிக்கப்பட்டார்கள். அதுமுதல் அந்தக் குகை சித்தர்களுக்கான இருப்பிடமாயிற்று.

நான் தங்களுக்கு நன்மை தருவதற்காக இங்கேயே வசிப்பேன் என்றாள் பராசக்தி. அதன்படி அவள் திரிகூடமலையில் வசித்துவருகிறாள்.

### விசேஷ நாமங்கள்

அதுமுதல் இந்த குகையில் சித்தர்கள் நிறைந்திருப்பதால் 'சித்த நகரம்' என்ற பெயர் உண்டு. செண்பகராண்யத்துக்கு அருகில் துர்காதேவி அருள்செய்து வருகிறாள். எனவே இந்தப் பகுதிக்குச் 'செண்பகராண்யம்' என்றும் செண்பகாடடவி என்றும் பெயர் உண்டு. இங்குள்ள தேவிக்குச் செண்பகாதேவி என்பது திருநாமம் என்று கூறிய முனிவர் சித்திர நதி தோன்றிய வரலாற்றை 6-ஆம் அத்தியாயத்தில் விவரித்துள்ள விவரம் வருமாறு.

## (10)

## உருவானது சித்ரா நதி

தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 6-ஆம் அத்தியாயத்தில் சித்ரா நதி உருவான வரலாறு சொல்லப்பட்டுள்ளது. திருக்குற்றாலத்தில் உள்ள அருவிகளில் தலையான அருவியாக வெளிப்படும் திருநதி இது. சிற்றாறு என்றும் இதைச் சொல்வார்கள்.

### துயிலெழுப்பினார் அகத்தியர்

உறங்குவதும் விழிப்பதும் மனிதர்களின் இயல்பு. அந்த இயல்பினைத் தெய்வத்துக்கும் உரியதாக்கி துயில் கொள்ள

அனுப்புதலும் காலையில் துயில் எழுப்புதலும் சம்பிரதாய வழிபாடாக அமைந்துவிட்டன. சுப்ரபாதம் பாடுவதும் திருப்பள்ளியெழுச்சிப் பாடுவதும் இந்த அடிப்படையில்தான்.

அதுபோலவே தாமிரபரணியையும் அகத்தியர் துயில் எழுப்பினார் என்று சொல்கிறது தாமிரபரணி மகாத்மியம். ஒரு ஐந்து ஆறு சுலோகங்களில் தாமிரபரணியைத் துயில் எழுப்புகிறார் அகத்தியர்.

**அம்ப தாம்ரெள மகாதேவி லோகானுக்ரஹ காரிணி**

**சுப்ரபாதா நிசாக்ருஸ்நா பிரபூததா பவ சோபநே**

மங்களதேவியே! இரவு கழிந்துவிட்டது; ஆதிபராசக்தியின் கழுத்தில் அணிந்திருந்த பொற்றாமரை மாலையே! மங்களதேவியே! நித்திரை தெளிந்து எழுந்தருள்க.

**அநாதிஸாம்பவீ கண்ட கனகாம் பூஜமாலிகெ**

**மகாமணிப் ரசூர்மாத: பிரபூததா பவ சோபநே**

ஆதியற்றவளான பராசக்தியின் கழுத்தில் அணிந்திருந்த பொற்றாமரை மாலையே! நவரத்தினங்களுக்கு இருப்பிடமான தாயே! மங்களதேவியே! நித்திரை தெளிந்து எழுந்தருள்க.

**ஸம்கூசத் கைரவம் ப்ருங்காவிஹாய க்ருபநம் யத:**

**உத்புல்ய நலிநீம் யாந்தி பிரபூத பவ சோபநே**

வண்டுகளெல்லாம் குவிந்து கொள்கின்ற நெய்தல் மலர்களை விட்டுவிட்டு மலர்ந்த தாமரை மலர்கள் நிறைந்த தடாகத்துக்குச் செல் கின்றன. பொழுது விடிந்துவிட்டது. ஆதலால் நித்திரை தெளிந்து எழுந்தருள்க.

**கெளரீ குதாச்ச லோதம்ச நிர்ஜர ஸ்ரீவிடம்பிநி**

**தீர்த்தாநாம் தீர்த்த தெரூபே ப்ரபுதா பவ சோபநே**

பார்வதியின் ஸ்தனங்களாகிய பர்வதங்களின் அறிவியின் அழகைப் பழித்திருந்த தாயே! புண்ணியத்தைத் தரும் தீர்த்தங்களுக்குத் தூய்மையைத் தருபவளே; உருவமற்றவளே! நித்திரை தெளிந்து எழுக.

**சிவசக்தி ப்ரதெ புண்யை விஷ்ணு சகத்தி பிரவாகிநி**

**பிரம்ம சக்தி ரஸாஸி துவ முக்தி ஸம்ப்ரத வாஹிநி**

அமுத மயமான வெள்ளத்தை உடைய புண்ணியவதியே! விஷ்ணு பக்தி என்னும் பிரபாகத்தையும் பிரம்மபக்தி ஆகிய சுவையையும் உடையவளாய்ச் சிவபக்தியாகிய பயனை அளிப்பவளாகிய நீ திரு மூர்த்தி சொரூபிணி உலக நன்மைக்காக நித்திரை தெளிந்து எழுக.

*அன்னதா வரதா பூரி புண்யதா மஜ்ஜநான் ந்ருணாம்*

*த்வமமெவ பரமா ஸக்தி: பிரஸீத மலயாத் மஜெ*

உன்னிடம் குளிப்பவர்களுக்குப் புண்ணியத்தையும் தந்து அன்னத்தையும் அளிக்கிறாய். ஆதலால் பராசக்தியாகிய நீதான் அருள்செய்ய வேண்டும் என்றெல்லாம் துயில் எழுப்பினார் அகத்தியர். அவளும் எழுந்தாள்.

## ரத்தினத்தில் தோன்றியவை

உறக்கம் காரணமாகக் கலங்கியிருந்த கண்களோடு படுக்கைவிட்டு மெல்ல எழுந்தாள் தாமிரபரணிதேவி. அந்த நிலையில் அவளுடைய தோழியரும் மெல்ல மெல்ல வெளிப்பட்டார்கள். தங்கத்தினைப் பழித்த அழகிய உடல்; அதிலமைந்த பாதங்களோ தாமரை மலர்களைப் பழிக்கும் திருவடிகள். அவள் பாதங்கள் கட்டிலிலிருந்து பூமியில் பட்டவுடன் அவள் பாதத்திலிருந்த சலங்கையிலிருந்த நவரத்தினங்கள் நாலாபக்கமும் சிந்தின.

தூய்மையான நவமணிகள். அந்த மணிகளில் ஸ்ரீதாமிரபரணியின் திருவுருவங்கள் பிம்பங்களாகத் தென்பட்டன. அருகிலுள்ள பொருளைக் காட்டுவது பளிங்கின் இயல்பல்லவா? அந்த ரத்தினங்களில் ஒன்றில் காணப்பட்ட தன்னுடைய அழகிய நிழல் உருவை அழைத்தாள் தாமிரபரணி. அந்த உருவத்தைப் பார்த்துச் சிரித்தாள். அவளை நோக்கி ''வருக பெண்ணே வருக கல்யாணியே வருக நீ இம்மாமுனிவனுடைய ஸ்நானத்துக்காகவும் பாணத்துக்காகவும் பிரவாரூபிணியாகத் தெளிந்த நீருடன் ஒரு நதியாகத் தோன்ற வேண்டும்'' என்று கேட்டளையிட்டாள். அருகில் இருந்த இன்னும் இரு நிழல் உருவங்களைப் பார்த்து ''நீங்கள் அவளுக்குத் தோழியாகுங்கள்'' என்று கட்டளையிட்டாள்.

தாமிரபரணி உத்தரவிட்டபடியே நவரத்தினங்கள் இருந்த நிழல் உருவங்கள் மூவரும் ''அப்படியே செய்கிறோம்'' என்றார்கள். தாமிரபரணியை வலம்வந்தார்கள். நீர்வாழ்வு உயிரினங்கள் பலவற்றுடன் நெடிய சுழிகள் உடையவராய்ப் பேரலைகளுடன் திரிகூட க்ஷேத்திரத்தின் மத்தியிலிருந்து மெதுவாகப் புறப்பட்டார்கள், அகத்திய முனிவரின் திருவடி மலர்களையும் அவர் மனைவி லோபமுத்திரையின் பாதங்களையும் கழுவினார்கள். லோபா முத்திரையின் பாதங்களில் இருந்த செம்பஞ்சுக் குழம்பினால் சிவந்த நிறம் அடைந்தார்கள். அந்நிலையில் தேவர்களும் தெய்வங்களும் அகத்திய முனிவரைத் துதித்தார்கள்; மலர்மழை பொழிந்தார்கள். அதுவே சித்ரா நதி என்கிறது தாமிரபரணி மகாத்மியம்.

### பெயர்க்காரணங்கள்

இந்த நதி பல்வேறு நிறங்களுடையதாய் சித்திரம் போல் தோன்றியதால் இதற்கு சித்ரா நதி என பெயர் சூட்டினார்கள். இந்த மகாநதி சித்திரை மாதம் சுக்லபட்சத்தில் சந்திரன் சித்திரை நதியோடு கூடியிருக்கும் நேரத்தில் அதாவது சித்ராபவுர்ணமி நாளில் தோன்றியதால் சித்ரா நதி எனப்பட்டது என்பது இன்னொரு காரணம்.

இவள் சிறுமிப் பருவம் உடையவளாய் தோன்றியதால் பாலநதி என்ற பெயரும் சித்ரா நதிக்கு உண்டு. இதைச் சிற்றாறு என்றும் சொல்வார்கள்.

இந்த நதியுடன் தோன்றிய இரண்டு நதிகளில் ஒருத்திக்குச் சுக்கிரை என்றும் இன்னொருத்திக்கு மந்தினி என்றும் பெயர். இவ்விரண்டு நதிகளும் செங்கோட்டைக்கு அருகில் செல்லும் ஆறுகளாகும். அந்த ஆறுகளில் முதலாவது கும்பாருட்டி என்றும் இரண்டாவது பாலாறு என்றும் அழைக்கப்படுகின்றன.

### அகத்தியர் பூஜை

சித்ராநதி தோன்றிய நேரத்தில் திரிகூடவாசியான சிவபெருமான் பெரியதொரு லிங்கத்திலிருந்து வெளிப்பட்டார். அனைவருக்கும் தீர்த்தம் வழங்கி அருள்செய்தார். அச்சிவ சந்நிதானத்தில் அதாவது பழைய குற்றாலத்தில் இம்மகாநதியில்அகத்தியர் விதிப்படி நீராடினார்; நீர்க்கடனாற்றினார்; சிவனை பூஜித்தார்; அந்தணருக்கு அன்னம்பாலித்தார்; அதன்பின் உணவருந்தினார் என்று கூறும் இந்த அத்தியாயத்திலேயே அழுகுணியாறு தோன்றிய வரலாறு சொல்லப்பட்டிருக்கிறது. அதுபற்றிய விவரம் அடுத்தவாரம்...

## (II)

## கண்ணீரில் பிறந்த நதி

பழைய குற்றாலத்தில் இரவினைக் கழித்தார் அகத்தியர். மறுநாள் காலை தும்புரு என்ற முனிவருடனும் பர்வத மாமுனிவருடனும் சேர்ந்து சித்ரா நதியைத் தாண்டினார்; காடுகளை கடந்தார். அப்படிச் செல்லும் வழியில் கொடும் காட்டில் மத்தியில் கொடூரமான அழுகை ஒலி தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது.

### குந்தளையின் கதை

அழுகை ஓசை கேட்ட திசைநோக்கிச் சென்றார் அகத்தியர். ஒரு பேரழகி; அருவிபோல் கண்களில் நீர் பொழிய வெட்கத்துடன் அழுது அரற்றிக் கொண்டிருந்தாள்; அனாதையாய் நின்று துக்கக்

கடலில் விழுந்து கிடந்த அவளைக் கண்டாள் தாமிரபரணி; மனமிரங்கினாள். அவள்மீது அன்பு பொழிந்தாள். "பெண்ணே நீ யார்? ஏன் அழுது கொண்டிருக்கிறாய்? உன்னுடைய துக்கத்துக் காரணமென்ன? துன்புற வேண்டாம்" என்று அமுத மொழியால் அவளை வினவ அந்த நிலையிலேயே ஓரளவு துக்கம் தணிந்த அவள் தேவியிடம், "தாமிரபரணித் தாயே, நான் காச்யப முனிவனின் மகள். குந்தளை என்பது என் பெயர். நான் சுமேதஸ் என்ற முனிவனின் மனைவியாகஇருந்தேன். நெடுங்காலம் அவருடன் இல்லறம் நடத்தினேன்.

யாத்திரையில் இந்தப் பகுதிக்கு வந்த நேரத்தில் ஏதோவொரு கொடிய ராட்சசன் வந்தான்; என் கணவனைக் கொன்றான்; என்னையும் கொல்வதற்காக இரண்டு கைகளால் என் கூந்தலைப் பிடித்து இழுத்தான்; கற்பின் காரணமாக அவன் எரிந்து சாம்ப லானான்.

நான் என் கணவனுக்கு உத்தரகிரியை செய்வதற்காகச் சிதையை உண்டுபண்ணினேன்; அதில் அவரைக் கிடத்தினேன்; தீயை நான்குபுறத்திலும் கொளுத்திவிட்டுக் கொழுந்துவிட்டு எரியும் தீயில் உடன்கட்டை ஏற முற்பட்டேன். அப்போது அந்தச் சிதையிலிருந்த அக்னிதேவன் மறைந்துவிட்டான்.

அந்நேரத்தில் ஆகாயவாணி "உனக்கு நன்மை ஏற்படட்டும்" என்று அருள்செய்தது. அதன்பின் நான் உடன்கட்டை ஏறும் முடிவைக் கைவிட்டேன். என் துக்கத்தை நினைத்து அழுது புலம்பிக் கொண்டிருக்கிறேன். நான் முற்பிறவியில் செய்த நன்மையால் உங்களைக் கண்டேன். நீயே என் தாய்; நீயே சரணம் என்றெல்லாம் சொல்லித் தாமிரபரணி தேவியைச் சரணடைந்தாள் அவள்.

அதன்பின்னும் அழுத குந்தளையை கண்டு மனமிறங்கினாள் மலையரச மகளான தாமிரபரணி. அவளை ஆரத்தழுவினாள்.

### நதி ஒன்று உருவானது

தாமிரபரணி தேவி குந்தளையைத் தழுவிய உடனேயே சஞ்சீவி மூலிகை காற்றுப்பட்ட பிணம் எழுவதைப் போல சிதையிலிருந்து எழுந்தான் சுமேதஸ் என்ற முனிவன். ஆகாயத்தில் இருந்து தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். அகத்திய முனிவர் லோபமுத்திரை, சுமேதஸ் முதலியோர் தாமிரபரணியைப் புகழ்ந்தார்கள்.

குந்தளையின் கண்ணீரிலிருந்து உருவான நீர் ஒருநதியாகப் பிரவாகித்தது. அது தாமிரபரணியின் அனுக்ரகத்தாலும்

அகத்தியர் அருளாலும் தென்திசையில் இன்றும் நதியாக ஓடிக் கொண்டிருக்கிறது. அந்த நதிக்கு அழுகுணி ஆறு என்று பெயர். இது தென்காசிக்கு அருகில் ஓடும் சிறுநதியாகும். ரோதனாநதி என்பது வடமொழிப் பெயர்.

அதன்பின் அகத்தியர் சிவசைலத்துக்குச் சென்றார் அங்கே இருந்தது அத்ரி முனிவரின் ஆசிரமம். அங்கே வருண புத்திரனாகிய வஜ்ராங்கனுக்குச் சாபவிமோசனம் கிடைத்தது. அதுமட்டுமன்றிச் சிவசைலத்தில் இரு நதிகள் தாமிரபரணியின் அருளால் உருவாயின. அவை பற்றிய விவரம் அறிதற்குரியது.

(12)

## வஜ்ராங்கனுக்குச் சாபவிமோசனம்

சிவசைலத்தின் வடக்குப் பாகத்துக்குத் தோரணாசலம் என்று பெயர். அதற்கு தென்பக்கத்தில் இரண்டு கல்தொலைவில் இருந்த பகுதி சிவசைலம். இங்கே அத்திரி முனிவருடைய ஆசிரமம் இருந்தது. அந்த ஆசிரமத்துக்கு அகத்தியர் எழுந்தருளிய காலத்தில் வஜ்ராங்கதன் என்பவனுக்குச் சாபவிமோசனம் கிடைத்த செய்தியைத் தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 7-ஆம் அத்தியாயம் விளக்குகிறது.

### வருணனின் புதல்வன்

முன்னொரு காலத்தில் சாரங்ககேதன் என்றொரு காந்தர்வ அரசன் இருந்தான். அவனுக்கு மாலதி என்றொரு அழகிய மகள் இருந்தாள். அவளை வருணன் திருமணம் செய்து கொண்டான்; நீண்டகாலம் அவளுடன் வாழ்ந்தான். அவள் தன் கணவனுக்குச் சமமான பலம் படைத்த ஐந்து ஆண் மக்களைப் பெற்றாள்.

அவர்களுள் மூத்தவன் வஜ்ராங்கதன். பூதிதட்சன், பிரபானு, மணிமான், வரன் என்பவர் மற்ற நால்வர். இவர்கள் தர்மநூல்களை நன்கு கற்றார்கள். பொது மக்களால் பாராட்டப் பெற்றார்கள். பிரமன் முதலான தேவர்களால் ஆசிர்வதிக்கப்பட்டார்கள். தம் பெற்றோருக்குப் பெருமை சேர்க்கும் வகையில் வாழ்ந்து வந்தார்கள்.

### வஜ்ராங்கதனின் பயணம்

மூத்தவனான வஜ்ராங்கதன் பெரும் பலசாலி. காந்தர்வனான அவன் இசையில் வல்லவன்; வீணை மீட்டுவதில் சாமர்த்தியசாலி. அவன் ஒருசமயம் விமானத்தில் ஏறிப் பிரமலோகம் சென்றான். தன் வீணாகான விசேஷத்தை உணர்த்துவதற்காக ஆகாயமார்க்கமாகப் புறப்பட்டான்; சூரிய உலகத்தைத் தாண்டினான்; பல்வேறு

கிரகங்களையும் நட்சத்திரங்களையும் கடந்தான்; சிம்சுமார சக்க ரத்தைத் தாண்டினான்; சப்தரிஷி மண்டலத்தைக் கடந்து துருவ மண்டலத்தை வலம்வந்து மறுபடியும் ஆகாயத்தில் சென்றான்.

அந்தநிலையில் அவனுக்கு முன்னால் சென்ற விமானத்தில் ஸ்தபகாவதி என்றொரு அழகிய பெண்ணுடன் மணிகாந்தன் என்னும் பெயர் கொண்ட காந்தர்வ அரசன் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தான். அவனைப் பார்த்து வஜ்ராங்கதன், "மன்னனே! நீ காந்தர்வ அரசனாக இருக்கிறாய்; நல்ல குலத்தவனாகவும் விளங்குகிறாய்; உன்னுடன் விமானத்தில் அமர்ந்துள்ள அந்தப் பெண் என்னுடைய ஆசைநாயகி; பூங்கொத்துப் போன்ற கொங்கைகளை உடையவளாய் இருப்பதால் அவளுக்கு ஸ்தபகாவதி என்று பெயர். இவள் கஞ்ச ளன் என்னும் இயக்கனின் மகள். இவளை நீ எங்கே கூட்டிச் செ ல்கிறாய்? இந்த அழகியை என்னுடன் விட்டுவிடு; இப்படிப்பட்ட தீயசெயல்களைச் செய்யலாகாது" என்று சினந்து கூறினான்.

இதுகேட்ட மணிகாந்தன், "வஜ்ராங்கதனே! என்னிடம் கோபம் கொள்ளாதே. இவளை நீ சாஸ்திர முறைப்படி மணம்செய்து கொள்ளவில்லை; காந்தர் மணம்தான் செய்து கொண்டாய்; இது நீ அறிந்த செய்திதான். உன்னைப் போலவும் என்னைப்போலவும் இவளுக்குப்பல ஆசை நாயகர்கள் உண்டு. இவள் எவனை விரும்புகிறாளோ அவனே இவளுக்குக் கணவன் என்பது உனக்குத் தெரியாதா? இது தேவகுலத்து நியதியாயிற்றே; தெய்வத்தால் ஏற்பட்டவர்கள்தம் மனம்போல வாழலாமே" என்று பதிலுக்குச்சத்த மிட்டான்.

வாக்குவாதம் தடித்தது. இருவரிடையில் பெரும் போர் மூண்டது. வஜ்ராங்கதன் மணிகாந்தனை வென்றான்; அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு வருணலோகத்துக்குத் திரும்பினான்.

## பிரமனின் சாபம்

மணிகாந்தன் மீண்டும் பிரமலோகம் சென்றான். அவன் உடல் சோர்ந்திருந்தது; முகம் வாடிக்கிடந்தது; மனம் கலங்கிய நிலையில் வந்த மணிகாந்தனை பார்த்தார் நான்முகன். "என்ன நேர்ந்தது" என்று கேட்டார். அதுமட்டுமன்றிப் பெண்களின் மீது காமம் கொண்டவர்களுக்குச் சுகம் என்பது நிச்சயம் கிடையாது என்று கூறிய அவர் நடந்த நிகழ்ச்சிகளை அறிந்தார். பின்னர் மணிகாந்தனைப் பார்த்து நியாயமாக யோசித்துப் பார்த்தாயேயானால் அவள் வஜ்ரகாந்தனுடைய ஆசைநாயகிதான். நீ இடையில் அவளை உன் ஆசைநாயகியாக பாவித்தாய். எனினும் வஜ்ராங்கதன் இப்போது

பலாத்காரம் செய்ததால் அவள் அவனுக்கே மறுபடியும் ஆசைநாயகி ஆகிவிட்டாள் என்று சமாதானம் சொன்னார் பிரமதேவன்.

அதன்பின் அவர் அவனை நோக்கி ஒரு நிபந்தனையை விதித்தார். பின் வஜ்ராங்கதனைச் சபித்தார். பெண்களிடத்தில் காமம் கொண்டவர்கள் நம்முடைய பிரமசபைக்குள் வரலாகாது என்பது அவர் விதித்த நிபந்தனை. அதன்பின் அவர் இந்த நிபந்தனையை வழக்கத்துக்கு கொண்டுவர நினைத்தார்; அந்தவஜ்ராங்கதன் தேவர்களுக்குரிய சுகானுபவம் இல்லாமல் போகக்கடவன் என்று சபித்தார். மணிகாந்தனை இவ்வாறாகச் சமாதானப்படுத்தினார்.

## வஜ்ராங்கதன் தவம்

பிரமன் தன் மகனைச் சமாதானப்படுத்துவதற்காக வஜ்ராங்கதனை சபித்தவுடன் அவன் தேவர்களுக்குரிய சுகானுபவம் அற்றவன் ஆனான். உடல்பலம் இழந்தான்; தன் தந்தையான வருணனிடம் சரணடைந்தான்.

வருணன் தன் மகனைச் சமாதானப்படுத்தினான். பிரமதேவனிடம் சாபவிமோசனம் கேட்டான். அப்போது பிரமன் வருணனை நோக்கி, ''வருணா, மலைய பர்வத்தின் அடிவாரத்தில் உள்ள உன்னதமான தோரணம் ஒன்றின் உச்சியில் நவரத்தின ஒளிகளைப் போலப் பெரும் ஜோதி ஒன்று எக்காலத்தில் காணப்படுமோ அந்தக் காலத்தில் அங்கு முனிவர்களில் சிறந்தவரான அகத்திய முனிவர் உலகம் நலம்பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் ஸ்ரீ தாமிரபரணி தேவியையும் அழைத்துக் கொண்டு அந்தத் தோரணாசலத்துக்கு வருவார். அப்போது அகத்திய முனிவருடைய அனுக்ரகம் பெற்றுத் தாமிரபணிக்குப் பூஜை செய்தால் மறுபடியும் வஜ்ராங்கதன் பலம் பெறுவான்; தேவர்களுக்குரிய ஆற்றலை அடைவான்; மனைவியுடன் மகிழ்வான்'' என்றெல்லாம் சாபவிமோசனம் சொன்னார்.

தந்தையின் கட்டளைப்படி மலைய மலையின் அடிவாரத்தை அடைந்தான் வஜ்ராங்கதன். அங்கே தேவதச்சனான விஸ்வகர்மாவால் அடிவாரத்தில் உருவாக்கப்பட்ட ஒரு குகையில் மனைவியுடன் வசித்துத் தவம் செய்து வரலானான். மாமுனிவன் எப்போது வருவான்? தோரணமலை உச்சியில் எக்காலத்தில் ஒளி உண்டாகும்? என்றெல்லாம் ஏங்கித் தவித்தான்.

## ஒளி பிறந்தது சாபம் அகன்றது

ஒரு நூற்றாண்டு காலம் சென்றது. ஒருநாள் தோரணாச்சலத்துக்கு உச்சியில் உதயம் செய்து வருகிற உதயசூரியனைப் போலச் சி

வந்த பற்பல வண்ணங்கள் அடங்கிய ஒரு பேரொளி தோன்றியது. வஜ்ராங்கதன் ஒளி கண்டு மகிழ்ந்தான். தான் இருக்குமிடத்திலிருந்து வெளிப்பட்டுச் சமவெளிப் பகுதியில் தன் பாதங்களைச் செலுத்தினான்; பார்வையிட்டான்; அப்போது பலம் பொருந்திய தோரணபர்வதத்தை நோக்கி முனிவர்கள் புடைசூழச் சிவமே போன்ற முனிவர் வந்தார். அவரே அகத்தியர் என உணர்ந்தான் வஜ்ராங்கதன். மிகவேகமாக அவனை நோக்கிச் சென்றான். எளியேனைக் காப்பாற்ற வேண்டும்; அடியேனை வாழ்விக்க வேண்டும்'' என்றெல்லாம் கதறினான். அகத்தியர் மற்றும் அவர் தேவியார் பாதங்களில் விழுந்து வணங்கினான்.

அகத்தியர் மனம் இரங்கினார்; தாமிரபரணி தேவியை அவனுக்குக் காட்டினார். அவன் முனிவர் அனுக்ரகத்துடன் தாமிரபரணி தேவியை முறைப்படி வழிபட்டான்.

அந்த நிலையில் சாபம் அகன்ற வஜ்ராங்கதன் தேவநிலையை அடைந்தான். அவனும் அவனுடைய மனைவியான ஸ்தபகாவதி என்பவளும் சந்தோஷத்துடன் விமானம் ஏறித் தேவலோகம் சென்ற னர். தன் மகனுக்குச் சாபவிமோசனம் கிடைத்ததைக் கண்டு மகிழ்ந்த வருணபகவான் முனிவரையும் அவர் துணைவியாரையும் துதித்தான். மலைய ராஜகுமாரியான தாமிரபரணியைத் துதித்தான். பிரமதேவனிடம் உத்தரவு பெற்று மகாநதிக்குப் பணிவிடை செய்வதற்காகச் சிறந்த ரூபம் தங்கிய மூன்றரை கோடித் தீர்த்தங்களை அவளுக்கு வெகுமதியாகக் கொடுத்தான். இதுகண்டு தேவர்கள் மகிழ்ந்தனர். அதன்பின் அகத்திய முனிவர் தாமிரபரணியுடன் சிவ சைலம் நோக்கிச் சென்றார். அங்கே இருநதிகள் உருவான விவரம் சுவையான வரலாறு.

## (13)

## கடனை தோன்றிய கதை

அத்திரி முனிவரின் ஆசிரமம் இருந்த பகுதி சிவசைலம். இது புண்ணியத் தலம். முன்னொரு காலத்தில் மலயராஜன் தன் மனைவியுடன் நீண்ட நெடுங்காலம் இங்கே சிவனை நோக்கித் தவம் செய்தான். அவன் தவம்கண்டு மகிழ்ந்த சிவபெருமான் அவன்முன் காட்சி தந்தார். அவனை அனுக்ரகித்தார். அதுமுதல் சிவன் அருள்புரிந்த காரணத்தால் அந்த மலை சிவசைலம் என்ற பெயரால் அழைக்கப்பட்டது. அகத்திய முனிவர் சிவசைலம் நோக்கிவருவதை அறிந்தார் அத்திரி முனிவர். மகிழ்ந்தார்.

## வரவேற்பும் உரையாடலும்

காத்தல் கடவுளான நாராயணனுக்குச் சமமான மகத்துவம் பொருந்தியவர் அத்திரி முனிவர். அவர் சிவமகா முனிவரான அகத்திய முனிவர் வருவதை அறிந்தார்; எதிர்கொண்டு அழைத்தார்; அவருக்குப் பாத்தியம், அர்க்யம், மதுபர்கம் முதலியவற்றை முறைப்படித் தந்தார்; அதிதி பூஜை செய்தார்; வரவேற்புச் செய்தார். அதன்பின் அகத்தியரை நோக்கித், ''தாங்கள் சிவனருளின்படி இங்கே எழுந்தருளியிருப்பது உலகத்துக்கு நன்மை செய்வதற்காகவே என்பதனை நான் நன்கறிவேன். முன்பொரு காலத்தில் பகீரதன் தவம் செய்தான்; தேவகங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்தான். அதனால் இந்த உலகம் பாபங்களிலிருந்து காக்கப்பட்டது. அதுபோலவே தாங்கள் தற்போது தாமிரபரணியைக் கொண்டு வந்திருப்பதால் இந்த உலகம் பாபம், கொடும் பிணிகள், வறுமை ஆகியவற்றிலிருந்து காப்பாற்றப்பட இருக்கிறது.

***பாகீரதஸ்யா ராஜர்ஷே: கங்காமாநீ யத: புரா***

***தபஸா மாலிதம் விஸ்வம் பாபேப்ய: ஸசராசரம்***

தரிசனம் செய்தவர்களின் எல்லாப் பாவங்களும் தொலையும். பக்தியுடன் பூஜிப்பவர்களை வறுமை என்பதே அண்டாது. இந்நதியின் தீர்த்தத்தை அருந்துவோர் நீண்ட நெடுங்காலம் பிணியற்று வாழ்ந்து வருவர்''

***இதாநீம் பவதா பிரஹ்மன் தாம்ரமாநயதாம் நதீம்***

***பாபாத் பயாத் மகாவ்யாதே:தாரித்ரயாத் பாலிதம் ஜகத்***

***ஏநாம் மகாநதீம் புண்யாம் தர்ஸநாத் பாபநாசினீம்***

***ஏபஜந்தி நரா: பக்த்யா தேஷாம் நாஸ்தி தரித்ரதா***

***யதம்பூபாநதோ மர்த்யா: சிரம் ஜீவந்தி உரோகிண:***

என்றெல்லாம் சொல்லிக் கும்பமுனியை மீண்டும் மீண்டும் வணங்கினார். அதன்பின் அவர் தாமிரபரணியைத் துதிக்கலானார்.

## தாமிரபரணி ஸ்துதி

அத்திரி முனிவர் தாமிரபரணியை நோக்கி, ''தாயே உனக்கு வணக்கம்! சாமானியமான புழு தொடங்கிப் படைத்தல் கடவுள் வரை அமைந்ததான இந்த உலகத்தைப் பாவத்திலிருந்து நீங்கிப் பரிசுத்துப்படுத்தும் தன்மை படைத்தவள் நீ. இயல்பாகத் தீர்த்தரூபம் உடையவள் போல நீ தோன்றினாலும் வேதசாஸ்திரங்கள் உன்னைச் சூட்சும ரூபிணியாகவே உயர்த்திப் பேசுகின்றன.

***நமஸ்துப்யம் மாதராப் ப்ரஹ்ம கிடம் விஸ்வம் பாபாத் பாபயந்தீ பயோபி:***

***தீர்த்தகாரா த்ருஸ்யஸெ த்வம் ப்ருக்ருத்ய ஸூக்ஷ்மாகாரா த்ருஸ்யஸெ வேதவாக் பி:***

தாயே! தாமிராதேவியே! உன்னுடைய உடலைக் கங்கையென்றும் கிருஷ்ணையென்றும் சரஸ்வதியென்றும் மூன்று விதங்கள் அடங்கியிருப்பதாக மக்களுக்குப் புலனாகுமாறு செய்கிறாய். உயரிய தீர்த்த உருவத்தை உடைய உன்னைப் பூஜை செய்பவர்களுக்கு எல்லா வகையான செல்வங்களையும் அளிப்பவளே, நீ எங்களைப் பாவத்திலிருந்து காப்பாற்ற வேண்டும்.

***த்ரேத பங்கத்வ ஸ்வாம்தநும் த்யோத் தயந்தீ கங்கா க்ருஷ்ணா பாரதிதி பிரஸித்தாம்***

***பக்தாந் மஸ்வாந் பாபதக பாஹி மாதத் தாம்ப்ரே ஸம்பத் ஸாதநே ஸாதகாநாம்***

தாமிரபரணி தேவியே! தாய் தன் மக்களைப் பாலூட்டிக் காப்பாற்றுகிறாள், அதுபோலவே நீ மலய பர்வதம் தொடங்கிக் கடலோடு கலக்கும் வரை இடைவிடாமல் பெருகி அமுதத்தை வெல்லும் நீரோட்டம் தாங்கி உன் தீரங்களில் வசிக்கும் எல்லா வகையான உயிரினங்களையும் காப்பாற்றி எக்காலத்தும் அதே விதத்தில் இருந்து அருள்புரிய வேண்டும்''

***ஆசை லாப்தி ஸ்ரோதஸா ஸோதஸா - அச்சோதாரா***

***பியுஷேன ப்ராஜ்ய கூல த்தயேஸ***

***ஸ்தந்ய க்ஷீரேணவ லோகம் புநாநா***

***மாத: தாம்ரே தேவீ நித்யம் பவ த்வம்***

என்றெல்லாம் அத்திரி முனிவர் தாமிரபரணியைத் துதித்தார். தன் மனைவியான அநசூயா தேவியுடன் மீண்டும் தாமிரபரணியைத் தியானித்தார். அப்போது ஒரு அதிசயம் நிகழ்ந்தது.

## தோன்றியது கடனை

தன் மனைவியுடன் அத்திரி தியானம் பண்ணிய நேரத்தில் மலய மலையின் அடிவாரத்தில் இருந்து அத்திரி மகரிஷியின் உபயோகத் திற்காக அவரைத் திருப்தி செய்வதற்காகத் தாமிரபரணியின் அனுக்ரகத்தால் ஒரு பெரிய தீர்த்தம் நதியாக வெளிப்பட்டது.

அந்த நதிக்குத் தாமிரபரணி கடனை என்று பெயர் சூட்டினாள். அதில் குளித்தாலும், குடித்தாலும் கங்கை நதியைப்போல பாவத்தைத்

தொலைக்கக்கூடிய பெருமை உடையதான அந்நதியில் அத்திரி மகரிஷி தன் மனைவியின் கையைப் பிடித்துக் கொண்டு நீராடினார். அகத்திய முனிவரும் பிறரும் புனித நீராடினர். தேவதைகளுக்கும் பித்ருகளுக்கும் தர்ப்பணம் செய்தனர். அருகிலிருந்த தேவாலயம் சென்று சிவசைலநாதரை வணங்கினர்.

### நதியின் பெருமைகள்

சிவசைலத்தில் தோன்றிய நதிக்குத் தாமிரபரணி கடனை என்று பெயர் சூட்டினாள். இந்த நதியில் குளிப்பவர் மற்றும் அதனை அருந்துபவர்களுடைய எல்லாவிதமான விருப்பங்களையும் நிறைவேற்றுவதனால் இந்த நதிக்குக் கடனை என்று பெயர் ஏற்பட்டது எனலாம்.

அத்திரி மகரிஷியின் நிமித்தமாக வெளிப்பட்டதால் அவருக்காகத் தோன்றியதால் இந்த நதி ஆத்ரேயி எனப்படுகிறாள். சிவ சைலத்திலிருந்து வெளிப்பட்டதால் இதனை சிவசைலி என்றும் சொல்லலாம்.

சிலர் கடனையைத் தாமிரபரணியின் அனுஜை (தோழி) என்றனர். வேறுசிலர் கிரிநதி என்றனர். சிலர் சைலோதகா என்றனர். அதன்பின் அத்திரி மகரிஷியுடன் தாமிரபரணியை அழைத்துக் கொண்டு யாத்திரை தொடர்ந்தார் அகத்தியர். அவர் பொதிகை மலையை அடைந்ததை 8-ஆம் அத்தியாயம் விவரிக்கிறது.

## (14)

## ஐந்துநாள் இருந்த கல்யாண தீர்த்தக்கரை

கும்பமுனிவரான அகத்தியர் தாமிரபரணி தேவியுடன் அத்திரி முனிவருடைய ஆசிரமத்திலிருந்து புறப்பட்டு ஆகாய மார்க்கமாக சற்றுத் தென்திசையில் சென்றார். அவருடன் அத்திரி, தும்புரு,வசு, கவுதமன், நாரதர், கபிலன், ஆங்கிரஸ், உசத்தியன், பகன், கணாதன், ரைவதன், அருணன், மக்கள் படையுடன் வந்த வருணன் இவர்களோடு நான்குபுறங்களிலும் சித்தர்கள், தேவதைகள் மற்றும் பலர் புடைசூழ அகத்தியர் விண்வெளியில் பறந்து சென்றார்.

### வ்யோமமும் ஜோதிர்மணியும்

மலயபர்வதத் தொடரின் அடிவாரப் பகுதியை நெருங்கிய நிலையில் மானசரோவரைப் போலப் பார்க்க அழகினைத் தூண்டக்கூடிய ஒரு தடாகம் தெரிந்தது. வ்யோம என்பது அதன்பெயர். அமுதம் போன்ற தீர்த்தம் கொண்ட தடாகம் அது. குளக்கரைகளில்

ஏராளமான மரங்கள் வளர்ந்து நிழல் தந்து கொண்டிருந்தன. அதனால் அந்த அமுதநீர் குளிர்ச்சியுடையதாய் இருந்தது.

(பாண தீர்த்தத்துக்கு வடமேற்கில் உள்ளதான) வ்யோமம் என்னும் இந்தத் தடாகத்தைக் காத்தல் கடவுளான நாராயணன் காப்பாற்ற விரும்பினார். அந்தப் பெரிய குளத்தின் கரையில் ஒரு மலையின் வடிவத்தை எடுத்துத் தங்கினார். அந்த மலைக்கு ஜோதிர்மலை என்று பெயர்.

ஜோதிர்மலையின் உச்சி ஓங்கார ரூபமானது. அந்த கொடுமுடியில் இருந்த ஒரு நீண்ட தடாகத்தை அடைந்தார் கும்பமுனி. அங்கு வசிக்க ஏற்பாடுகள் செய்தார். உடன்வந்தவர்களும் அங்கேயே தங்கினர்.

## பைந்நாகசரஸ்

சிவபெருமான் கையிலிருக்கு வில்லுக்குப் பிநாகம் என்று பெயர். அதை பைந்நாகம் என்பர். அந்த வில்லைக் கையிலேந்தியிருப்பதால் சிவபெருமானுக்குப் பிநாகபாணி என்ற பெயர் உண்டு.

ஒரு காலத்தில் சிவபெருமான் பார்வதியை மணம்செய்து கொள்ள வேண்டும் என்ற நோக்கில் இங்கே 5,000 ஆண்டு காலம் புலன்களை அடக்கித் தவம் செய்தாராம். அப்படித் தவம் செய்யும் நிலையில் தன் கையிலிருந்த பிநாகம் என்ற வில்லை அந்த இடத்துக்கு அருகில் இருந்த தடாகத்தின் கரையில் வைத்தார்; தான் தனியே அமர்ந்து உலக நன்மைக்காகத் தவம்புரிந்தார். அவர் வில்லை வைத்த இடத்துக்கு அருகில் இருந்ததால் அதுமுதல் பைந்நாக சரஸ் எனவும் நோக்கம் காரணமாகக் கல்யாண தீர்த்தம் எனவும் சொல்லப்பட்டது. ஹரி அதனைப் பர்வத ரூபத்தில் இருந்து காப்பாற்றி வருவதால் அந்த மலைக்கு விஷ்ணு கர்ப்பம் என்ற பெயர் உண்டு.

## ஹயக்ரீவர் ஆசிரமம்

கல்யாண தீர்த்தத்தில் அகத்தியரும் பிறரும் முறைப்படிப் புனித நீராடினர். உடனிருந்த அனைவருடனும் தீர்த்த மகிமை காரணமாக ஐந்து நாட்கள் அங்கேயே வசித்தார் அகத்தியர். மறுநாள் காலை கல்யாண தீர்த்தத் துறையை வலம்வந்து ஜோதிர்மலையைத் தாண்டி வனதேவதைகளை வழிபட்டுத் தென் பக்கமாகச் சென்றார் அகத்தியர். அவர் கண்ணில் அந்த நிலையில் ஒரு அழகிய ஆசிரமம் தென்பட்டது. அது ஹயக்ரீவர் ஆசிரமம். அதுபற்றிய விவரமும் அங்கு நடந்த விந்தையும் சுவையானவை.

## (15)

## ஹயக்ரீவர் ஆசிரமத்தில்...

சித்தகணங்களாலும் தேவர்களாலும் வழிபடப்படும் மாமுனிவர் ஹயக்ரீவ முனிவர். ஹயக்ரீவ முனிவர் விஷ்ணு பகவானின் ரூபத்தைப் பெற்றவர். அந்த இடத்தில் சில அற்புதங்கள் அரங்கேறிக் கொண்டிருந்தன. ஒன்றுக்கொன்று பகையான புலி, கரடி போன்ற மாமிசம் உண்ணும் விலங்குகள் மான்போன்ற புல்லுண்ணும் விலங்குகளுடன் பகையின்றி இருந்தன.

### காவல் தெய்வங்கள்

ஹயக்ரீவ ஆசிரமத்தில் புனித நீர்நிலை ஒன்றிருந்தது. அதனை அநேக பூதகணங்கள் காத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் பிரமதேவன் கட்டளைப்படிக் காவல் தெய்வங்களாகத் திகழ்ந்தவர்கள். பொன் போன்ற நிறம் காரணமாகப் பிசங்கிதர் என்ற பெயரினை உடையவர்களுக்குக் கபிலர்கள் என்ற விசேஷ நாமமும் உண்டு. அந்த இடத்தை அடைந்த அகத்தியர், முனிவர்கள் புடைசூழ வாகனங்களை விட்டிறங்கி ஆசிரமத்துக்குள் நுழைந்தார்கள்.

### ஹயக்ரீவர் உபசரிப்பு

தாமிரவரணியுடன் வந்த அகத்தியரையும் மற்ற முனிவர்களையும் முறைப்படி வரவேற்றார் ஹயக்ரீவர். தாமிரபரணிக்குப் பூஜை செய்தார்; வணங்கினார். அனைவருக்கும் முறைப்படி இருக்கை அளித்தார். நதிகளில் சிறந்ததான தாமிரபரணியைக் கொண்டுவந்த நற்செயலைப் பாராட்டினார். அதன்பின் அவர் தாமிரபரணியைப் புகழ்ந்தார்.

மகாமங்கலத்தைத் தரும் சிவசக்தி ரூபிணியாகத் திகழ்பவள் தாமிரபரணி தேவியாவாள். இவள் மனிதர்களுடைய பாவங்களைத் தொலைக்கிறாள்; இல்லற வாழ்வைக் கொடுக்கிறாள்; முடிவில் வீடுபேற்றையும் தருகிறாள். (செய்யுள் 39)

இவள் முழுமையாக மூலப்ரக்ருதியாக இருப்பவள். எனவே இவள் புலப்படாதவளாய் அவ்யக்தையாய் இருக்கிறாள். இவள் பிரமன், விஷ்ணு ஆகியோரால் குணமற்றவளாகவும் (நிர்குணை) குணமுள்ளவளாகவும் (சகுணை) திரும்பத் திரும்ப வழிபடப்படுவாள். (செய்யுள் 40)

இவள் தலையில் உலகுக்கு நன்மையைத் தரும் பரமசிவன் இருக்கிறான். ஹ்ருதயத்தில் பிரம்மதேவன்; நெற்றியில் மகாவிஷ்ணு;

கைகளில் கங்கையும் சரஸ்வதியும் யமுனையும் ஐராவதியும் ஆகிய புண்ணிய நதிகள் இருக்கிறார்கள். (செய்யுள் 42)

தாமிரபரணியின் கடிதடத்தில் மந்திரமும் கைலாசமும் கண்களில் சந்திரசூரியர்களும்செவிகளில்அஸ்வினித்தேவர்களும்கன்னங்களில் கோதாவரியும் காவிரியும் நாபியில் பரப்பிரம்மமும் நாசிகாத் துவாரத்தில் வாயுவும் நாவில் சரஸ்வதியும் மார்பில் ஸ்ரீதேவியும் முட்டுக்களில் நாகங்களும் திருவடி மலர்களில் காமதேனு முதலான பசுக்களும் ரோமக்குடிகளில் முனிவர்களும் அட்டவசுக்களும் வீற்றிருந்து அவயவங்களாகக் காணப்படுகிறார்கள். (செய்யுள் 45)

உலகத்தில் உள்ள தீர்த்தங்களெல்லாம் இவளை உபாசனை செய்து தீர்த்த சக்தியைப் பெறுகின்றன. நான்கு வேதங்களும் மந்திரங்களும் காயத்ரியுடன் இவளிடத்திலே இருக்கின்றன. (செய்யுள் 46)

இவளால் உலகம் தூய்மை செய்யப்பெற்றுப் பாபப்புதரிலிருந்து காப்பாற்றப்பட்டு வருகிறது. இவள் எல்லாத் தேவதைகளின் உருவம் உடையவளாயிருப்பதால் இவளை வணங்குபவர்களுக்கு எக்காலத்திலும் அவமதிப்பு நேர்வதே இல்லை என்றெல்லாம் புகழ்ந்த ஹயக்ரீவர், அகத்தியர் வருகையால் தென்திசையானது காஷ்மீரம், கேதாரம், ஹரித்துவாரம், நைமிசம் முதலான புண்ணியப்பகுதிகளைவிடச் சிறந்த புண்ணிய பூமியாகிவிட்டது என்று குறிப்பிட்டு வணங்கினார்.

### தாமிரபரணிக்குப் பூஜை

அதன்பின் ஹயக்ரீவர் தாமிரபரணியைத் தான் பூஜிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தன் ஆசிரமத்திலிருந்த பிசங்கிலா தீர்த்தத்தில் நீராடினார். பூஜித்தார். அங்கே அகத்திய முனிவர் எட்டுப் பகல்கள் தங்கியிருந்தார். எட்டு மைல் தூரம் நீளமுடைய அந்த ஆசிரமம் அகத்தியர் வருகையால் திருவிழாக் கோலம் பூண்டது. ஒன்பதாம் நாள் காலை சூரிய உதய காலத்தில் சிவபெருமான் ஆணையின்படி விஸ்வகர்மா என்ற தேவதச்சன் அங்கு வந்தான். அவன் வேண்டுகோள் என்ன? என்று பார்ப்போமே.

## (16)

## ஆசிரமம் உருவானது

அகத்திய முனிவர் ஹயக்ரீவர் ஆசிரமத்தில் தங்கியிருந்த நாட்களில் எட்டுப் பகல் ஒருநாள் போல் விரைவாக கழிந்தது. மறுநாள் சூரியன் உதித்தான். அப்போது அங்கு வந்தான் விஸ்வகர்மா. அகத்தியரையும் அருகிலிருந்த ஹயக்ரீவர், வருணன், அத்ரி முதலானவர்களையும்

விழுந்து வணங்கினான். அதன்பின் அவன் இறைவன் தனக்கிட்ட கட்டளையை அவர்களிடம் தெரிவித்தான்.

## இறைவனின் கட்டளை

வரும் வைசாக மாதம் பவுர்ணமி நாளில் மித்திரம் என்ற பெயர் கொண்ட மூர்த்தத்தில் எனது பராசக்தியாகவும் மங்களத்தைத் தருபவளாகவும் இருக்கிற இந்த மலயராஜ குமாரியான ஸ்ரீதாமிரபரணி தேவியானவள் தீர்த்தரூபம் பெற்று வெள்ளமாகப் புறப்பட்டுக் கடலரசனுடன் கலக்க வேண்டும். அந்தச் சமயத்தில் நாமும் உங்களுடைய நன்மைக்காக எழுந்தருளி வருவோம் என்று பரமசிவன் எனக்கு உத்தரவு கொடுத்துத் தங்களிடம் என்னை அனுப்பியிருக்கிறார்.

தங்களிடம் உத்தரவு பெற்றுத் தாங்கள் வசிப்பதற்காக ஓர் ஆசி ரமம் நிர்மாணம் செய்ய வேண்டும் என்று அகத்தியரிடம் வேண்டிக் கொண்டான் விஸ்வகர்மா. முனிவரிடம் உத்தரவு பெற்றான்; விரைவில் ஆசிரமம் அமைத்தான்.

## ஆசிரமம் - சில செய்திகள்

அகத்தியரின் ஆசிரமம் குப்திசிருங்காரம் என்ற கொடுமுடியின் நடுவில் மூன்று இரவுகளில் அமைக்கப்பட்ட ஆசிரமம் ஆகும். இது 400 முழம் நீள அகலம் கொண்டது. ஆதித்தஸ்தானம், அம்பிகாஸ்தானம், விஷ்ணு ஸ்தானம், கணபதிஸ்தானம், சிவ ஸ்தானம், பிரும்மஸ்தானம் முதலிய ஸ்தானங்களை உடையது. ஆஸ்தான மண்டபம் முனிசாலை பாகசாலை (சமைக்கும் இடம்) போஜன சாலை (உணவு உண்ணுமிடம்) சிவத்தியான சாலைகள் கொண்டதாய் இருப்பது.

ஆசிரமத்தின் வெளிப்பகுதியில் வாழை, பூகம், புன்னாகம் முதலான பலவகையான மரங்கள் அலங்கரித்தன.

## தாமிரபரணிக்கு அரண்மனை

அகத்திய முனிவருக்காக ஆசிரமத்தைச் செய்தபிறகு நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட மேடை, கூடப்பிரசாதம், கோட்டை கொத்தளங்கள் உடைய ரத்தினமயமான ஒரு அரண் மனையைத் தாமிரபரணி தேவிக்காக விஸ்வகர்மா உருவாக்கினான். அந்தக் கட்டடங்களுக்கு எந்தத் தீங்கும் வராமல் இருப்பதற்காக முண்டிதரன் என்ற பெயர் கொண்ட காந்தர்வக் கூட்டத்தைக் காவலர்களாக நியமித்தான். இவர்கள் இருக்கும் துறையே முண்டன்துறையாகும்.

### அகத்தியர் எழுந்தருளல்

தான்ஆசிரமத்தையும்அரண்மனையையும்உருவாக்கியசெய்தியை அகத்தியரிடம் வந்து தெரிவித்தான் விஸ்வகர்மா. அவரும் முனிவர் களுடனும் தாமிரபரணி தேவியுடனும் ஆசிரமத்தில் பிரவேசித்தார். அங்கே பெருமகிழ்ச்சியுடன் வசிக்கலானார். இந்த நிகழ்ச்சி நடந்த 11 இரவுகள் கழிந்தபின் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. அந்த அற்புதம் வீரசேனன் என்ற ஒரு மன்னனின் வரலாற்றுடன் தாமிரபரணி மகாத்மியத்தில் தொடர்புபடுத்தப் பட்டுள்ளது. இதுபற்றிய விவரம்.

## (17)

## விமானம் நின்றது; விளக்கம் கிடைத்தது

இமயமலையின் வடபக்கத்தில் ஓடிய ஒரு புஷ்பவதி என்ற நதியின் கரையிலுள்ள நகரங்களில் ஒன்று மானவதி என்ற நகரமாகும். இந்த நகரினை வீரசேனன் என்ற அரசன் ஒருவன் ஆண்டுவந்தான். அவன் சிவனை நோக்கிப் பெருந்தவம் செய்தான். அவன் தவம்கண்டு மகிழ்ந்த சிவபெருமான் அவனுக்கு மூவுலகங்களும் வணங்கும் தன்மைபடைத்த ஒப்பற்ற விமானத்தை அளித்தார். அந்த விமானத்திலேறி எல்லாத் தேசங்களையும் சுற்றிப்பார்க்கும் எண்ணம் கொண்டு புறப்பட்டான்.

### நதி தந்த பரிசு

விமானத்தில் புறப்பட்ட வீரசேனன் புஷ்பவதி நதிக்கரையை அடைந்தான். அந்த நதியை வஜ்ரதந்தன் என்ற ஜலஜந்து துன்புறுத்துவதைப் பார்த்தான். நீர்வாழ் உயிரினங்களைக் கலக்கித் துன்புறுத்திய அதனை வீரசேனன் தன் கையால் கொன்றான்.

வஜ்ரதந்தன் இறந்ததால் புஷ்பவதி நதி தன் சங்கடங்களிலிருந்து நீங்கியது. இன்பமுற்றது. அதனால்அந்த நதி தேவி தன்னுடைய மகளான நாதேயி என்பவளை வீரசேன மகராஜனுக்கு மணம்செய்து கொடுத்தது.

வீரசேனன் நாதேயியுடன் இல்லறம் துய்த்தான். சில ஆண்டுகள் சென்றபின் தன் மகனை அழைத்து அவனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்தான். தன் மனைவியின் உற்சாகத்துக்காக அவளை அழைத்துக் கொண்டு பூலோக சஞ்சாரம் செய்ய நினைத்தான்.

### அசரீரி சொன்னது

மேருவை வலம் வந்தான்; பல்வேறு இடங்களுக்குச் சென் றான்; மனைவியுடன் கூடி மகிழ்ந்தான்; மிகப்பல தீவுகளையும்

ராஜ்யங்களையும் கடந்தான்; திரும்பவும் இமயமலைக்கு வந்தான். அதனைத் தாண்டி அதன் தெற்குத் திசையிலுள்ள பல்வேறு நகரங்களையும் பூங்காக்களையும் பார்த்தான். மிகவேகமாக விமானத்தை ஓட்டித் தென்திசைக்கு வந்தான். எப்போதும் தன் விருப்பப்படி பறக்கும் விமானம் அவமானம் அடைந்ததுபோல ஓரிடத்தில் அப்படியே நின்றுவிட்டது. இது என்ன அதிசயம்? என அறிவாளியான வீரசேனன் சிந்திக்கலானான்.

அப்போது ஆகாயத்தில் விசித்திரமான ஒரு ஒலி எழுந்தது. ''பராசக்திக்கு இருப்பிடமாக இருக்கும் மலயபர்வதத்தின் சிகரத்தை திரிமூர்த்திகளும் மற்றத் தேவர்களும் தாண்டியதில்லை'' என்றது அந்த வானொலி. இதுகேட்ட வீரசேனன் விமானத்தை விட்டு அந்தப்பகுதியில் இறக்கினான்.

## சங்கமாமுனிவரைச் சந்தித்தல்

விமானம் இறங்கிய பகுதிக்கு அருகில் ஓர் ஆசிரமம் இருந்தது. அந்த ஆசிரமத்துக்குச் சென்றான் வீரசேனன். அங்கே சங்கமாமுனிவர் என்பவர் இருந்தார். அவரிடம் தன்னைப் பற்றிய கூறியபின் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் விவரித்தான். விமானம் நிற்க என்ன காரணம் என்று கேட்டான். அந்தநிலையில் சங்கமாமுனிவர் மலயபர்வதத்தில் உள்ள சோதிர்கிரகம் என்ற குகையில் பராசக்தி ஸ்படிக மணிமாலை ஸ்ரீசக்கர பீடத்தில் பரமேஸ்வரனுடன் வீற்றிருக்கிறாள். அவள் திருமூர்த்திகளைத் தன்னகத்து அடக்கிய பெரும்சக்தி. இந்த இடத்தில் எல்லாப் பாவங்களையும் தொலைக்கும் தன்மை படைத்தவளும் சகல தீர்த்த ரூபிணியாய் இருக்கிறபடியான தாமிரபரணி தேவி அருள்புரிந்து வருகிறாள். இங்கேதான் தன் மனைவியுடன் அகத்திய முனிவரானவர் சிவனின் உத்தரவுப்படி தாமிரபரணியைக் கொண்டு வந்து சமுத்திரம் செல்வதற்கேற்ற நீர் உருவம் பெறுவதற்காக அவளைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

இந்த இடத்தில் நான்கு வேதங்களும், புராணங்களும், மந்திரங்களும், யாகங்களும் இருக்கின்றன. இம்மகாநதியானவள் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகியோரால் வழிபடப்பட்டு வருகிறாள்.

இப்படி மிகப்பல பெருமைகள் படைத்த இப்பகுதியைத் தாண்டுவதற்குத் திறமையில்லாததால் உன் விமானம் நின்றுவிட்டது என்று சொன்னார். பராசக்தியை நீ தரிசனம் செய்ய வேண்டும் என்றும் அவனுக்குக் கட்டளையிட்டார். அதன்பின் அவர் அகத்திய முனிவர் மலயபர்வதம் வந்தமையையும் குகையை அடைந்தமையும்

*பற்றி விரிவானச் செய்திகளை வீரசேனனுக்குச் சொன்னார். அந்தச் செய்திகள் 10-ஆம் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.*

## (18)

## அருளினார் ஸ்ரீபுரதேவி

*தாமிரபரணி மகாத்மியத்தில் 7-ஆவது அத்தியாயம் வரை அமைந்த செய்திகள் சுகப்பிரம்ம மகரிஷிக்கும் சூதமாமுனிவருக்கும் வியாசருக்கும் நடந்த உரையாடல்களாக அமைந்தவை. வீரசேனன் என்ற மன்னன் தான் ஏறிவந்த விமானம் ஆகாயத்தில் தடைபட்ட நேரத்தில் ஆகாசவாணி அறிவுறுத்தியபடி கீழே இறங்குகிறான்; சங்கமாமுனிவர் என்பவரைச் சந்தித்து விமானம் தடைபடக்காரணம் கேட்கிறான்; அவர் மூலம் தாமிரபரணி மற்றும் அகத்திய முனிவரை பற்றிய செய்திகளை அறிகிறான். அவன் வேண்டிக் கொண்டபடி அகத்திய முனிவர் மலய மலைக்குச் சென்றது தொடர்பான பல விபரங்கள் சங்கமாமுனிவரால் விளக்கப்பட்டதாகத் தாமிரபரணி மகாத்மியம் தொடர்கிறது.*

### சுருக்கமாய்ச் சொன்னது

*சங்கமாமுனிவர் கடந்த 9 அத்தியாயங்களில் சொல்லப்பட்டுள்ள செய்திகளை முதலில் வீரசேன மகராஜனுக்குச் சுருக்கமாக விளக்கியிருக்கிறார். தென்திசையைச் சமன்செய்ய தாமிரபரணியுடன் தெற்குநோக்கிப் புறப்பட்டது; திரிகூட மலையைத் தரிசித்தது; சித்ரா நதியை உற்பத்தி செய்தது; அத்ரி முனிவர் ஆசிரமம் அடைந்தது; சிவசைலத்தில் கடனாநதியைத் தோற்றுவித்தது; சோதிர்முனி என்ற கொடுமுடிக்கு வந்தது; வியோமபுஷ்கரணியில் புனித நீராடியது; ஹயக்ரீவரின் ஆசிரமம் அடைந்தது; பிசங்கலை என்ற தடாகத்தில் புனித நீராடியது; விஸ்வகர்மாவால் நிர்ணயிக்கப்பட்ட ஆசிரமத்தில் 11 இரவுகள் தங்கியது என்ற செய்திகளைச் சொன்னார். அதன்பின் அகத்தியர் முனிவர்கள் தேவர்கள்சூழத் தாமிரபரணி தேவியுடன் அங்கிருந்து புறப்பட்டார் என்றார் அவர்.*

### சக்கரசிலையில் குகை

*முனிவர்கள் சூழ அகத்தியர் புறப்பட்ட நேரத்தில் நான்கு பக்கங்களிலும் சுபசகுனங்கள் உண்டாயின. அந்தச் சமயத்தில் ஆகாயத்திலிருந்து கபில முனியும் நாரதமுனிவரும் இறங்கி அகத்தியர் இருக்கும் இடத்துக்கு வந்தார்கள். அதன்பின் அகத்தியரும் பிறரும் சக்ரசிலை என்ற பகுதியில் இருக்கும் குகைக்குச் செல்வ தற்காகப் புறப்பட்டார்கள்.*

அந்த குகையின் முன்பாகத்தில் மிகப்பரிசுத்தம் படைத்த இரண்டு நீர்நிலைகள் இருந்தன. அவை மிகப்பெரிய தடாகங்கள். ஒன்று இஷா என்றும் இன்னொன்று ஊர்ஜஸ் என்றும் பெயர் பெற்றவை. அந்தத் தடாகங்களில் அனைவரும் புனிதநீராடினர்; சந்திர சூரியர்களை வணங்கினர்; அந்தப் பகுதிக்குரிய காவல் தெய்வங்களையெல்லாம் வெகுமதித்துப் பாராட்டினர். அதன்பின் அகத்தியர் தாமிரபரணியுடன் குகையில் பிரவேசித்தார்.

## பூர்வாம்நாயம்

சக்கர சிலையில் அகத்தியர் பிரவேசித்த குகை எட்டுக்கல் அளவு சுற்றளவு கொண்டதாகும். இது மிகவும் அழகிய சுற்றுச்சூழலை உடையதாகும். இந்தக் குகையின் கிழக்குப் பக்கத்தில் இருந்த ஒரு புனித நீர் நிலையை அகத்தியர் பார்த்தார். அந்தத் தடாகம் கதம்ப விருட்சங்களும் வளர்ந்த தாழம்பூக்களும் வாழைக் கூட்டங்களும் செழித்து வளர்ந்திருக்கப் பார்க்க அழகியதாக இருந்தது. நான்கு புறங்களும் தங்கம்போல் பிரகாசித்தன. பூமியில் கர்ப்பூர மணல் விரிக்கப்பட்டிருந்தது. மரங்களில் கிளிகள் பாடின. வண்டுகள் ரீங்காரித்தன. ஏழு கோடி மகாமந்திரங்களைத் தேனீக்களும், பறவைகளும் ரீங்காரம் செய்து திசைகளை ஒலி உடையதாக்கின. அந்தத் தடாகத்தை இந்திரனாலும் மன்மதனாலும் உருவாக்கப்பட்ட சித்ரகேது முதலான தலைமைகணத் தலைவர்கள் நான்கு புறத்திலிருந்து காத்து வந்தனர். அந்தக் குளத்துக்கு நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட படிக்கட்டுகள் இருந்தன. பாவத்தைத் தொலைக்கக் கூடியதும் அமுதத்தை நிகர்த்ததும் ஆனந்தத்தை அளிக்கக் கூடியதுமான அந்தத் தடாகம் திசை காரணமாகப் பூர்வாம்நாயம் எனப்பட்டது. அந்தக் குளத்தில் இறங்கி அகத்திய முனிவர் ஆசமனம் செய்தார். அதற்குப்பின் தென்திசை நோக்கிச் சென்றார்.

## இன்னும் மூன்று நீர்நிலைகள்

தென்திசை நோக்கிப் புறப்பட்ட அகத்தியர் அங்கே இன்னொரு தடாகம் இருப்பதைப் பார்த்தார். அதன் கரையோரங்களில் கரும்புக் கூட்டங்கள் செழித்திருந்தன. திசைகாரணமாகத் தட்சிணாயம்நாயம் என்ற பெயர் கொண்ட அந்தத் தீர்த்தத்திலும் இறங்கி ஆசமனம் செய்து அங்கிருந்து செல்லும் நேரத்தில்

புடம்வைத்த தங்கத்தின் நிறத்தைப் பழிப்பதுபோன்ற மலர்களுடைய செண்பகவிருட்சத்தால் சூழப்பட்ட இன்னொரு தடாகம் அவர் கண்ணில்பட்டது. பச்சிமாம்நாயம் என்ற பெயர்

கொண்ட அந்தத் தடாகத்திலும் இறங்கி ஆசமனம் செய்து வந்தனம் அளித்து வடக்குத் திசைநோக்கி சென்றார்.

வடக்குப்பக்கத்தில் இன்னொரு பெரிய தடாகம் அகத்தியர் கண்ணில் பட்டது. கரையோரங்களில் சந்தன மரங்கள்வளர்ந்து குளிர்ந்த நிழல் உடையதாக இருந்த நீர்நிலை அது. அன்னங்கள் நீர் நிலையை அலங்கரித்தன. உத்தராம்நாயம் என்ற பெயர் கொண்ட அந்தப் புனித நீர்த்தடத்தில் நீராடியபின் அகத்தியர் அருகிலுள்ள ஸ்ரீபுரம் என்ற பகுதிக்குச் சென்றார்.

(தற்போது மலையின் மேல்புறம் தாமிரபரணி மேல் அணை உள்ள பகுதியில் இந்த நான்கு நீர்நிலைகளும் இருந்திருக்கக் கூடும்)

## ஸ்ரீபுர வர்ணனை

ஸ்ரீபுரத்தில் பரமசிவனைக் கட்டிலாகக் கொண்டு அதன்மீது வீற்றிருக்கக் கூடிய பராமனந்த ரூபிணியான பராசக்தியை அகத்தியர் தரிசித்தார். அப்போது அவர்,

எந்த குரு பராசக்தியிடத்தில் நுட்பமாக இருக்கின்ற நான்கு ஐந்து (9) கோணங்கள் ஒன்று சேர்ந்து காணப்படுகின்றனவோ

எந்தவொரு பராசக்தியிடத்தில் சிருஷ்டி (படைத்தல்), ஸ்திதி (காத்தல்), சம்ஹாரம் (அழித்தல்) அனுக்ரகம் (அருளல்) திரோதானம் (மறைத்தல்) ஆகிய ஐந்தொழிலுக்கு உரிமை பெற்றிருக்கக் கூடிய பிரமன், விஷ்ணு, ருத்ரன் முதலான பெரியோர்கள் கண் முதலான பஞ்சதாம் (ஐந்து) பொறிகளின் தன்மையைப் பெற்றிருக்கிறார்களோ

யாதொரு பராசக்தியினிடத்திலிருந்து காமேஸ்வரருடைய மடியில் வீற்றிருக்கக் கூடிய சிவகலையானது உண்டாகிறதோ

அப்படிப்பட்ட பரமானந்த பெருவெள்ளமாக அமுத வடிவம் பெற்றிருக்கும் பராசக்தியைக் கண்டு லோபமுத்திரையுடன் கும்பமுனிவர் பூஜை செய்தார்; வந்தனம் பண்ணினார். ஸ்ரீ தாமிரபரணியுடன் சேர்ந்து பின்வருமாறு துதித்தார்.

## அகத்தியர் துதி

அகத்திய முனிவர் ஸ்ரீபுரதேவியை நோக்கி

கருணையின்வெள்ளமே! குறைவிலாநிறைவே! பிறப்பிறப்புகளை அறுக்கின்றவளே! உருத்திரன் மனைவியே! சாம்பவிதேவியே! எனக்கு அருள் செய்ய வேண்டும்.

பாவக்கடலில் தத்தளித்துச் சம்சார சாகரத்தைத் தாண்ட விரும்பும் உயிரினங்களுக்குத் துடுப்புப் போன்றவள் நீ. மாயை

என்ற சொல்கின்ற அஞ்ஞான இருளைப் போக்கும் நிலையில் மாணிக்கத் தீபமாய் இருப்பவள் நீ; பெரியோர்கள் உன்னைச் சதுர் வேதஸ்வரூபிணி என்கிறார்கள். நாசமற்றவளாகவும், ஒலி வடிவான வளாகவும் துதிக்கிறார்கள். இத்தன்மைகள் படைத்த உன்னை வணங்குகிறேன்.

உன் திருவடிகளை வணங்குபவர்களுக்கு மேன்மை அளிக்கின்ற அமுத ரூபமான மனமுடையவள் நீ. முக்தி மார்க்கத்துக்கு வழிகாட்டி நீ. வெளிச்சம் அளிக்கும் திருவிளக்காகத் திகழ்பவள் நீ. தாயே எனக்குத் தயை செய்ய வேண்டும்.

அறிந்து கொள்ள முடியாததான செய்கை, காலம், மாற்றம் உடையவள் நீ. ஆதி நீ. கலை, மூர்த்தம் என்ற மரியாதைகள் பெற்றவள் நீ. உனக்கு நாள்தோறும் வந்தனம்; வந்தனம்.

ஒன்றாகவும் பல்வேறு பொருள்களில் இருப்பவளாகவும் (சத்வ குணமொன்றில் இருப்பவளாகவும்) சோகமற்றவளாகவும் பிணிகள் இல்லாதவளாகவும் வேதாந்த வசனங்கள் எவரைக் கூறுகின்றனவோ அப்படிப்பட்ட உன்னை நான் என் உள்ளத்தில் தியானித்து அனுபவிக்கிறேன்.

உன்னைச் சிலர் மாயை என்கிறார்கள்; சிலர் பரை (உத்கிருஷ்டை) என்கிறார்கள்; சிலர் சிவசக்தி என்கிறார்கள்; பெரியோர்கள் நீ எல்லா நிலைகளிலும் சுதந்தரமுடையவள் என்று போற்றுகிறார்கள். அப்படிப்பட்ட உன்னை வணங்குகிறேன்.

நீ பரஞ்ஜோதியாகத் திகழ்பவள்; துதிசெய்யத் தக்கவள்; சத்திய மாயிருப்பவள்; முடிவில் சேர வேண்டிய பொருளாக விளங்குபவள்; இராப்பகலற்றுத் தியானம் செய்வதற்குரியவள்; ஜோதிஸ்வரூபி; ஆதியுவதி ரூபம் படைத்தவள். அப்படிப்பட்ட உன்னைத் திரும்பவும் வணங்குகிறேன்.

மகாதேவியே! யாதொரு கதியுமில்லாத எனக்குத் தயை செய்ய வேண்டும். பரதேவதையே! எனக்குத் தயை செய்ய வேண்டும்; லோகமாதாவே! ஓங்கார ரூபிணியே! தயை செய்ய வேண்டும்.

சரணடைந்தவர்களுக்குக் கற்பகக் கொடியாய்த் திகழ்ந்து அனைத்தும் அருள்பவளே; பாசம், அங்குசம், பத்மம் (தாமரை மலர்) இவைகளைத் திருக்கைகளில் ஏந்தியவளே; ஐந்து கணைகள் என்று சொல்லப்படுகின்ற (அரவிந்தம் முதலான) மலர்களைப் பழித்த விரல்கள் அமைந்த திருக்கைகள் உடையவளே! ஸ்ரீசக்க ரத்தின் திருக்கோணங்களை மிகப்பல விதங்களாகப் பகுத்து அருள்செய்பவளே! எனக்குத் தயை செய்.

*தாயே! மலயபர்வதமாகிய பத்ம பீடத்தில் வீற்றிருப்பவளே! விசேஷமான மாயையின் ஒரு பாகத்தின் மூலம் உலகத்தைப் படைத்தவளே! ஐந்தொழிலுக்கும் முதல்வனான ஈஸ்வரனான பரமசிவன் என்னும் கட்டிலில் வீற்றிருப்பவளே! எனக்கு விரைவாக மங்கலத்தை அளிக்க வேண்டும்*

*என்று லோபமுத்திரையுடன் அகத்திய முனிவர் பராசக்தியைத் துதித்தார்.*

## பராசக்தி சொன்னது

*அகத்திய முனிவரின் துதிகளுக்கு இரங்கி அருள நினைத்தாள் அன்னை. தன் புன்சிரிப்பால் திசைகளுக்கு ஒளியூட்டினாள். அவர்கள் எதிரில் தோன்றினாள்; திருவாய் மலர்ந்தாள்.*

*முனிவரே! தாங்கள் இங்கு வந்தது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். அதிலும் தாங்கள் என்னைப் போற்றியமையைக் கேட்டுச்சந்திரனைக் கண்ட சகோரப் பறவையைப் போலச் சந்தோஷமடைகிறேன்.*

*தாங்கள் கொண்டுவந்துள்ள தாமிரபரணியும் தங்கள் துதியும் என் அருளால் உலகம் முழுமைக்கும் இன்பத்தை விளைவிக்கட்டும்.*

*இந்தப் புண்ணியவதியான தாமிரபரணியானவள் ஜலரூபிணியாகவும் தீர்த்தசக்தியைக் கொடுக்கின்ற தன்மையுடையவளாகவும் இருக்கிறாள். எனக்கு இன்பத்தை அளித்த தங்கள் துதி வசனரூபமாகவும் தீர்த்த சக்தியை அளிப்பதற்குரிய தேவதையாகவும் இருக்கிறது.*

*ஆதலால் தாமிரபரணியில் புனித நீராடுபவர்களும் தாங்கள் எனக்குக் கூறிய இந்த ஸ்துதியைப் பாராயணம் செய்பவர்களும் பரிசுத்தவர்களாகி விடுவார்கள். தாங்கள் தங்கள் மனைவியுடன் இங்கேயே வசிப்பீர்களாகுக.*

*தாமிரபரணியால் மூன்று உலகங்களும் சுகம்பெற வேண்டும். எனவே அந்த நதியுடன் இங்கு வீற்றிருக்க 80 மைல் சுற்றளவு கொண்ட இந்த பூமியானது சித்தபூமியாய் உருவாகக்கடவது.*

*என்னுடைய அருளால் இவ்விடத்தில் இருப்பவர்களுக்கு பஞ்சம், பீதி, மனவருத்தம் மற்றும் வியாதிகள் எவையும் எப்போதும் உண்டாகா. இவ்விடத்தில் வாழ்பவர்களுக்கு அவமதிப்பு ஏதும் நேராது.*

*எல்லாரும் இன்புற்று இருப்பீர்கள். அனைவரும் பிணியற்று வாழ்வார்கள். ஒருபொழுதும் உங்களுக்குள் சண்டை சச்சரவுகள் உருவாக மாட்டா.*

எல்லாருக்கும் நன்மைகள் விளையட்டும்; எல்லா வகையான உயிரினங்களும் நீண்டகாலம் வாழட்டும். முனிவரே நம்முடைய அருளால் உங்களுக்கும் மேன்மைகள் உண்டாகட்டும்.

விஜயம் என்று சொல்லப்படுகிற மகாபரிசுத்தமான இந்தச் சுபலக்னத்தில் இந்தத் தாமிரபரணியானவள் மகாநதியாய்த் தோன்ற வேண்டும்; சமுத்திர ராஜனுடன் கலக்க வேண்டும்.

இந்த மகாநதியின் இரண்டு கரைகளிலும் எல்லாக் காலங்களிலும் லட்சுமி வாசம் செய்வாள்; பலவகையான தாவரங்கள் செழித்துச் சி றக்கும்.

இந்த மகாநதியின் நான்கு பக்கங்களிலும் மூலிகைகள் உண்டாகக் கடவன.

என்றெல்லாம் பராசக்தி திருவாய் மலர்ந்தருளினாள். தாமரைத் தண்டுபோன்ற தன் மென்மையான கைகளால் தாமிரபரணியைத் தொட்டு முத்தமிட்டுத் தழுவினாள்.

அதன்பின்னால் தாமிரபரணி தேவி அலங்கரிக்கப்பட்டதும் போற்றப்பட்டதும் அதன்பின் உற்பத்தியனதுமான செய்திகளைச் சங்கமாமுனிவர் விவரிக்கும்நிலையில் தாம்ரபர்ணீ மகாத்மியம் தொடர்கிறது.

## 19

## தவழ்ந்தாள் தாமிரபரணி

தாமிரபரணிக்குப் பராசக்தியும் பிறரும் அபிஷேகம் செய்தமை தாமிரபரணியின் அழகிய தோற்றம் சமுத்திர ராஜனுடன் நிகழ்ந்த திருமணம் தாமிரபரணியின் தோற்றம் ஆகியவற்றைச் சங்க மாமுனிவர் விவரிக்கும் நிலையில் தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 10-ஆம் அத்தியாயம் அமைந்துள்ளது.

### தாமிரபரணிக்கு அபிஷேகம்

விருஷாங்க நகரம் விழாக்கோலம் பூண்டது. நவரத்தின விமானத்தின்கீழ் அமைந்த நவரத்தின கற்களாலான அழகிய பீடத்தில் மலயராஜகுமாரியான தாமிரபரணியைப் பராசக்தி அமரவைத்தாள். அமுதத்தைக் காட்டிலும் சிறப்புடையதும் பொற்குடத்தில் நிறைக்கப்பட்டதுமான தீர்த்தத்தினால் பராசக்தி தாமிரபரணிக்கு அபிஷேகம் செய்தாள்.

அதனைத் தொடர்ந்து நான்கு திசையிலும் உள்ள மகாசமுத்திரங்களிலிருந்து கொண்டுவரப்பட்டுப் பொற்குடங்களில்

வைக்கப்பட்டிருந்த புனித தீர்த்தங்களைப் பிரம்ம விஷ்ணுக்களும் இந்திரன் முதலான முப்பத்து முக்கோடி தேவர்களும் ஜனகர் முதலான மாமுனிவர்களும் சித்தர்களும் தாமிரபரணி தேவிக்கு அபிஷேகம் செய்தனர்.

## தாமிரபரணியின் அழகிய தோற்றம்

அபிஷேகத்தைத் தொடர்ந்து தாமிரபரணி மிக அழகிய தோற்றத்துடன் காணப்பட்டாள். அவள் பீதாம்பர வஸ்திரம் தரித்திருந்தாள். எல்லாவகையானஅணிகலன்களையும்தரித்துச்சர்வா லங்கார பூஷிதையாகத் திகழ்ந்தாள். முத்துமாலைகள் அவள் கழுத்தை அலங்கரித்தன. கஸ்தூரி திலகம் நெற்றியில் ஒளிவீசியது. தன் நான்கு கரங்களில் கிளி, வீணை, சங்கு, தாமரை ஆகியவற்றை ஏந்தியிருந்தாள். ஸ்ரீதேவியைப் போலத் தகதகவென ஒளிரும் உடலை உடையவளாகத் திகழ்ந்தாள். மணிமுத்தை முதலான அவளுடைய தோழியர் குடை பிடித்தனர். சாமரம் வீசினர். முனிவர்களும் தேவர்களும், ''உபநிஷத் மந்திரங்களால் பராசக்தி யான தாமிரபரணிக்குத் துதி செய்தனர். அதன்பின் சேஷன், அநந்தன், தட்சன், கார்க்கோடகன் முதலான நாகரசர்கள் துதித்தனர். பின்னர் அசுரர்கள் ஆராதித்தனர். திமிங்கலம், மகரம் முதலான நீர்வாழ் உயிரினங்கள் போற்றின. தேவரிஷிகள் அதனைத் தொடர்ந்து அவளைத் துதித்தனர்.

## தாமிரபரணியின் திருமணம்

மணக்கோலம் பூண்டு அனைவராலும் போற்றப்பட்ட நிலையில் மகர வாகனத்தில் மணமகன் கோலத்தில் சமுத்திரராஜன் அந்த இடத்துக்கு வந்துசேர்ந்தான். இதனைக் கண்டு மலயராஜன் மகிழ்ந்தான்; விதிப்படி நீர் அரசனான சமுத்திரராஜனை அவன் வெகுமதித்தான். பின்னர் சிவபெருமானுடைய உத்தரவு பெற்று அகத்திய முனிவரின் சம்மதத்துடன் மலயராஜனின் மனைவி நந்தவதி நீர்வார்க்கச் சமுத்திரராஜனுக்கு தன் வளர்ப்பு மகளான தாமிரபரணியை மலயராஜன் கன்னிகாதானம் செய்து கொடுத்தான்.

பரமசிவனைப் பார்வதிதேவி கணவனாகப் பெற்று ஆனந்தம் அடைந்ததுபோல மலய அரசகுமாரியான தாமிரபரணி சமுத்திரராஜனை நாயகனாகப் பெற்று மகிழ்வுற்று விசேஷமாக விளங்கினாள். இதனைக்கண்ட அனைவரும் ஆனந்தம் அடைந்தனர். எட்டுத் திசைகளும் தெளிந்து விளங்கின. தேவதுந்துபிகள் முழங்கின. மலர்மழை பொழிந்தது.

## தோன்றியது நதி

திருமணமானவுடன் ஆதிலட்சுமியான தாமிரபரணிதேவி தீர்த்தரூபம் பெற்று வெளிப்படக் கருணை கொண்டாள். இதனைத் தெரிந்துகொண்ட முனிவரும் மற்றவரும் நன்று நன்று என்று சந்தோஷித்தனர். பிரமன், விஷ்ணு, இந்திரன் முதலானவர்களும் மற்றையத் தேவர்களும் வெவ்வேறு நிறங்களை உடைய விமானங்களில் ஏறி ஆகாயத்தில் கூட்டம் கூட்டமாகத் தென்பட்டார்கள். கந்தர்வர்கள் வீணையை மீட்டி இனிய பாடல்களைப் பாடலானார்கள். வேறுசிலர் புண்ணிய கதைகளைக் கூறலானார்கள். இப்படி ஒரே நேரத்தில் உண்டான ஓசையின் காரணமாகப் பருவ காலத்தில் கடல் முழங்குவது போன்ற நிலை அங்கே ஏற்பட்டது.

அப்போது ஆதிபராசக்தி தாமிரபரணியை நோக்கி, "நீ நதியாக மாறிப் பிரவாகிக்கலாம்" என்று உத்தரவிட்டாள். அந்த ஆச்சரியத்தைப் பார்ப்பதற்காக எல்லாரும் ஆர்வம் கொண்டிருந்த நிலையில் அங்கே அண்டகோளத்தைப் பிளக்கக்கூடியது போன்ற ஒரு பேரோசை உண்டானது. பெருவெள்ளம் உருவானது. அந்த பிரவாகத்திலிருந்து நவரத்தினங்களைப் பதித்த ஒளிபொருந்திய தங்க விமானம் ஒன்று கிழக்குப் பாகத்தில் கிளம்பியது. அந்த விமானத்தில் ஸ்ரீமகாவிஷ்ணுவிடம் உத்தரவு பெற்று அகத்திய மாமுனிவர் லோபா முத்திரையுடன் பராசக்தியை வணங்கி ஏறினார். ஹயக்ரீவர் முதலான பெரு முனிவர்களும் விமானத்தை வலம் வந்து ஏறினர். அந்த விமானமானது கிழக்குத் திசைநோக்கிப் புறப்பட்டது.

## விமானமும் நதியும்

முனிவர்கள் இருந்த விமானம் சென்ற திசையில் மயராஜகுமாரியான தாமிரபரணி பெருவெள்ளத்துடன் பின் தொடரலானாள். விருஷாங்கநகரத்தின் தெற்குப் பக்கத்தில் அருகிலிருக்கக் கூடியனவும் இஷை எனவும் ஊர்ஜஸ் எனவும் பெயர் உள்ளவனவுமான ஏரிகளைப் பிளந்து கொண்டு ஓடலானாள். அகத்தியாஸ்ரமத்துக்கு வடக்குத் திசையில் பிரவாகித்தாள். முனிவனுடைய ரதத்தை மெல்ல மெல்லப் பின்தொடர்ந்தாள். அடர்த்தியான மரங்களை உடைய குப்திசிருங்காரம் என்ற காட்டின் நடுவில் கொஞ்சம் தென்திசை நோக்கி ஓடினாள். சக்ரசி லை என்ற பகுதிக்கு வந்து வடக்கு நோக்கிப் புறப்பட்டாள். அந்த நிலையில் தாமிரபரணி 26 முழம் அகலமுடையதாகவும் 20 முழம் உயரமுள்ளதாகவும் மிகப்பல நீர்வாழ் உயிரினங்களுடன் ஓடியது.

தெளிவான தீர்த்தமாகக் கலம்பககர்த்தத்துக்கு வந்து விழுந்தாள். 2 யாமகாலம் கலம்பக கர்த்தத்தை நிறைவு செய்து மகாவிஷ்ணுவின் அனுக்ரகத்தை அடைந்தாள் என்றார் சங்கமாமுனிவர்.

கலம்பககர்த்தத்தின் வரலாறு பற்றிய விவரங்கள் வீரசேன மகாராஜனுக்கு விவரிக்கப்பட்டதைத் தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 11-ஆம் அத்தியாயம் விளக்குகிறது.

## (19)
## பாண தீர்த்தத்தின் வரலாறு

கலம்பகர்த்தம் எனப்படும் பெரிய பள்ளம் தாமிரபரணி நீரால் நிறைக்கப்பட்ட நிலையில் பாண தீர்த்தம் எனப்பட்டது. 2 யாம காலம் பெருவெள்ளத்தால் நிரப்பப்பட்ட அந்தப் பகுதி பற்றிய வரலாற்றை வீரசேன மகாராஜனுக்கு விடையாகச் சொல்லும் நிலையில் சங்கமாமுனிவர் கூறிய கருத்துக்களைத் தாம்ரபர்ணீ மகாத்மியத்தின் 11-ஆம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் காணலாம்.

### முப்புரம் எரித்தமை

கிருத யுகத்தில் அசுரர்களால் தேவர்கள் பெருந்தொலைக்கு ஆளாகினர். அப்போது அவர்கள் சிவபெருமானைச் சரணடைந்தனர். அவர்களுக்கு அடைக்கலம் தந்தார் அவர்.

சிவபெருமான் பூமியைத் தேராகவும் பிரம்மனைத் தேரோட்டியாகவும் மகாமேருவை வில்லாகவும் விஷ்ணுவைப் பாணமாக அதாவது அம்பாகவும் தரித்துத் திரிபுரர்கள் என்று சொல்லக்கூடிய அசுர வீரர்களை எரித்தார். அதன் காரணமாகத் திரிபுராந்தகன் என்ற திருநாமம் பெற்றார்.

### கோபம் குறையாத அம்பு

திரிபுர சம்கார காலத்தில் சிவபெருமான் தன் புன்சிரிப்பால் முப்புரங்களையும் அழித்தார். அப்போது விஷ்ணுவாகிய அம்பு (பாணம்) பயன்படுத்தப்படவில்லை. அதனால் அந்தப் பாணத்தினுடைய கோபாக்னி குறையவேயில்லை.சிவபெருமான் மலயபர்வதத்திலிருந்த ஒரு பெரிய பள்ளத்தில் அந்தக் கணையைப் புதைத்து வைத்திருந்தார். அந்தக் குழியில் 14 ஆயிரம் ஆண்டு காலம் கொதித்துக் கொண்டிருந்து மலையை வறட்சிக்கு உள்ளாக்கியவராக விஷ்ணுபகவான் அங்கே பாணரூபியாக இருந்து வந்தார்.

### உக்கிரம் தணித்த நதி

பராசக்தியின் ஆணைப்படி அகத்தியர் விமானத்தைத் தொடர்ந்து ஓடிவந்த தாமிரபரணி வெள்ளப்பெருக்குடன் மகாவிஷ்ணுவை

வணங்குவதற்காக அவர் பாணரூபியாக இருந்த பள்ளத்தில் பாய்ந்தது. அப்போது பேரோசை எழுந்தது.

பாதாள உலகில் இருக்கும் நாக அரசர்கள் சீறுவது போலவும் மேகங்கள் ஆகாயம் நோக்கிக் கிளம்புவது போலவும் தாமிரபரணி நீர் பள்ளத்தில் விழுந்தவுடன் தண்ணீர் திவலை திவலையாக எழுந்தது; புகையாகப் புறப்பட்டது.

தாமிரபரணி நீர் விழுந்தவுடன் நீர்க்குமிழிகள் கிளம்பின. அவை தண்ணீர் தகிப்பது போன்ற தோற்றத்தைக் காட்டின. அங்கு அப்போது எழுந்த வெப்பத்தை சகிக்க முடியாமல் நீர்வாழ் உயிரினங்கள் நான்கு பக்கங்களிலும் பாய்ந்தன. ஆகாயம் வரை அந்த வெப்பம் பரவியது. தேவர்கள் முதலானவர்கள் திசைகெட்டு ஓடினர்; நடுங்கினர்; மனம் கலங்கினர்; மேகங்கள் கர்ஜிப்பது போலக் கூச்சலிட்டனர்; இன்னும் சிலர் அதையெல்லாம் பார்த்துச் சித்திரம்போல அசையாமல் இருந்தனர்.

## அகத்தியர் வினாவும் ஹயக்ரீவர் விடையும்

இந்த நிலையைக் கண்ட அகத்தியர், விமானத்தை அந்தப் பகுதியை நோக்கித் திருப்பினார். ஹயக்ரீவ முனிவரைப் பார்த்துத் தீக்குண்டத்தில் நீர் பாய்ந்ததைப் போலக் காணப்படுகிறதே இதற்குக் காரணமென்ன என்று கேட்டார்? அதற்கு ஹயக்ரீவர் விடை கூறினார் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

முன்னொரு காலத்தில் திரிபுர சம்ஹாரம் ஆனபின் ஸ்ரீ நாராயண ரூபமான பாணமானது சாந்தமாகாமல் இருந்தது; தகித்துக் கொண்டிருந்தது. அதன் உஷ்ண சாந்திக்காக ஸ்ரீருத்ரன் மகாபுண்ணியமான மலய பர்வதத்தில் ஒரு குழியில் அதனைப் புதைத்து வைத்திருந்தார்.

அவ்விடமான பாண தாபத்தைத் தீர்ப்பதற்காக அமுத உருவினை உடைய தாமிரபரணி சிவனைச் சந்தோஷப்படுத்துவதற்காகப் பாணரூபியான ஹரியை அபிஷேகித்து வணங்கி அவரை ஆராதித்துக் கொண்டிருக்கிறாள்.

ஹரியினுடைய மகத்துவத்தால் இந்தத் தீர்த்தமானது தரிசனம் பண்ணிய மாத்திரத்தில் எல்லாவிதமான பாவங்களையும் போக்கும் சக்தி படைத்ததாகும்.

நாராயணன் பாணரூபத்தில் வாசம் பண்ணிய காரணத்தால் இது பாண தீர்த்தம் எனச் சொல்லப்படும்.

இதில் புனித நீராடுவோர் நாராயணனுடைய திருவுருவத்தை (சாரூபத்தை) அடைவர். பிரயாகை முதலான பற்பல புண்ணிய தீர்த்தங்களெல்லாம் தம்மை தூய்மை செய்து கொள்வதற்காக ஒவ்வொரு அமாவாசை நாளிலும் இங்கு வந்து நீராடுகின்றன. இதில் சாதாரணமாகக் குளித்தாலும் சிறந்த பலன்கள் கிட்டும் என்றெல்லாம் பாணதீர்த்தத்தின் மகிமையை அகத்தியருக்குத் தெரிவித்தார் ஹயக்ரீவர்.

## தீர்த்தத்தின் பெயர்கள்

தாமிரபரணி நீரால் பாணம் புதைக்கப்பட்டிருந்த பகுதி நிரப்பப் பட்ட நிலையில் அங்கே புதைக்கப்பட்டிருந்த அம்பானது மிகுந்த ஒளியுடன் வெளியே வந்தது. ஓர் விமானத்தில் ஏறி ஆகாயத்துக்குச் சென்றது; மூன்று உலகங்களையும் ஒளிபெறச் செய்தது.

அப்போது முனிவர் உள்ளிட்ட அனைவரும் அதனை வணங்கினர். நீரில் இறங்கி ஆசமனம் செய்தனர். புண்ணியப் புனலாடினர்.

சிலர் அதனைக் கலம்பக தீர்த்தம் என்று சொன்னார்கள். வேறு சிலர் பாணதீர்த்தம் என்ற பெயரால் அழைத்தார்கள். சிலர் ஆச்சரியப்பட்டு அதனை அகாத தீர்த்தம் என்று துதித்தார்கள். அது மிகவும் குளிர்ச்சியாக இருந்ததால் அதனைச் சீதோதகம் என்று சொல்லிச் சந்தோஷப்பட்டார்கள். அதன்பின்னர் விமானத்தைத் தொடர்ந்து இறைச்சலோடு ஓடிய தாமிரபரணியின் வெள்ளத்தைச் சில சுலோகங்களில் விவரிக்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (20)

## தாமிரபரணியின் பயணம்

பாண தீர்த்தத்தைத் தொடர்ந்து வேகமாக ஓடிய நதி வடகிழக்காகச் சென்று ஒரு புதரில் புகுந்தது. அதன்பின் அது ஹயக்ரீவ முனிவனின் ஆசிரமத்துக்கு மேற்குப் பக்கத்திலிருந்த பிசங்கிலை என்ற பெயருடைய தடாகத்தை நிரப்பியது. பாறைகளில் தயங்கித் தயங்கிப் பாய்ந்தது. ருத்திராவிடவிக்கு வந்தது. அதனையடுத்துப் பிரமசய்யையுக்கு வந்தது. தொடர்ந்து ரமாக்கிரீடத்துக்கு வந்தது. அதிலிருந்து கலைமானினுடைய முகத்தைப் போன்ற தோற்றம் கொண்ட பாறையிருக்கும் இடத்துக்கு வந்தது. அங்குள்ள குகைக்குச் சமீபத்தில் இருக்கும் குமாரக்ஷேத்திரத்துக்கு மேற்குப் பக்கமாக வடக்குநோக்கி ஓடி முத்துச்சிலைக்கு வந்தது. அதனையடுத்து ஜோதிர்மணி என்ற மலையின் நடுவாக வந்து அதிக ஒலியுடன் பைந்நாக சரஸில் (கல்யாண தீர்த்தம்) விழுந்தது.

அதன்பின் தாமிரபரணி ககனம் (ஆகாயம்) என்ற பெயர்பெற்ற பொற்றாமரை தடாகத்தை அடைந்து அதனை நிரப்பிற்று. அதன்பின் சந்தன மலையின் அடிவாரத்தை தொடர்ந்தது; கிழக்கு நோக்கி ஓடியது; மறுபடியும் வடக்குப் பாகமாக வடக்குப் புறத்தில் புறப்பட்டது. மலையினுடைய காட்டுப்பகுதியைத் தாண்டியது.

### யாத்திரை விவரம்

தாமிரபரணி பாண்டிய நாட்டில் விக்கிரமசிங்கபுரம் முதல் வடதிசை நோக்கி ஆங்கிரஸ் வனம் என்ற காட்டின் வழியாக ஓடுகிறாள். பாடலி வனத்தின் நடுப்பகுதியில் சிறிதே மேற்கு வளைவாக வடதிசை நோக்கித் திரும்பிச் செல்கிறாள். அதன்பின் ஆசிரமங்களால் அலங்கரிக்கப்பட்டதான கல்யாண வனத்துக்கு வருகிறாள். கீழ்த்திசை நோக்கிப் பயணப்படுகிறாள். செவல் என இந்நாளில் சொல்லப்படும் ஜோதிர் வனத்தை அடைகிறாள். பின் சந்திர சாலைக்கு வடதிசையாகச் செல்கிறாள். பிரமாரண்யத்தைத் திருநெல்வேலி அடைந்து கரகர குன்று முதல் வடதிசைநோக்கி ஓடுகிறாள். பிரம்மவர்த்த புரத்தைக் கடக்கிறாள்; பின் ஸ்ரீபலிபுரம் முதலான இடங்களில் தெற்கு நோக்கிச் செல்கிறாள். அதன்பின் தென்திசை வளைவாக ஓடுகிறாள். சராடவிக்கு (நாணல் காடு) மேற்குப் பக்கத்தில் அக்னி மூலை நோக்கிச் செல்கிறாள். மறுபடியும் ஸ்ரீவைகுண்டத்துக்கு சிறிதே மேற்கு பாகமாகக் கிழக்கு முகமாகத் திரும்பி ஸ்ரீவைகுண்டம் முதல் தெற்கு நோக்கிச் செல்கிறாள். ஸ்ரீபுரத்துக்கு வடதிசையாக நந்தவனத்துக்குத் தென்பாகமாக விருஷாடவியின் மத்திய பகுதியில் அக்னி மூலை நோக்கி ஓடுகிறாள். பின் ஜயந்திபுரத்துக்கு வடதிசையில் இருக்கிற காதம்பரி வனத்தை அடைகிறாள். பின்னர் மூன்று பாகமாகப் பிரிந்து சமுத்திரராஜனோடு கலக்கிறாள் என்ற செய்திகளைச் சங்கமாமுனிவர் விவரித்தது 12-ஆம் அத்தியாயத்தில் தொடக்கப் பகுதியில் உள்ளதாகும்.

இந்த அத்தியாயத்தில் அடுத்ததாகத் தாமிரபரணி தேவியின் திருவுருவத்தைப் பற்றிய விவரங்களைச் சங்கமாமுனிவர் விவரித்துள்ளார். சுவையான தகவல்கள் அவை.

## (21)

## தாமிரபரணியின் திருவுருவ வர்ணனை

தாமிரபரணியின் திருவுருவம் எத்தகையது எனச்சங்கமாமுனிவரை வீரசேன மகாராஜன் வினவினான். அதற்கு அவர் விடையாகச் சொன்ன செய்தி தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 12-ஆவது அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.

## நினைவுகள் மாறாது

நம் நல்ல சிந்தனைக்குச் சில நேரங்களில் தடை வந்தாலும்கூட முற்றிலும் அதிலிருந்து விலகுவதில்லை. பரமசிவனிடம் மனதைச் செலுத்திப் பக்தி கொண்டவருடைய உள்ளமானது உலக விஷயங்களால் தாக்கப்பட்டாலும் தருமத்திலிருந்து விலகுவதில்லை. இதனை எடுத்துக்காட்டுச் சொல்லி விளக்கலாம். வசந்த காலத்தில் சந்தோஷமாக இருக்கிற கிளி முதலான பறவைகள் வேப்பங்காட்டிலோ மாமரத் தோப்பிலோ இருந்தாலும் அவற்றின் இயல்பான பஞ்சம ஸ்வரத்தை விட்டுவிடுவதில்லை என்று சொன்ன சங்க மாமுனிவர் முன்பு நடந்த வரலாற்றை உள்ளது உள்ளவாறு நினைவில் இருந்தபடி விவரித்ததை இந்த நூல் விளக்குகிறது. *(சுலோகம் 12-16)*

## சிம்மாசனத்தில் தேவி

மலய மலையிலுள்ள ருப்தி சிங்கத்தில் அழகுடன் திகழ்வது விருஷாங்கம் என்னும் நகரமாகும். அந்த நகரின் மத்தியில் பொன்னால் உருவாக்கப்பட்ட அழகியதொரு அரண்மனை உண்டு. அந்த அரண்மனையில் நடுவில் இருப்பது ஓலக்க மண்டபம். அங்கே அழகியதொரு சிம்மாசனம் இருக்கிறது. அந்தச் சிம்மாசனத்தின் மீது தாமிரபரணி வீற்றிருக்கிறாள்.

## தேவியின் வர்ணனை

புதிய வஸ்திரம் தரித்த பூவையாகக் காட்சி தருகிறாள் அவள். நவரத்தினங்கள் ஒளிவீசும் கிரீடத்தைத் தலையில் தாங்கியிருக்கிறாள். அவள் முகம் சரத் காலத்துச் சந்திரப் பிரபையைப் பழிக்கக்கூடிய அளவில் ஒளி பொருந்தியிருக்கிறது. சுருள் தங்கத்தில் வைரத்தூண்கள் பதிக்கப்பட்ட ஒளிவீசுகின்ற சிக்கிகளைத் தலைமுடியில் அணிந்திருக்கிறாள். பளபளக்கும் தோள் வளைகள்; கை வளைகள் அவளை அலங்கரிக்கின்றன. தங்கக் கசலங்களைப் பழிக்கும் கொங்கைகளின் மீது முத்தாரங்கள் ஒளிவீசுகின்றன. தங்க ஒட்டியாணம் அணிந்திருக்கிறாள். நூபுரங்கள் அவள் கால்களை அலங்கரிக்கின்றன. புன்சிரிப்பு என்னும் அமுதம் பொழிகின்ற முகத்தை உடையவளாய் இருக்கிறாள். நெற்றியில் கஸ்தூரித் திலகம் தரித்து மின்னல் கொடியைப் பழிக்கின்ற திருமேனியோடு விளங்கும் தாமிரபரணி தேவி நான்கு கைகளை உடையவளாய் விளங்குகிறாள். சங்கு, பத்மம், வீணை, பெண் கிளி இவற்றை ஏந்தியிருக்கிறாள். இவள் சௌந்தர்யம் என்ற ராஜ்ஜியத்தில் செங்கோல் செலுத்துகின்ற சக்கரவர்த்தினியாகத் திகழ்கிறாள்.

கொடிப்பாசித் துண்டுகளைப் பழிக்கும் கூந்தல்; நீர்க்குமிழிகளை பழிக்கும் வஜ்ரமணிகள்; மீன்களைப் பழிக்கும் கண்கள்; அலைகளைப் பழிக்கும் முத்துமாலைகள்; நுரையைப் பழிக்கும் மேல்வஸ்திரம்; சக்கரவாள பறவைகளை பழிக்கும் தனங்கள்; மலர்ந்த தாமரை மலரைப் பழிக்கும் கை, கால்,முகங்கள்; அமுதப் பெருக்கைப் பழிக்கும் அழகு ஆகியவற்றைப் பெற்று எல்லாரையும் வியக்க வைக்கும் திருமேனி காரணமாகப் பரம மங்கள ரூபிணியாக விளங்குகிறாள் தாமிரபரணித் தாய்.

### சேடியர் பலர்

தாமிரபரணி தேவிக்குப் பற்பல சக்திகள் (யோகினிகள்) பற்பல உருவங்களைத் தாங்கிப் பணிவிடை செய்து வருகின்றனர். அவள் அருகில் முத்துச் சிலை என்பவளும் மணிவதி என்பவளும் இரண்டு பக்கங்களிலும் இருந்து தங்கத்தில் ரத்தினங்கள் பதித்த பிடிகளை உடைய இரண்டு வெண்சாமரங்களை வீசிக் கொண்டிருக்கிறார்கள்.

முழுநிலவைப் பழிக்கும் வெண்குடை ஒன்றினைப் பூர்ணாபூர்ணை என்பவள் பிடித்துக் கொண்டிருக்கிறாள். கோரை என்பவளும் குமுத்துவதி என்பவளும் மயில்பீலியால் ஆகிய விசிறிகளை விசிறிக்கொண்டிருக்கிறார்கள்.

இராவதி என்பவள் வெற்றிலைச் சுருளை எச்சரிக்கையுடன் தேவிக்குத் தந்து கொண்டிருக்கிறாள் என்றெல்லாம் வர்ணிக்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

இப்படி விளங்கும் தாமிரபரணி தேவிக்குச் சமுத்திரராஜனோடு திருமணம் செய்விக்கப்பட்டது. அவனுடைய இடது மடியில் அமர்ந்தாள் அவள். நாராயணனை லட்சுமிதேவி சந்தோஷப்படுத்தியது போலத் தன்னுடைய கணவனைச் சந்தோஷப்படுத்தும் தாமிரபரணி தேவியின் சிறப்புக்கள் மிகப்பல. அவை பற்றிச் சங்கமாமுனிவர் விவரித்த செய்திகள் அறிதற்குரியன.

## (22)

## தாமிரபரணியின் சிறப்புக்கள்

தாமிரபரணியின் சிறப்புக்களைத் தாம்ரபர்ணீ மகாத்மியம் 12-ஆம் அத்தியாயத்தில் சில சுலோகங்களில் பட்டியலிட்டிருக்கிறார் ச ங்கமாமுனிவர்.

தாமிரபரணி தேவியின் புன்சிரிப்புகளை நல்முத்து என்று செ ால்லலாம். இவருடைய அதரத்தின் சிவந்த நிறத்தை இளம் வெயில் என்றும் கொவ்வைக்கனி என்றும் கூறலாம். இவருடைய

*தீர்த்தத்தினால் வைடூரியங்களும் இவருடைய திருவடிகள் பூசியிருக்கும் செம்பஞ்சு குழம்பினுடைய சேர்க்கையால் மாணிக்க ரத்தினங்களும் உண்டாகின்றன. இவள் சிறப்புக் காரணமாக நவரத்தினங்களின் உற்பத்தி ஸ்தானமாக இருக்கிறாள். இவள் சற்றே அருள் செய்வதால் மூலிகைகள் சிறப்புற வளர்கின்றன என்றெல்லாம் சொன்ன முனிவர் இன்னும் சில விவரங்களைத் தருகிறார்.*

## தீர்த்தச் சிறப்பு

*உலகில் எண்ணிமுடிக்க முடியாத அதாவது அளவில் அடங்காத புனித நதிகள் இருக்கின்றன. எனினும் அவை எல்லாம் சேர்ந்தாலும் தாமிரபரணியின் மகத்துவத்துக்கு 16-ல் ஒருபங்குகூடச் சமமாகாது.*

*யாராவது ஒருவர் பிற நதிகளைத் தாமிரபரணி நதியோடு ஒப்பிட்டுப் பேசுவாரானால் அது பராசக்தியை அவமதித்த செயலாகும். எனவே அவர்கள் கற்பகாலம் முடிய ரௌரவம் என்ற நகரத்தில் தண்டிக்கப்படுவர்.*

*உலகத்திலுள்ள எந்தப் புண்ணிய தீர்த்தமாயினும் அது தாமிரபரணியின் தீர்த்தத் துளி ஒன்றின் பதினாறில் ஒரு பாகத்துக்குக்கூடச் சமமாகாது. எந்த நதியானாலும் அதில் தாமிரபரணி தேவி என்ற எண்ணத்தைச் செலுத்தித் தியானம் பண்ண வேண்டும். அப்படிச் செய்தால் அவர்கள் தாமிரபரணியில் ஸ்நானம் செய்தவர்களைப் போலவே அகமும் புறமும் சுத்தி பெறுவார்கள்.*

## தாமிரபரணியின் புண்ணியத் திருநாமங்கள்

*தாமிரபரணிக்கு ஏராளமான நாமங்கள் உண்டு. அவற்றுள் 24 பெயர்கள் மிகவும் புண்ணியம் தருபவை. அவற்றைத் தினந்தோறும் பக்தியுடன் பாராயணம் செய்பவர்களுக்கு இவ்வுலக இன்பமும் முக்தியும் கிடைப்பது நிச்சயம் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.*

*தர்மத்ரவா; பகவதி; தாம்ரா; மலையநந்திநீ;*

*பராபரா; அமிர்தஸ்யந்தா; தேஜிஷ்டா; கர்மநாசிநீ*

*முக்தி முத்ரா; கர்மகலா; கலிகல்மஷநாசிநீ;*

*நாராயணீ; பிர்மநாதா; நாதெயீ; மங்களாலயா;*

*மருத்வதீ; அம்பரவதீ; மணிமாதாமஹோதயா;*

*தாபக்நீ; நிஷ்களாநந்தா; த்ரயீ; திரிபதகாத்மிகா*

*என்னும் திருநாமங்களைத் தினந்தோறும் தியானித்து வழிபட எல்லா நலன்களும் விளையும்.*

### இன்னும் சில சிறப்புக்கள்

சம்சார சாகரத்தைக் கடக்க விரும்புவோர் தாம்ரபர்ணீ மகாத்மியத்தை அறிந்து கொண்டு ஒருமுறையாவது தாமிரபரணியில் குளித்தால் போதும் பலன் நிச்சயம் கிட்டும். இம்மகாநதியின் தூய்மையான தீர்த்தத்தின் ஒரு துளி அருந்தினாலும் போதும் மீண்டும் தாயின் கர்ப்பத்தில் அழுந்துவது உண்டாகாது.

இவள் சிறந்த கருணை புரிபவள் என்று தேவதைகளெல்லாம் உறுதி செய்து இம்மகாநதி தீரங்களின் ஆங்காங்கு எல்லாக் காலங்களிலும் வாசம் செய்கின்றன.

இந்நதியின் இரண்டு கரைகளிலும் அடிக்கு ஒன்றாக அநேக சிவக்ஷேத்திரங்கள், விஷ்ணு க்ஷேத்திரங்கள், துர்கா கணபதி பைரவ குமார க்ஷேத்திரங்கள் முதலானவை இருக்கின்றன. அதுமட்டுமல்லாமல் மாமுனிவருடைய சிறந்த புண்ணியம் தரும் ஆசிரமங்களும் இருக்கின்றன.

தாமிரபரணி மகாநதியைப் பார்த்தால் போதும் மனிதன் பாவத்திலிருந்து நீங்கிப் பரிசுத்தமாகிறான் என்று சொன்னார் சங்கமாமுனிவர். அடுத்துக் காதம்பரிவனம் என்ற பகுதியின் மகிமையை விவரிக்கிறார் அவர்.

## (23)

## சாபம் பெற்றனர் இருவர்

தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 13-ஆவது அத்தியாயத்தில் காதம்பரிவனத்தின் மகிமை சங்கமாமுனிவரால் வீரசேன மகாராஜனுக்கு விளக்கப்பட்டிருக்கிறது.

### பிரமனின் கர்வபங்கம்

க்ருதயுகத்தில் நான்முகன் பதினான்கு உலகங்களையும் சிறப்புறப் படைத்தான். அதன்பின் ''நம்மைத் தவிர வேறு யாரொருவராலும் இவ்வளவு அழகாகச் சிருஷ்டி செய்ய முடியாது'' என்று கர்வம் கொண்டான்.

பிரமன் இவ்விதமாக தற்பெருமை பாராட்டி அகந்தை கொண்டிருந்த நிலையில் ஓர் அசுரன் வந்து பிரமதேவனிடம் இருந்த நான்கு வேதங்களையும் பறித்துக் கொண்டு பாதாள உலகத்துக்கு ஓடிவிட்டான். அதன்பின் வேதங்களை இழந்த பிரம்மதேவன் படைத்தல் தொழில் ஆற்றும் திறமையை இழந்தான்; பல்லாண்டுக் காலம் வருந்தினான்; மூலப் புருஷனாக இருந்த நாம் இவ்வாறாகிவிட்டோமே என்று சஞ்சலம் கொண்டான்.

## பிரமன் செய்த தவம்

அறிவற்றவர்களுக்குச் சுகம் எந்தச் சமயத்திலும் கிடையாது. வாக்கு, செயல், அறிவு ஆகியவை தூய்மையாக இல்லாவிட்டால் உவர் நிலத்தினால் பலன் கிடைக்காமல் இருப்பது போல அவர்களுக்கு நன்மைகள் விளையாது. கர்வமில்லாமல் எல்லா உயிரினங்களையும் சமமாகப் பார்க்கின்ற பெரியவர்களுக்கு அணிமா முதலான எட்டுவகையான செல்வங்களும் தடையின்றிக் கைகூடுவது நிச்சயம் என்றெல்லாம் நினைத்தான். அதனால் தெளிவடைந்தான்.

பரமாத்மாவைப் பற்றி அறிய முற்பட்டான். ஹரியிடம் மனதைச் செலுத்தினான். அவரைக் கொண்டாடி மகிழ வேண்டும் என முடிவெடுத்தான். கடும்தவம் செய்யலானான்.

## மாலையைத் தொடர்ந்த மங்கை

ஹரியை நோக்கிப் பிரமன் கடும்தவம் செய்து கொண்டிருந்த நிலையில் அவன்முன் குரூர உருவம் படைத்த பெண் ஒருத்தி தோன்றினாள். அவள் உடல் உறுப்புக்கள் ஒட்டகத்தைப் போலக் காட்சி தந்தன. கரிய நிறம் கொண்டவளாக இருந்தாள். அவள் பிரமனை நோக்கி, ''சுவாமி! என்னுடைய விருப்பங்களெல்லாம் நிறைவேற வேண்டும். அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்'' என்று கேட்டாள். அவள் வேண்டுகோளைக் கேட்ட பிரமதேவன், ''உன் விருப்பங்கள் நிறைவேற வேண்டுமென்றால் அதற்குச் சாதகமான இடத்தில் நீ தவம் செய்ய வேண்டும். இதோ என்னுடைய கையில் உள்ள தண்டத்தில் காதம்பரி என்ற பெயர் கொண்ட பூமாலை உள்ளது. அந்தப் பூமாலையை உனக்காக நான் பூமியை நோக்கி வீசுகிறேன். அது எங்கே விழுகிறதோ அந்த இடத்தில் நீ தவம் செய்ய வேண்டும். அப்படித் தவம் செய்தால் நீ நினைத்ததெல்லாம் நடக்கும்'' என்று சொன்னான். சொன்னபடி தண்டத்திலிருந்த காதம்பரி மாலையைப் பூலோகத்தை நோக்கி வீசினான். மாலை பறந்தது; பிரமனை வணங்கி அந்தப் பெண் மாலையைத் தொடர்ந்தாள். கடைசியில் அந்த மாலை பாரதத்தின் கிழக்குக் கடற்கரை பகுதிக்கு வந்தது.

## பெண் கேட்ட வரம்

காதம்பரி மாலை விழுந்த பகுதியில் தவம் செய்யத் தொடங்கினாள். இந்திரியங்களை அடக்கினாள். மற்ற எவரும் செய்ய முடியாத அளவுக்குக் கடும் தவம் புரிந்து பரமசிவனை மனதில் தியானம் செய்யலானாள்.

நூற்றுக் கணக்கான ஆண்டுகள் அவள் செய்த தவம் காரணமாகப் பரமசிவன் அவளுக்கு வரம் கொடுக்க விரும்பி அவள்முன்

# (24)

# எல்லாம் விஷ்ணு மயமானது

தாம்ரபரணீ மகாத்மியத்தில் 13ஆவது அத்தியாயத்தில் இறுதியிலுள்ள மூன்று சுலோகங்கள் பிரமன் செய்த தவத்தை விளக்குகின்றன. 14ஆவது அத்தியாயத்தில் தவத்தின் இறுதியில் பிரமன் மகாவிஷ்ணுவைத் துதித்த சுலோகங்களும் மகாவிஷ்ணு அருள்செய்த தன்மையும் விவரிக்கப்பட்டுள்ளது.

## பிரமனின் தவம்

கலசி என்னும் கமண்டலம் காட்டிய இடத்தில் தவம்புரியத் தொடங்கினான் பிரமதேவன். மரகதப் பச்சையால் ஸ்ரீஹரியின் விக்ரகத்தை ஸ்ரீவஸ்தம், கௌஸ்துவம், பீதாம்பரம், அழகிய வதனம் உடையதாகச் செய்தான். அதனுள் விஷ்ணுவைப் பிரதிஷ்டை பண்ணினான். பக்தியுடன் ஹரியைத் தியானம் பண்ணி விக்ரகத்தில் ஆவாஹனம் பண்ணிப் பூஜை செய்யலானான்.

யோக சித்தியைத் தரக்கூடிய கருவிகளாலும் வேத வசனங்களாலும் கலச தீர்த்தத்தில் மும்முறை ஸ்நானம் செய்தான். இந்திரியங்களை அடக்கி மூன்று காலங்களிலும் ஹரியைப் பூஜை செய்தான். பூஜையின் முடிவில் ஆனந்தபரவசனாகிச் சிறந்த துதிகளைச் செய்தான்.

## பிரமன் செய்த துதிகள்

பிரமதேவன் செய்த துதிகள் ஒருமுறை படித்தாலே எல்லா வகையான அச்சங்களையும் நீக்கக்கூடியவை; எல்லாவகையான அனுகூலங்களையும் தரக்கூடியவை எனச் சங்கமாமுனிவரால் இத்துதிகள் போற்றப் பெற்றுள்ளன.

கடவுளே மேன்மையில் சிறந்தவரே! ஒளி தங்கி எங்கும் நிறைந்தவரே! அளவற்ற கருணையின் இருப்பிடமே! உமக்கு வந்தனம்! வேத வாக்கியங்கள் பருப்பொருளாகவும் நுண்பொருளாகவும் இருக்கின்ற (ஸ்தூல சூக்கும) இவ்வுலகத்தை உமக்கு இரண்டாவது ரூபமாகக் கூறுகின்றன.

சாமர்த்தியமிக்க யோகிகள் தாமரை மலரைப் பழிக்கின்ற தன்மை படைத்த உங்களுடைய திருவடி மனதில் நன்கு தியானிப்பதன் மூலம் உட்புகுந்து சம்சாரமாகிய கடலின் மறுகரையைத் தடையின்றி அடைகின்றன. அப்படிப்பட்ட ஜோதியானது என்னுடைய தாபத்தைத் தொலைக்க உதவ வேண்டும்.

தீங்கற்ற கடவுள் பெரியோர்களுக்குச் சிறந்த வாக்கியமாக விளங்கக் கூடியவரல்லவா? எந்தஒரு கடவுளும் எல்லா உருவங்களையும்

வேற்றுமையும் அடைந்து இவ்வுலகத்தைச் சிறந்த ஒளியால் முழுமை அடையச் செய்கிறாரோ அவர் என்னுடைய மேன்மைக்காகத் தோன்றி அருள் செய்ய வேண்டும்.

எந்தவொரு கடவுளுடைய திருவடித் தாமரை மலர்களை அடைந்து அதில் வாசம் பண்ணுவதை மோட்சத்தைக் காட்டிலும் சுகமளிப்பதாகக்கூறுகின்றனரோஅப்படிப்பட்ட வைகுண்டநாதனை மட்டும் சிறந்த துதிகளால் சிருஷ்டி என்ற தொழில் கைகூடுவதற்காகச் சரணடைகிறேன்.

எல்லா வகையான பொருள்களுக்கும் காப்பாளராக இருக்கின்ற கடவுளுடைய நாமங்களுள் எளிமையான நாராயண எனத் தொடங்கிய திருநாமங்களை வேடிக்கையாகச் சொன்னாலும் உரத்துச் சொன்னாலும் அல்லது நினைத்தாலும் உயிர்கள் தீங்கு என்னும் கடலை எளிமையாகத் தாண்டிவிட முடியும். அப்படிச் செய்விக்கும் ஹரியானவர் அடியேனுக்கு நன்மை தரவேண்டும்.

பேரொளிப் பிழம்பான இறையே! உன் மகத்துவதால் உலகமானது மேலும் கீழும் உள்ளும் வெளியும் மற்ற மற்ற இடங்களிலும் பரவி வியாபிக்கப்பட்டு நிலைத்திருக்கிறதோ எந்த உம்முடைய திருவடிகள் துன்பம் அற்றனவாகவும் எங்களைப் போன்றவர்களுக்கு நன்மையை விளைவிப்பனவாகவும் இருக்கின்றனவோ அப்படிப்பட்ட ஸ்ரீபாதங்களை உடைய உம்மை நான் மனதில் தியானம் பண்ணுகிறேன்.

வேதங்களை முற்றும் கற்றவர்களில் சிலர் கருமமாகிய கானகத்தில் ஜோதிஷ்டோமேந சொர்க்க காமோய ஜேத முதலான வாக்கிய விதிகளின்படி அனுஷ்டித்து வருகின்றனர். அவர்கள் கருமத்துக்கு மட்டுமே முக்கியத்துவம் தருவதோடு நிற்கின்றனர். 'த்ரைகுண்ய விஷய வேத நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந' ஸர்வ பூதாத் மசம் ஸ்தம்மாம் என்பது முதலான வாக்கிய விதிகளின்படி உம்மைத் தம் ஆத்மாவில் வீற்றிருக்கின்றவராகக் கண்டுபிடிக்கின்றனர் இல்லை. ஓநாதனே! புண்டரீக நேத்ரனே! நான் அப்படிப்பட்ட உம்மை துதிக்கிறேன்.

பிராணாயாமம் நாதப்ரம்மத்தை விசாரணை பண்ணுதல் பிராய சித்தம், யாகம், ஆத்மபோதம் ஆகியவற்றையெல்லாம் விட உமது திருவடிகளைப் புகழ்கின்ற திருநாமங்களை உச்சரிப்பதானது மோட்சத்திற்கு மிகச்சுலபமாக அழைத்துச் செல்லும் காரணமாகச் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட சிறப்புப் படைத்த உம்மை அடியேன் எல்லாக் காலங்களிலும் வணங்குகிறேன்.

ஸ்ரீஹரியே! பெரும் தைரியம் படைத்தவர்களும் பெண்டிர், மைந்தர் முதலான உறவுகளையும் தாமரைத் தடாகம் முதலானவற்றை உடைய மாட மாளிகைகளையும் துறந்து காட்டுக்கு வந்து சருகு முதலானவற்றைத் தின்று உமது திருவடிகளை அடைவதற்காகத் தவம் செய்கின்றனர். அப்படிப்பட்ட மகத்துவம் பொருந்திய உம்மைச் சரணடைகின்றேன்.

தாமரைக் கண்ணனே! என் தலையால் உமது திருவடிகளை வணங்குகின்றேன். சிறந்த வாக்கால் உன் திருநாமாக்களைச் சரணம் செய்கிறேன். பாவம் தாங்கிய என் மனத்தால் உம்மை நினைக்கிறேன். அநாதர்களுக்கு அருள்புரியும் உம்மையே சரணமாகக் கொள்கிறேன்.

எல்லாப் பொறி புலன்களையும் அடக்கி நிர்மலமாகி இருக்கிற எனது சித்தத்தில் யோகப் பயிற்சி முறையைப் பின்பற்றி ஓங்காரம் என்ற சின்னத்தை உடைய உம்மைத் தியானம் பண்ணுகிறேன்.

நமோ நமச்சாந்த குணாய வேதசே விசேஷ விக்ஞான குணப் பிரகாசிநே

**நமோஸ்து துப்யம் புருஷாய வை நம: பராய பாராயண தர்ம சாலிநாம்**

என இவ்வாறு ஹரியைத் துதித்தான் பிரமதேவன். அதன்பின் மீண்டும் நிஷ்டையில் ஆழ்ந்தான். சமாதி நிலையில் அவனுக்கு உலகம் முழுமையும் சர்வம் விஷ்ணுமயம் ஜகத் என்ற படிக்கு மகாவிஷ்ணுவின் மயமாகவே தென்பட்டது.

## (25)

# காதம்பரி வனத்தின் சிறப்புகள்

பிரம்ம தேவனால் அனுப்பப்பட்ட காதம்பரி மாலை விழுந்து அடையாளம் காட்டிய புண்ணிய பகுதி காதம்பரி வனம் என்ற பகுதியாகும். தாமிரபரணி நதிக்கரைப் பகுதியில் ஸ்ரீவைகுண்டத்தை அடுத்து ஆத்தூர் வரை அமைந்துள்ள பகுதி காதம்பரி வனம் என்று குறிக்கப்படும் பகுதி என்பர்.

### தவத்தால் மகிழ்ந்தமை

காதம்பரி வனத்தின் கலசி என்கின்ற பிரமனின் கும்பம் தங்கிய பகுதியில் பிரம்மதேவன் தவம் செய்தான். ஹரியைத் துதித்த பிரம்மதேவன் உலகில் உள்ள எல்லாவற்றையும் விஷ்ணுமயமாகவே கண்டான். ஒரு நூற்றாண்டுக் காலம் சென்றது. தவத்தால் மகிழ்ந்த விஷ்ணு பகவான் கருடன் மீதேறி அவனுக்குக் காட்சி தந்தார். அவனை

நோக்கி உன்னுடைய கடும் தவத்தாலும் சிறந்த துதியாலும் நாம் பெரிதும் மகிழ்ந்தோம். வைகுண்டத்தைக் காட்டிலும் பாற்கடலைக் காட்டிலும் உன்னால் நிறுவப்பட்டுள்ள இந்தத் தலமானது நமக்குச் சந்தோஷத்தை விளைவிக்கின்றது என்பதில் எந்த ஐயமும் இல்லை என்று சொன்னார். அதன்பின் அவ்விடத்திலிருந்து பாதாள உலகத்துக்குச் சென்று அசுரனை எமபுரிக்கு அதிதியாக அனுப்பி (கொன்று) வேதங்களை எடுத்துவந்து நான்முகனுக்கு அளித்தார்; புண்ணியத் தலமான அப்பகுதியில் அந்தர்த்தானம் பண்ணினார்; அதன்பின் மறுபடியும் நான்முகன் ஹரியைப் பூஜை செய்தான். இப்படி நான்முகன் ஹரியைப் பூஜித்த தலமே ஸ்ரீவைகுண்டமாகும்.

### சிறப்புப் பெயர்கள்

பிரமனின் கும்பம் தீர்த்தச் சிறப்புடையது; எல்லாவகையான தீர்த்தங்களாலும் போற்றப்படும் கலசி என்று சொல்லப்படுகின்ற கும்பம் தங்கிய இந்நீர்த்துறை மனிதர்களுடைய பாவத்தைத் தொலைத்துக் கொண்டிருக்கிறது என்று பிரம்மதேவனுக்கு மகாவிஷ்ணு அருள்செய்தார். அதுமட்டுமன்றி உன்னுடைய கலசி அதாவது கும்பம் வீற்றிருக்கிற படியால் இந்த வனமானது கும்பாடவி என்ற திருநாமம் பெற்று விளங்கக்கடவது என்றும் இவ்விடத்திலுள்ள உயிரினங்களுக்கு அருள்வதற்காக வைகுண்டத்தில் அருள்புரிந்து வருவது போலவே இங்கேயும் வாசம்பண்ணி அருள்கிறேன் என்றும் பிரமனிடம் மகாவிஷ்ணு அருள்செய்தார் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (26)

## தண்டதரனுக்குப் பிரம்மன் சொன்ன அறிவுரை

பிரம்மதேவன் தான் தவமிருக்க தக்க இடம்தேடித் தருமாறு தன் கையிலிருந்த தண்டத்தை அனுப்பினான். பிரம்மச்சாரியாக உருவெடுத்த தண்டதரன் என்கின்ற தருமதரன் அங்கே திரிந்த தமசி என்ற பெண்ணுடன் இன்பத்தில் ஈடுபட்டுத் தான் வந்த வேலையை மறந்தான். இதனை ஞானக்கண்ணால் அறிந்த நான்முகன் தண்டதரனை மானிட நிலையை அடையுமாறும் அவனை மயக்கிய மங்கையைக் கிழட்டுப்புலியாக மாறவும் சபித்தான் என்பது முன்பு சொல்லப்பெற்ற செய்தி.

### தருமதரன் வேண்டுதலும் பிரம்மனின் பதிலும்

பிரம்மதேவன் ஹரியைப் பூஜிப்பதை அறிந்த தருமதரன் என்ற பிரம்மச்சாரியான தண்டதரன் அவ்விடத்துக்கு வந்தான். பிரமனை

வணங்கினான். ''சுவாமி! குற்றமற்றவனாகிய என்மீது கொடிய சாபத்தைப் பொழிந்தீர்கள். அந்தச் சாபத்திலிருந்து விமோசனம் எப்போது கிடைக்கப் போகிறது? எவ்வாறு கிடைக்கப்போகிறது? என்றருள வேண்டும்'' என்றான்.

தருமதரன் வேண்டுகோளைக் கேட்ட பிரம்மதேவன், ''குழந்தாய் தண்டமாகிய நீ நமது கைகளுக்குச் சிநேகிதனாகவும் பக்தனாகவும் ஊழியனாகவும் இருக்கின்றாய். உனது செயலுக்குக் கிடைத்ததான பயனைப் பற்றித் துன்புறுதல் கூடாது. அறிவுள்ளவர்களுக்கு (சத்து) அறிவற்றவுடையவர்களுடைய (அசத்து) சேர்க்கைஉண்டாகுமானால் தீங்கு நேரிடுவது நிச்சயம். இதுபற்றிக் கற்றுணர்ந்தவர்கள் துன்பப்படுவதில்லை; மூடர்கள் வருத்தப்படுவார்கள்.

சீதம் (குளிர்ச்சி), உஷ்ணம் (வெப்பம்); சுகம் (இன்பம்); துக்கம் (துன்பம்) இவ்விதமான இரட்டைகளைச் சமமாகப் பாவித்துப் பொறுத்துக் கொள்பவர்களே கற்றுணர்ந்தோர் ஆகின்றனர். அப்படிப்பட்டவர்கள் மோட்சத்தைப் பெறுகின்றனர் என வேதாந்த நூல்களில் சாரம் சொல்லப்பட்டிருக்கிறது என்றெல்லாம் விடை சொன்னார் பிரம்மதேவன்.

## பிரம்மன் காட்டிய வழி

அதன்பின் பிரம்மதேவன் தண்டதரனிடம் அவன் இனிமேல் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதனை அறிவுறுத்தினார். அது வருமாறு:

இன்னும் கொஞ்ச காலத்தில் பாபமற்றவர்களாய், ஆதிபரா சக்தியாய், சதாசிவருக்மணியாய், மலையராஜகுமாரியாய் மூன்று உலகங்களையும் தூய்மைப்படுத்தக் கூடியவளாகிய தாமிரபரணி யானவள் பெருவெள்ளப் பெருக்குடன் இவ்விடம் வரப்போகிறாள்.

அம்மகாநதியில் ஸ்நானம் பண்ணி நீ என்னை மறுபடியும் வந்து சேருவாய் என்று சொன்ன பிரம்மதேவன் இன்னொரு முக்கியமான செய்தியையும் அவனுக்குச் சொன்னார்.

## கும்பிநசியும் தாமசியும்

இவ்விடத்திலிருந்து நான்கு யோசனை தூரத்தில் (32 மைல்) மேற்காகச் சவுண்டீரகம் என்ற புண்ணியத் தலம் இருக்கிறது. அங்கே பரமேஸ்வரன் கோயில் கொண்டிருக்கிறார். அந்தப் பகுதியில் கௌதம மகரிஷியினுடைய ஆசிரமம் இருக்கிறது. ஒரு யோசனை சுற்றளவுள்ள அந்த ஆசிரமத்தை அதாவது சிவன் அருள்புரிகின்ற சவுண்டீரக வனத்தைக் கும்பீநசி என்பவள் அழிக்க முற்படுகிறாள்.

இந்தக் கும்பீநசி ஏகத மகரிஷியின் மகளாவாள். கௌதம மகரிஷியின் சாபத்தினால் அழகினை இழந்த இவள் ராக்ஷசியாகி நின்மானுஷ்யமாக அந்தப் பகுதியைக் கெடுத்து வருகிறாள்.

பெண் கடுவாயாக நம்மால் சாபம் கொடுக்கப்பட்ட தாமசியும் இக்கடற்கரைப் பகுதியில் நெடுங்காலம் கடுவாயாக உலவி வருத்தமடைவாள். முடிவில் தாமிரபரணி பெருகிவரும் போது அந்தத் தீர்த்தத்துடன் சம்பந்தப்பட்டுச் சாபவிமோசனமுற்று சவுண்டீரக வனத்திலிருக்கிற கும்பீநசியின் தோழியாவாள் என்று நான்முகன் கூறினான் என்கிறது தாம்ரவர்ணீ மகாத்மியத்தில் உள்ள 14வது அத்தியாயம்.

காதம்பரி மாலை அவ்விடத்தில் வந்திருந்த காரணத்தால் காதம்பரிவனம் எனப்பட்ட கீழச்சமுத்திர கரையானது கடுவாயாக அதாவது புலியாகத் தாமசி உலவிய காரணத்தால் வியாக்கிராடவி என்ற பெயரும் கொண்டது என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (27)

## புலி பூவையானது

அகத்திய முனிவர் தாமிரபரணி தேவியைச் சமுத்திரராஜனோடு சேர்த்துவிட்டுத் திரும்பவும் பொதிகையை நோக்கி வந்து கொண்டிருந்தார். அப்போது அவருடன் ஹயக்ரீவர், அத்திரி, மாண்டவ்யன், கௌதமன், ஆங்கிரஸ், வசிஷ்டர், ரோமசன், குருவாசஸ், கபிலன் முதலான பெருந்தவசாலிகள் வந்து கொண்டிருந்தனர். தாமிரபரணி சங்கமத்தின் மூன்று பிரிவுகளிலும் சாஸ்திர முறைப்படி ஸ்நானம் செய்தனர்; தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் தர்ப்பணம் பண்ணினர்.

### அகத்தியர் செய்த வழிபாடு

அகத்தியர் சாஸ்திர முறைகள் அறிந்தவராகையால் தீர்த்த சிரார்த்தம், க்ஷேத்திர பிண்டம் இவைகளைச் செய்து நிசாபிஷ்டத்தினால் ஸ்ரீதாம்பிரவர்ணீ தேவியின் சிறந்த விக்ரகத்தைச் செய்து அதில் தேவியை ஆவாஹனம் பண்ணிக் கந்தம், புஷ்பம், அக்ஷதை, பொறி, தூபம், கர்ப்பூரம் முதலியவற்றால் பூஜை செய்தார். விதிப்படி நைவேத்யம், தாம்பூலம் முதலானவைகளாலும் உபசாரம் பண்ணினார். ''நமஸ்தே;தேவி கல்யாணி; மகாபாதக நாசினி, தாம்ரபர்ணீத் துவயிஸ் நாஸ்யே பாஹிமாம் பவ ஸாகராத்'' இந்த மந்திரத்தைச் சொல்லி பிரார்த்தனை செய்தார். வந்தனம் அளித்தார். விக்ரகத்தைத் தீர்த்தத்தில் இட்டார். மறுபடியும் ஸ்நானம் செய்தார்.

அதன்பின் முனிவர் கூட்டங்களுடன் சமுத்திர தீரத்தில் வாசம் பண்ணினார். அந்தநேரத்தில்...

### புலி பெண்ணானது

வஜ்ராயுதத்தினால் மலையைப் பிளந்ததுபோலப் பேரொலி கேட்டது; பூமி குலுங்கிற்று; பலரும் பயந்து ஓடினர். அப்போது வீசிய காற்றினால் கடல் அலைகள் உடைந்து தண்ணீர் ஒரு பக்கமாகச் சேர்ந்திருக்கச் சமுத்திரம் சுருங்கிவிட்டதுபோல் தோன்றியது. பறவைகள் அலறின; ஆகாயத்தில் வட்டமிட்டன; ஆகாயத்தில் சஞ்சரித்த சித்தர்கள் நடப்பதென்ன என்று தெரியாமல் தவித்தனர்.

அப்போது மலைபோன்ற உருவத்தை உடைய ஒரு கொடிய கடுவாயானது வாலை அடிக்கடிச் சுற்றிக் கொண்டு வீசியடித்துப் பயங்கரமாக ஒலித்துக் கொண்டு அகத்திய முனிவரின் முன்பாக வந்தது.

புலியைக் கண்டு வியப்படைந்தார் அகத்தியர். மனதைச் சமாதானத்தில் நிறுத்திப் போலியாகக் கோபித்துக் கூங்காரம் பண்ணினார். அந்தக் கூங்கார ஒலியால் அருகில்வந்த புலி பஞ்சுப்பொதிபோல் பறந்தது; தாமிரபரணி நதியில்வீழ்ந்தது. தண்ணீர்த் திவலைகள் ஆகாயத்தில் கிளம்பின. அந்தநிலையில் அந்தக் கடுவாய் மேகத்தின் இடிபோலக் கடுமையாக ஒலித்து முடிவில் உயிரை விட்டது.

தாமிரபரணி நீரிலிருந்து அந்த இடத்தில் அழகிய ஒரு பெண் தோன்றினாள். சர்வாலங்கார பூஷிதையாக விளங்கிய அவள் சிவந்த கடைக்கண் உடையவளாய் இருந்தாள். புன்னகை தவழும் உதடுகளுடன் தாமரை மலர் போன்ற முகத்தினைப் பெற்றிருந்தாள். அகத்தியர் முனிவர் அருகில் வந்தாள். அகத்திய முனிவரிடம் அவள் வேண்டிய விஷயமும் அதனை அவர் நிறைவேற்றியமையும் சுவையான செய்திகள்.

## (28)

## தாமசி சங்கராஜன் திருமணம்

பிரம்மதேவன் சாபத்தால் தாமசி கிழட்டுப் புலியானாள். அகத்திய முனிவரின் கூங்காரத்தால் தாமிரபரணியில் வீழ்ந்தாள். தாமிரபரணியின் சம்பந்தத்தால் அழகிய உருவத்தை உடைய பெண்ணானாள். அகத்திய முனிவரிடம் வந்தாள்; வணங்கினாள்; தன் விருப்பத்தைத் தெரிவித்தாள்.

## தாமசியின் வேண்டுகோள்

அகத்திய முனிவரின் பாதங்களைப் பணிந்து வணங்கிய தாமசி அவரை நோக்கி, "உத்தமோத்தமரே, பிரபுவே! நான் மன்மதனுடைய கொடிய கணைகளால் உண்டான விஷாக்னியின் ஜுவாலைகளால் பெரிதும் துன்பமடைகிறேன்; பொறுக்கமுடியவில்லை.

இந்த மதன தாபத்தைத் தொலைப்பதற்காக மிகக்குளிர்ச்சி பொருந்திய தாமிரபரணி தீரத்தில் ஸ்நானம் பண்ணினேன். ஆனாலும் என்னை வருத்தும் இந்த காமாக்னி இத்தீர்த்தத்தால் சமனமடையவில்லை. விரகாக்னி என்னைக் கொன்றுவிடுவதற்கு முன்னால் என்னை அனுபவிக்கும் யோக்யாதம்சம் படைத்த ஒரு புருஷனை ஏற்படுத்தித் தந்தருள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள்.

## அகத்தியர் தந்த ஆறுதல்

தன்னிடம் வருத்தத்தைத் தெரிவித்த தாமசியை நோக்கி, "நீ மனம் கலங்க வேண்டாம். உனக்கு ஏற்ற மணாளன் இருக்கிறான் அவன் மன்மதனைப் போன்றவன்; பேரழகன்; சங்கராஜன் என்பது அவன் பெயர்; சமுத்திர ராஜனுக்கு வீசிமாலை என்பவளிடம் பிறந்தவன். அவன் உன்னை மணம் செய்து கொள்வான்; உன் மனக்கலை போக்குவான்" என்று அருள்செய்தார்.

சங்கராஜனை மனதில் நினைத்தார். உடனே அவன் சமுத்திரத்திலிருந்து புறப்பட்டு அகத்திய முனிவரிடம் வந்தான். வணங்கினான்; கைகட்டி வாய்புதைத்து முனிவரிடம் வேண்டிக் கொண்டான். "சுவாமி! அடியேனை அதிவிரைவாக வருமாறு அழைத்தீர்கள். நான் செய்ய வேண்டிய பணி என்ன? உத்தரவிடவேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

அகத்தியர் அவனை நோக்கி, "உன்னைக் கண்டு மகிழ்கிறேன். அருகிலுள்ள இந்த அழகி நல் குலமும் குணமும் மிக்கவள். நீ இவளுக்கு இசைந்த நாயகன். இவளை நீ மணந்தால் உனக்கு நன்மைகள் உண்டாகும்" என்று அவர் சொல்லும்போதே இருவரும் மணம் செய்ய வேண்டும் என அசரீரி ஒலித்தது.

## திருமணம்

அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போது தாமசி சங்கராஜன் அருகில் வந்தாள். மதுமதி என்ற பெயர் கொண்ட பூமாலையை எடுத்து அதை சங்கராஜன் கழுத்தில் இட்டாள். அப்போது தேவ துந்துபிகள் முழங்கின; மலர்மழை பொழிந்தது.

சங்கராஜன் தாமசியைத் திருமணம் செய்து மனிதன் கல்வியை அடைந்ததுபோல மேன்மை பெற்றான். ரதிதேவியும் மன்மதனும் போலவும் ஒருவருக்கொருவர் சமமான அழகு பொருந்திய அந்த மணமக்களை அனைவரும் கண்டனர்; அகத்தியரும் மகிழ்ந்தார்.

## கழுத்தில் விழுந்த மாலைகள்

முனிவர் கூட்டம் மகிழ்ந்திருந்த அந்த நேரத்தில் தாமசியால் சங்க ராஜனுடைய கழுத்தில் இடப்பட்ட மாலையானது ஆகாயம் நோக்கி கிளம்பியது. ஆகாயத்துக்கு கிளம்பிச் சென்ற அந்த ஒரு மாலையிலிருந்து நூறு- ஆயிரம் என மாலைகள் கிளைத்தன. அந்த நிலையில் ஆகாயம் நாகங்கள் இருக்கும் பாதாள உலகம் போலக் காட்சி தந்தது.

ஆகாயத்திலிருந்த மாலைகளிலிருந்து இரண்டு மாலைகள் பூமியை நோக்கி வந்தன. ஒன்று சங்கராஜன் கழுத்திலும் மற்றொன்று தாமசியின் கழுத்திலும் விழுந்தன. இதைக் கண்ட சங்கராஜன் தன் மனைவியுடன் சேர்ந்து சிரித்தான்.

## பூமாலையின் பூர்வ கதை

சிரித்த தம்பதியரைப் பார்த்து நாரத முனிவர் பூமாலையின் பூர்வ கதையை விவரித்தார். இந்த தாமசி ஒரு காலத்தில் பிரம்மதேவனின் முகத்திலிருந்து உண்டானவள். அவள் பிரம்மன் கொடுத்த மாலையைப் பின்தொடர்ந்து இந்தத் தீரத்துக்கு வந்தாள்; தவம் செய்தாள். பரமசிவனின் அனுக்ரகத்தால் வரங்களைப் பெற்றுப் போகங்களை இஷ்டப்படி அனுபவித்தாள். அதனால் அவர் பிரம்மதேவன் சாபத்துக்கு ஆளானாள்; கிழப்புலியானாள்; அகத்தியர் முனிவர் அருளால் தாமிரபரணியின் சம்பந்தம் பெற்று அதாவது ஸ்நானம் செய்த காரணத்தினால் சாபவிமோசனம் அடைந்தாள். அகத்தியர் அருளால் உன்னைக் கணவனாக அடைந்தாள்.நீயும் மிகப்பல புண்ணியங்கள் செய்திருந்த காரணத்தால் தாமசியை மனைவியாகப் பெற்றாய்.

உன் கழுத்தில் விழுந்த மாலை பிரம்மனுடைய மாலை. அது உங்கள் இருவரையும் சேர்த்து வைத்துவிட்டு மறுபடியும் சத்ய லோகம் சென்றுவிட்டது. நீ உன் மனைவியுடன் தாமிரபரணி தீரத்திலிருந்து அன்னை தாமிரபரணியைப் பூஜித்து வருவாயாக. அவள் உங்களுக்கு மகாயோகங்களைக் கொடுப்பார் என்றார் நாரதர்.

## சோமாரண்யத்தில் சங்கராஜன்

நாரத முனிவரின் உத்தரவைத் தலைமேற்கொண்டான் சங்க ராஜன். அங்கு இருந்தவர்களிடம் விடைபெற்றான். தகப்பன் தந்த

விமானத்தில் ஏறினான். பலராலும் துதிக்கப்பட்டான். சோமாரண்யம் எனப்படும் ஆத்தூரை அடைந்தான்.

சோமாரண்யம் என்ற பகுதி தாமிரபரணி சங்கமிக்கும் கீழைச் சமுத்திரத்துக்கு மேற்கே நான்கு மைல் தூரத்தில் தாமிபரணியின் தென்கரையில் உள்ள பகுதி. அந்தச் சோமாரண்யத்தில் சதீபுரம் என்ற பெயர் கொண்ட சிறந்ததொரு நகரை உருவாக்கினான் அவன். அது ஆத்தூர் என்றழைக்கப்படும் ஊராகும். அங்கேயிருந்த சங்கராஜன், தன் மனைவியுடன் அங்குக் கோயில் கொண்டுள்ள அருள்மிகு சோமசுந்தரியுடனான சோமநாதரைத் தொடர்ந்து வழிபட்டான். இவ்விதமாகச் சில நூற்றாண்டுகள் வழிபட்டு இறுதியில் பிரம்மலோகம் சென்றான் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (29)

## திருநெல்வேலிக்கும் முன்னால்

சமுத்திரராஜனோடுதாமிபரணிதேவியை சேர்த்துவைத்தபின்னால் அவளுடைய அனுக்ரகம் பெற்ற அகத்தியர் சோமாரண்யம் பகுதியிலிருந்த நதிபுரி எனப்படும் ஆத்தூரில் சங்கராஜனை இருக்குமாறு செய்வித்து அவ்விடத்தில் கோயில் கொண்டுள்ள விஷ்ணு பகவானையும் சிவ பெருமானையும் பக்தியுடன் வணங்கினார். பின் தாமிரபரணியில் வடகரையில் இருக்கிற பெருங்குளம் மாயக்கூத்தனை வணங்கினார். பகுளவனத்தில் உள்ள ஆதிநாதனான மகாவிஷ்ணுவைத் தரிசித்தார். ஸ்ரீவைகுண்டத்தில் பெருமாளையும் நாணல்காட்டில் சூரிய பகவானையும் வந்தனம் பண்ணினார். மருவூரில் மரகதவல்லியையும் பக்தியுடன் தரிசித்தார். அவ்விடத்தில் ஓர் இரவு மறுநாள் காலைக்கடன்களை முடித்துவிட்டுப் பிரமவர்த்தபுரம் என்கிற திருநெல்வேலிக்குச் சென்றார் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் உள்ள 16ஆம் அத்தியாயத்தில் அமைந்த ஒரு பகுதி. அதன்பின் திருநெல்வேலியின் மகிமைகள் அந்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன.

## (30)

## திருநெல்வேலியின் பெருமைகள்

திருநெல்வேலியில் சிவபெருமான் காந்திமதி அம்மையுடன் இடைவிடாமல் அருள்புரிந்து வருகிறார். ஸ்ரீதாமிரபரணியின் மேற்குக் கரையில் மிகவும் தூய்மையான பகுதியாக இருப்பது

வேணு (மூங்கில்) வனமாகும். இதனுள் பிரமவர்த்தபுரம் என்னும் பெயருடையதும் உலகில் மிகவும் சிறப்புடையதாய் அரை யோசனை தூரம் விஸ்தாரம் உள்ளதாயும் சர்வதோபத்ரம் என்று கொண்டாடப்படுவதாயும் இருக்கிற நகரம் ஒன்று உண்டு.

## வேறு பெயர்கள்

திருநெல்வேலியில் தெற்கு வடக்குப் பாகங்களில் மிகவும் நுண்ணிதாகப் புண்ணிய பாவனங்களைஉடையதாகப் பரையென்றும் அனுபூதி என்றும் பெயர் கொண்டவைகளான இரண்டு நதிகள் ஓடிக் கொண்டிருக்கின்றன. இவ்விரு நதிகள் பரை தெற்குப் பாகத்திலும் அநுபூதி வடக்குப் பாகத்திலும் ஓடும் காரணத்தால் இந்நகரத்துக்குப் பராநுபூதி என்று பெயர் எனத் தேவர்கள் கூறுகின்றனர்.

கிருத யுகத்தில் சப்ததந்து என்பவரின் மகளாகிய உத்ரவதி என்பவள் இங்கே தவம் செய்தாள். அவள் தவத்தால் மகிழ்ந்த லோகமாதாவான பார்வதி தேவியால் கம்பை என்ற நதியின் கரையில் பிரதிஷ்டை செய்யப்பட்டதான காஞ்சீபுரியை இவ்விடத்துக்கு வரவழைத்துக் காண்பித்தாள். எனவே இந்த நகரைத் தட்சிண காஞ்சி என்றும் சொல்வார்கள்.

சிவபெருமான் வேலியாக இருந்து பெருமழையிலிருந்து நெல்லைக் காப்பாற்றினார். எனவே இந்த ஊர் நெல்வேலி எனவும் சாலிவாடி நகரம் என்றும் சொல்லப்படும்.

## அரசரும் அன்னையும்

திருநெல்வேலியில் சிவபெருமானே பாண்டியராஜனாக இருந்து கொண்டு செங்கோல் செலுத்தித் தானம் கொடுத்துப் பிராமணர் களைப் பெருந்தனவந்தர்களாக்கி மிகச்சிறந்த முறையில் அரசு புரிந்தார்.

இந்நகரில் பராசக்தியானவள் 32 லட்சணங்கள் அடங்கி அருள் செய்து வருகிறார். இந்நகரில் சிவபெருமான் பக்தருடன் ஆவிர்பவித்தார். இங்கேதான் பார்வதிதேவியையும் பரமசிவனையும் ஆராதித்துக் கொண்டு மகாவிஷ்ணு சயனம் பண்ணி வருகிறார்.

இவ்விடத்தில் பக்தர்களின் நன்மைக்காகச் சிவபெருமான் மகாகங்காளராய் வீதிகள்தோறும் பலிஉழன்று வருகிறார்.

இந்நகரில் துர்காபகவதி, ராஜராஜேஸ்வரி என்று நாமம் கொண்டு சிவபெருமானைப் பிரார்த்தனை பண்ணி வருகிறாள்.

## அகத்தியர் வருகையும் பூஜையும்

*திருநெல்வேலி நகரத்துக்கு அகத்திய முனிவர் பிற முனிவர்களுடன் வருகை தந்தார். உத்தரவாகினியாக ஓடுகின்ற தாம்பிரபரணியில் முறைப்படி ஸ்நானம் செய்தார். பிதுர்களுக்கும் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் விதிப்படித் தர்ப்பணம் பண்ணினார். தீர்த்த தேவியான தாமிரபரணியையும் வேணுவனநாதரையும் காந்திமதியையும் சந்தனம், பூ, அக்ஷதை முதலியவைகளால் பூஜை செய்தார். அதன்பின் ஆதிசேஷனில் பள்ளிகொண்டிருக்கக் கூடிய மகாவிஷ்ணுவைத் துர்காதேவியையும் விநாயகரையும் கங்காளநாதரையும் ஆறுமுகக் கடவுளரையும் முறைப்படி துதித்தார். பின்னர்க் கமல (தாமரை) மலர் பீடத்தில் எழுந்தருளிக்கும் கம்பாதேவியைக் கொண்டாடினார்.*

*மதியம் பொற்றாமரையில் மாத்யானிக ஸ்நானம் செய்தார். துணைவியுடனும் முனிவர்களுடனும் க்ஷேத்ரோபவாசம் இருந்தார். காந்திமதியம்மனின் சந்நிதானத்தில் இருக்கிற பொற்றாமரை தீரத்திலிருந்து பற்பல விநோத சரித்திரங்களைச் சொல்லிக் கொண்டு சிவத்தியானத்துடன் ஓர் இரவைக் கழித்தார்.*

*மறுநாள் சூரியன் உதயம் செய்தான். பொற்றாமரையில் அகத்தியர் ஸ்நானம், சந்தியாவந்தனம் முதலியவற்றைச் செய்தார். பின் நெல்லையப்பருடைய சந்நிதானத்துக்குச் சென்றார்.*

## சிவன் தந்த தரிசனம்

*அகத்தியர் தரிசனம் செய்த நேரத்தில் வருண பகவான் அவருடைய மகன்களுடன் தும்புரு முனிவர் மற்றும் அநேக சித்தர்களுடனும் அங்கே வந்து சேர்ந்தார். அந்தச் சமயத்தில் வடதிசையில் பேரி, படகம் முதலான வாத்தியங்களும் ஒலித்தன.*

*அந்த நேரத்தில் ஆகாயத்தில் சூரிய ஒளியைப் பரவச் செய்துகொண்டு சிவபெருமான் எழுந்தருளினார். விருஷப வாகனத்தின் மீது எழுந்தருளியிருந்தார். ஆதி யுவதியாய் இருக்கக் கூடிய பார்வதிதேவியை மடியிலும் கங்கையைச் சிரசிலும் தரித்துச் சந்திரப் பிறை சூடியவரான சிவபெருமான் காட்சி தந்தார்.*

*ஒருவருக்கு ஒருவர் சமானரூபம், இளமை, இயையப் பெற்றவர்கள் இச்சாமாத்திரத்தினால் ஆதிதம்பதிகளாக இருந்து உலகத்திற்கு அம்மையப்பராக இருப்பவர்களான பார்வதிதேவியும் பரமசிவனும் அந்த வேணுவனத்தின் மத்தியில் ரிஷபாரூடராக எழுந்தருளினர். அப்போது பூதகணங்கள் உள்ளிட்ட மிகப்பலரும் கடவுளைச் சுற்றி அகம்படி சேவித்தனர்.*

கங்கை முதலான புண்ணிய நதிகளும் நதங்களும் அநேக தீர்த்தங்களும் எல்லாச் சமுத்திரங்களும் நாற்புறங்களிலிருந்தும் வந்து சேர்ந்தன. விந்தியம் முதலான எல்லா மலைகளும் மனித உருவெடுத்துச் சந்தோஷமாக அங்கு வந்தன.

## சிந்துபூந்துறை

இப்படி எல்லாத் தேவதைகளும் வந்தபின் அவர்கள் அனைவரும் சிவபெருமானுடன் அவருடைய சந்நிதானத்தில் வடக்குமுகமாகச் செல்லுகிற தாமிரபரணி நதியில் புஷ்பங்களைச் சிந்திக் கொண்டு புனிதநீராடினர். கங்கைமுதலானநதிகளும்புஷ்பங்களைப்பொழிந்து சரீர சுத்திக்காக அப்புண்ணிய தீர்த்தத்தில் நீராடினர். தேவர்களும் நான்குபுறத்திலும் மிகப்பல பூக்களைச் சிந்தி வழிபாடாற்ற யோசனை தூரம் நீண்டதான வேணுவனமானது புஷ்பங்களால் மறைக்கப்பட்டு விளங்கிற்று. இந்தக் காரணத்தினால்தான் இந்தத் துறை பூக்களைச் சிந்தி அகத்தியர் முதலியவர் நீராடியதால் சிந்துபூந்துறை எனப்படலாயிற்று என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

பாரிஜாத மரங்களிலிருந்து கொய்யப்பட்ட மலர்கள் தாமிரபரணியின் மீது பரவியிருந்ததால் அவள் விசித்திர நிறமுள்ள ஆடைதாங்கியவள் போலக் காட்சிதந்தாள். அம்மலரின் மகரந்தங்கள் சேறாகி நதியின் எல்லாப் பக்கங்களிலும் பரவியிருந்தமையால் தாமிரபரணி ரத்தசந்தனத்தைப் பூசிக் கொண்டிருப்பதுபோல் விளங்கினாள்.

## அகத்தியரின் வழிபாடு

இவ்வாறு அழகிய தோற்றத்துடன் இருந்த தாமிரபரணியை - மகாபாவங்களைப் போக்குகிற தேவியை அகத்தியர் ஸ்தோத்திரம் செய்தார். பின்னர்த் தேவர்கள் முதலிய அனைவரும் அந்நதியில் குளித்து ஆசமனம் செய்தனர். அதன்பின் அகத்தியர் நெல்லையப்பர் கோயிலை அடைந்தார்.

## நெல்லையப்பரைத் துதித்தல்

நெல்லையப்பரை அடைந்த அகத்தியர் மெய்மயிர் சிலிர்த்து அவருடைய விருப்பம் நிறைவேறியமையை வெளிப்படுத்தும் விதத்தில் ஓர் அழகிய தோத்திரம் சொல்லி இறைவனை வணங்கினார்.

''கல்யாணக் கோலம் கொண்டு எல்லாப் பாவங்களையும் அழிக்கின்ற சிவபெருமானே! உமக்கு வந்தனம்! உலகத்திலுள்ள கற்றறிவு உள்ளவர்களுடைய இதயமாகிய கோயிலில் களைப்பாறும் கடவுளே! உனக்கு வணக்கம்!

சமநிலையுடைய சாதுக்களுடைய மனதில் வசிக்கின்ற உனக்கு வணக்கம். அசாதாரணமான செயலை எளிமையாகச் செய்யக்கூடியவனும் யானைத் தோலை ஆடையாக அணிந்தவனுமான உமக்கு வந்தனம்.

கருத்த கண்டத்தை உடையவனும் இடதுபக்கத்தில் பெண் உருவம் பெற்றவனும் உலகத்திற்கு நன்மையைச் செய்பவனுமான உனக்கு வந்தனம்.

பாதி உடலில் மரகதப்பச்சைப் போன்றவனும் மீதிப் பகுதியில் ஸ்படிக நிறமுடையவனுமான உனக்கு வந்தனம். அத்துவிதமாயினும் அதாவது ஒன்றாயினும் இரண்டாகத் தோன்றுகின்ற பரஞ்ஜோதியே உன்னைத் துதிக்கிறேன்.

பார்த்துப் பார்த்துத் திகட்டாத அழகின் இருப்பிடமும் மங்களத்தின் வாசத்தானமும் ஆச்சரியத்தை விளைவிக்கிறவனுமான சாம்ப பரமேஸ்வரனை அடியேன் சார்கிறேன்'' என்றெல்லாம் துதித்தார்.

## நெல்லையப்பரின் கட்டளை

அகத்திய முனிவரின் துதிக்கு மகிழ்ந்த நெல்லையப்பர் தன் பக்தனான அகத்தியனை இரண்டு கைகளாலும் தூக்கி இறுகத் தழுவி அருள்செய்தார். அதன்பின் அவரை நோக்கி, ''உத்தமப் பிராமணனே! உமக்கு நித்தியமான மங்கலம் உண்டாகக் கடவது. உங்கள் தோத்திரத்தால் நாம் பெரிதும் மகிழ்ந்தோம்.

தங்களை மகிழ்விக்கும் நோக்கில் நாம் பதினான்கு உலகங்களையும் உமக்குப் பரிசாகக் கொடுத்தாலும் அது நீர் செய்ததற்கு இணையாகாது. ஆகையால் **''தாங்களே நாம்; நாமே தாங்கள்''** என உறுதிப்பட வாக்குத் தருகிறோம்.

அகத்திய முனிவரே, **புஷ்பத்திற்கும் அதன் வாசனைக்கும் பேதமில்லையல்லவா? அதுபோலவே நம் இருவருக்கும் இடையில் வேறுபாடு இல்லை''** என்று கூறினார் சிவபெருமான்.

## சிவன் இட்ட கட்டளை

திருநெல்வேலியின் மேற்குப் பக்கத்தில் ஒரு யோசனை தூரத்தில் (திருப்புடைமருதூர் அருகில்) சௌண்டீரகம் என்ற பெயரில் கௌதம முனிவருடைய ஆசிரமம் இருக்கிறது. என்னுடைய கட்டளைப்படித் தாங்கள் அங்குச் சென்று அவ்விடத்தில் இருக்கிற லிங்கத்துக்கு விதிப்படிப் பூஜை செய்ய வேண்டும்.

அதன்பின் தாங்கள் தண்டதரன் என்கிற தர்மதரனுக்குக் குறிப்பிட்ட இடத்திற்கு மேற்காக இரண்டு மைல் தூரத்தில் இருக்கும் பிருங்கியின்

ஆசிரமுமாகிய நெல்லிக்காட்டு ஊர்க்காட்டுக்குச் செல்ல வேண்டும். அந்த இடத்தை குண்டம் என்ற பெயருடைய ஒரு ராட்சசி. பன்றியின் சரீரத்தைப் பெற்றுக் கெடுத்துவிட்டாள்; மனிதர்கள் இல்லாமல் செய்துவிட்டாள். அவளைக் கொன்று அவ்விடத்தில் நமது லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து சாத்திர முறைப்படிப் பூஜிக்க வேண்டும். அதன்பின் குப்தி சிருங்காரம் சென்று தங்கள் ஆசிரமத்தில் தங்கித் தாமிரபரணியைப் பூஜிக்க வேண்டும்'' என்று சொன்னார் என விளக்கும் ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 17-ஆம் அத்தியாயத்தில் திருநெல்வேலியின் பெருமைகள் இன்னும் சில சொல்லப்பட்டுள்ளன.

(31)

## திருநெல்வேலியின் பெருமைகள்

ஸ்ரீதாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 17-ஆம் அத்தியாயத்தில் திருநெல்வேலியின் பெருமைகள் சில சொல்லப்பட்டுள்ளன. அவை ஸ்ரீபரமசிவனால் சொல்லப்பட்ட செய்திகளாக அந்த நூலில் கூறப்பட்டுள்ளன. அவை பற்றிய விவரங்கள் வருமாறு:

### சிந்துபூந்துறை

சாலீவாடி நகரம் எனப்படும் பிரம க்ஷேத்திரத்தைப் பார்த்தமாத்திரத்திலேயே உயிரினங்கள் இல்லற வாழ்க்கையை முறையாகஅனுபவித்துஇறுதியில்மோட்சத்தைஅடைகின்றன.இந்த நகரின் அருகில் வடதிசை நோக்கிச் செல்கின்ற உத்தரவாகினியான தாமிரபரணியில் சிந்துபூந்துறை எனச் சொல்லப்படுவதான தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுவோர் அல்லது அதனை ஒருதுளி பருகுவோர் தடையின்றி மோட்சத்தை அடைகிறார்கள்.

இந்தத் தீர்த்தத்தில் ஒரு துளியைப் பாணம் பண்ணுபவன் அல்லது அதனைத் தலையில் தரித்துக் கொள்பவனை நாம் நம்முடைய பக்தனாகப் பாவித்துச் சாயுச்ச முக்தி அளிக்கிறோம்.

இந்தச் சிந்துபூந்துறையில் ஸ்நானம் பண்ணிச் சகல வரங்களையும் அளிக்கின்ற நம்மைத் தரிசிப்போர் மறுபடியும் ஒரு தாயினுடைய கர்ப்பத்தில் வாசம் பண்ணமாட்டார்கள்.

### முக்திக்குப் படிக்கட்டுகள்

சிந்துபூந்துறை தீர்த்தம், பொற்றாமரையின் புண்ணிய தீர்த்தம், ஜோதி லிங்கத்தின் பூசையும், நமது விக்ரகத்தைத் தரிசிப்பதும் லோகமாதாவான காந்திமதி தேவிக்கு வந்தனம் அளிப்பதும்

மகாவிஷ்ணுவை வணங்குவதுமான இவைகளெல்லாம் முக்தி என்கிற உலகத்துக்குரிய படிக்கட்டுகளாக இருக்கின்றன.

திருநெல்வேலியை மனதால் நினைப்பவர்களையும் தரிசிப்பவர்களையும் தண்டிப்பதற்கு எமதர்மராஜனுக்கும் சக்தியில்லை. திருநெல்வேலியில் அற்பமாகத் தானம் செய்தாலும் ஹோமம் பண்ணினாலும் ஜபம் செய்தாலும் அது அவர்களுக்கு அளவில்லாத பயனை விளைவிக்கக் கூடியதாகும்.

## பாவங்கள் அகலும்

திருநெல்வேலி பரை என்ற நதிக்கும் அநுபூதி என்ற நதிக்கும் உள்ளடங்கிய பகுதியில் இருப்பது. தாமிரபரணியைத் தன்னிடத்தில் கொண்டது. ஜோதிர்மயமான பூமி. பிரம க்ஷேத்திரம் எனப்படுவது. எனவே இங்கு இறப்பவர்கள் தடையில்லாமல் முக்தியைப் பெறுவார்கள்.

இவ்விடத்தில் வசிப்பவர்களுடைய பாவமெல்லாம் பைரவருடைய சாசனத்தினால் நசுங்கிவிடுகிறது. எனவே முக்தி பெற விரும்புபவர்கள் இந்த க்ஷேத்திரத்தை ஒருபொழுதும் விட்டுவிடலாகாது.

## அகத்தியருக்குக் கட்டளை

இவ்வாறாகத் திருநெல்வேலியின் பெருமைகளை விவரித்த சிவபெருமான் அகத்திய முனிவரை நோக்கிக் கும்பமுனிவரே! உம்முடைய பத்னியான லோபாமுத்திரா தேவியுடன் ஒவ்வொரு வருடமும் சித்திரை விஷு நாளிலும் சித்ரா பவுர்ணமி தினத்திலும் திருநெல்வேலிக்கு வந்து எமக்குப் பூஜையளிக்க வேண்டும்'' என்று கட்டளையிட்டார்.

அதன்பின் சதாசிவர் கும்பமுனிவருக்கு உத்தரவு கொடுத்தார்; ஒரு நவரத்தின மாலையையும் ஒரு சூடாமணியையும் வெகுமதியாகத் தந்தார். அவரை இரண்டு கைகளாலும் ஆரத்தழுவி விடைகொடுத்தனுப்பினார்.

இதனைப் போலவே லோபாமுத்ரா தேவிக்கு ஸ்ரீ காந்திமதி தேவி அநேக ரத்தினங்களை வெகுமதியாகத் தந்தாள். அதனால் அகத்தியர் மனைவி ஒப்பற்ற மகிழ்ச்சி அடைந்தாள். அதன்பின் கும்பமுனிவர் இவர்களை வணங்கி அனைவரிடமும் விடைபெற்று மேற்குத் திசைநோக்கிப் புறப்பட்டார் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம். அவர் திருப்புடைமருதூரிலுள்ள கவுதம முனிவருடைய ஆசிரமத்துக்குச் செல்லும் வழியில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அதனை அறியலாமே.

# (32)

## உயிர் பெற்றாள் கும்பீநசி

திருநெல்வேலியிலிருந்து திருப்புடைமருதூர் நோக்கிச் சென்று கொண்டிருந்தார் அகத்தியர். திருப்புடைமருதூரிலிருந்த கவுதம ஆசிரமத்தை அடையும் நிலையில் அந்த ஆசிரமத்துக்கு இடப்பக்கத்தில் ஒருத்தியின் பிணம் கிடந்தது. அது மலையைப்போலக் காணப்பெற்றது. அதனைக்கண்ட லோபாமுத்திரை தன் கணவனை நோக்கிப், "பர்த்தாவே! இது என்ன ஆச்சரியம் மலைபோலவும் காணப்படுகிறது; பிணமாகவும் தெரிகிறது; இது யாருடைய சரீரம். இதுபற்றி எனக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று கேட்டாள்.

### கும்பீநசி

முன்னொரு காலத்தில் ஏகதன் என்றொரு முனிவன் இருந்தான். அந்த முனிவனுக்குச் சத்தியை என்பவளிடத்தில் ஒரு மகள் பிறந்தாள். அவளுக்கு அவர்கள் கும்பீநசி எனப் பெயரிட்டு வளர்த்தார்கள். அவள் பேரழகு கொண்டவள். எல்லாத் தர்மங்களையும் அறிந்தவள். நல்ல நடத்தை உடையவள். பெற்றோருக்குப் பணிவிடை செய்வதில் விருப்பமுடையவள்.

அவள் தன் இளமைப்பருவத்தில் மலர்சோலைகளில் அங்குமிங்கும் விளையாடிக் கொண்டிருக்கும் நேரத்தில் ஒருசமயம், கவுதம மாமுனிவரின் மகனான சதானந்தன் என்பவனைக் கண்டாள்.

### இல்லற ஈடுபாடு

சதானந்தனைக் கண்ட கும்பீநசி அவன்பால் ஈர்ப்புற்றாள். அவ்விருவரும் நேசமாகப் பேசிக் கொண்டனர். மலர்களாலும் இலைகளாலும் விளையாடி விளையாடிப் பொழுதைச் சந்தோஷமாகக் கழித்தனர். அப்போது, கும்பீநசி சதானந்தனை நோக்கி, "நீ கிரகஸ்தனாய் இருக்க வேண்டும்; நான் உன் மனைவியாய் இருக்க விரும்புகிறேன்; நீ அக்னியில் விதிப்படிச் சிவபெருமானுக்கு ஹோமம் பண்ண வேண்டும்; நான் பலவகைக் கறிகளுடன் ருசியாகப் பாகம் செய்கிறேன்" என்று கூறினாள். அவள் போதனையில் மயங்கினான் சதானந்தன். சந்தோஷத்துடன் அவ்விருவரும் நாயகனும் நாயகியுமாக இருக்க விருப்பம் கொண்டனர்.

ஔபாசனம், வைசுவதேவம் (பஞ்சயக்ஞம்) தேவாரம் (வழிபாடு), அதிதி பூஜை, படுக்கை, உணவு முதலான எல்லாச் செயல்களையும் அவ்விருவரும் சந்தோஷமாக நடத்தி ஒன்றுக்கொன்று நேசமாக வனத்தில் கழித்துவர வெகுநேரம் கடந்துவிட்டது.

## கவுதமரின் சாபம்

தவமுனிவரான கவுதம முனிவர் வைசுவதேவம் முதலான கடன்களை முடித்துவிட்டு உணவு அருந்துவதற்காக ஆசிரமத்திலிருந்து வந்து தன் குமரனைக் கூப்பிட்டார். கும்பீநசியுடன் களித்துத் திரும்பிய சதானந்தன் நடுநடுங்கிக் கொண்டு அங்கே வந்தான்.

முனிவர் முன் வந்த சதானந்தனைக் கண்டார் அவர். அவனிடத்தில் பிரம்மதேஜஸ் இல்லாததை உணர்ந்து கொண்டார். தன்னுடைய யோக ஆற்றலால் நடந்ததைத் தெரிந்து கொண்டார். கோபம் கொண்டார். சாபம் கொடுத்தார்.

''கெடுமதியாளனே! மூடத்தன்மையால் தீய செயலைச் செய்துவிட்டாய். அதனால் நீ இந்தக் காட்டில் ஒரு பிசாசாகத் திரிந்து வாழவேண்டும். எப்பொழுது தாம்பிரபரணியினுடைய தீர்த்தத் திவலை உன்மீது படுகிறதோ அப்போது நீ என் சாபத்திலிருந்து நீங்கிச் சுயரூபம் பெறுவாய்; என்னை மீண்டும் அடைவாய்'' என்று சபித்தார்.

''இந்தக் கும்பீநசி ராட்க்ஷசியாகப் பிறக்கக் கடவள். அந்த ராட்க்ஷசியினுடைய மலைபோல் இருக்கின்ற உடம்பானது ஸ்ரீதாமிரபரணி தீர்த்தமானது பட்டவுடன் பூமியில் விழுந்துவிடும். அவள் மீண்டும் ஸ்நானம் செய்து சிறந்த சொரூபத்தைப் பெறுவாள்'' என்று சாபமிட்டார்.

அதன்பின் அவர் அக்னி கோத்திரத்தை எடுத்துக் கொண்டு மனைவியுடன் இமயமலைக்குச் சென்றுவிட்டார். அங்கே வாசம் செய்யலானார்.

## அகத்தியரால் அருள் பெற்றார்கள்

கும்பீநசி பற்றிய வரலாற்றைக் கும்பாமாமுனிவர் தன் துணைவிக்குக் கூறிக்கொண்டிருந்த நேரத்தில் பிசாசு வடிவம் பெற்றிருந்த சதானந்தன் ஆனவன் மிகவேகமாக அகத்தியர் முன் வந்தான். அவனைப் பார்த்த கும்ப முனிவர் தன் கலசத்திலிருந்த தாமிரபரணி தீர்த்தத்தை எடுத்து அவன் மீது தெளித்தார். நீர்த்திவலை உடலில் பட்டமாத்திரத்தில் கவுதமனின் மகனான சதானந்தன் சாபத்திலிருந்து நீங்கினான்; சுய உருவத்தையடைந்தான். அதன்பின் கும்பீநசியின் மீது தாமிரபரணி தீர்த்தம் தெளிக்கப்பட அவள் சுயஉருவத்தை அடைந்தாள்; தாமிரபரணியில் குளித்து அழகிய உருவத்தைப் பெற்றாள் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

### நன்றி செலுத்தினர்

அகத்தியர் சாபவிமோசனம் தந்தபின்னர் ஏகத முனிவரும் கவுதம முனிவரும் அவர் இருக்கும் பகுதிக்கு வந்தனர். கவுதம முனிவர் தன் புதல்வனுக்குச் சாபவிமோசனம் தந்த அகத்தியருக்கு நன்றி செலுத்தினார். ஏகத முனிவர் தன் மகளுக்குச் சாபவிமோச னம் தந்த அகத்தியரை நன்றி கூர்ந்தார். அதன்பின் அவ்விருவரும் தம் ஆசிரமத்துக்குச் சென்றனர். அதனையடுத்து அகத்தியர் சௌண்டீரகம் என்ற பெயர் பெற்ற தலத்தை அடைந்தார். அந்த தலம் திருப்புடைமருதூர். அதன் பெருமைகள் ஏராளம்.

## (33)

## திருப்புடைமருதூரின் பெருமைகள்

தாமிரபரணி மகாத்மியத்தில் 17-ஆம் அத்தியாயத்தில் 62-ஆம் சுலோகம் முதல் அமைந்த பகுதியில் திருப்புடைமருதூரின் பெருமைகள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. தேவேந்திரன் இந்திராணியுடன் பிரம்மஹத்தியிலிருந்து நீக்கம் பெற்றதால் திருப்புடைமருதூருக்குச் சுரேந்திர மோட்சம் என்ற பெயர் உண்டு. பிரம்மதேவனுடைய தண்டம் (தண்டதரன்) வசிப்பதால் இவ்வூருக்குத் தண்டாடவி என்ற பெயரும் உண்டு.

### சிவலிங்கத்தின் மகிமைகள்

மருதமரத்தின் பொந்தில் உள்ளது; அதிக ஆச்சரியத்தைத் தரக்கூடியது; பிரம்மானந்தமாகிற சொரூபத்தை உடையது; பெரியோர்களுடைய தவத்திற்குப் பயன்போன்றது; உலகின் சார மாகிற பெருமரத்துக்குக் குறுமுளை போன்றது; பாற்கடலைக் கடந்தபொழுது உண்டான அமுதத்தின் திரளைப் போன்றது; கவுஸ்தும முனிக்குக் கவுஸ்தம் போன்றது என்றெல்லாம் விளங்கக்கூடிய சிவலிங்கத்தைக் கண்டார் அகத்தியர்.

மருத மரத்தின் பொந்திலிருக்கிற அந்தச் சிவலிங்கம் உபநிஷத் துகளாகிய கிரகத்தினுடைய உள்கட்டடத்துக்குத் திருவிளக்குப் போல இருப்பதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தார்; வணங்கினார்.

### தீர்த்தச் சிறப்புகள்

அந்தச் சிவலிங்கத்துக்கு மேற்குப் பாகத்தில் தேவேந்திரனுக்கு மோட்சத்தை அளித்ததான மகாபுண்ணிய தீர்த்தத்தை அகத்தியர் முனிவர் கண்டு மகிழ்ந்தார்.

அதற்குத் தெற்குப்பாகத்தில் கவுதம தீர்த்தம் என்றொரு தீர்த்தமுள்ளது. அந்தக் கவுதம தீர்த்தத்துக்குக் கடவுளுடைய கட்டளைப்படி அநேக தீர்த்தங்கள் வந்திருக்கின்றன.

அபிதமான கவுதம தீர்த்தத்தில் கும்பமுனிவர் தன் மனைவியுடனும் மற்ற முனிவர்களுடனும் புனித நீராடினார். பித்ருக்களுக்கும், தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும் தர்ப்பணம் தந்தார்.

## இன்னும் சில தீர்த்தங்கள்

கவுதம தீர்த்தத்துக்குச் சற்றே தென்பாகத்தில் பைசாச மோசன தீர்த்தம் என்றொரு தீர்த்தமுண்டு. இதில் புனித நீராடுபவர்கள் யமபுரியைப் பார்க்கவே மாட்டார்கள்.

அதற்குத் தெற்குப்பக்கத்தில் பரஞ்ஜோதியாய் மகாபாவங்களைத் தொலைக்கிற தண்டபாவன தீர்த்தம் என்றொரு தீர்த்தமுண்டு. இதில் புனித நீராடுபவர்கள் விரும்பிய எல்லாவற்றையும் இவ்வுலகில் அனுபவித்து முடிவில் முக்தியைப் பெறுவார்கள்.

## முக்கூடல்

தண்டபாவன தீர்த்தத்துக்குத் தென்பாகத்தில் ஸ்ரீதாமிரபரணியுடன் புண்ணியமான கடனாநதி சேர்கிறாள். அந்தக் கடனா சங்கமத்தில் ஸ்நானம் செய்வது விசேஷமான பயன்களை விளைவிக்கக் கூடியதாகும்.

இவ்விடத்தில் அந்தர்வாகினியான சரஸ்வதி இங்குச் சங்கமிக் கிறது. கடனையும் தாமிரபரணியும் கூடுகின்றன. எனவே இது முக்கூடல் எனப்படுகிறது. இப்படியாக மூன்று நதிகள் சேர்கின்ற சங்கமத்தில் ஸ்நானம் செய்வோர் எல்லா விருப்பங்களையும் அனுபவித்து இறுதியில் சிவசாயுஜ்யம் (சிவனுடன் இரண்டறக் கலத்தல்) பெறுவர்.

## இன்னும் சில தீர்த்தங்கள்

முக்கூடலின் தென்பாகத்தில் மாண்டவ்ய தீர்த்தம் என்றொரு தீர்த்தம் உண்டு. இதில் புனித நீராடுபவன் பரிசுத்தமான சத்திய லோகத்தை அடைவான்.

தேவேந்திர மோட்ச தீர்த்தத்துக்கு வடக்குப் பாகத்தில் விநாயக தீர்த்தம் என்றொரு தீர்த்தமுண்டு. அதில் ஓரேயொருமுறை குளித்தால் போதும், தீர்க்காயுசுடன் சுகமாக வாழ்வான்.

விநாயக தீர்த்தத்துக்கு வடக்குப் பக்கத்தில் உள்ளது கன்ம தீர்த்தம். அதைத் தொடுவோர் கர்ம பாசத்திலிருந்து நீங்கிவிடுவார்கள்.

இந்தத் தீர்த்தத்துக்கு கொஞ்சம் வடக்குப் பக்கத்தில் ராட்க்ஷசி மோசன தீர்த்தம் என்றொரு தீர்த்தமுண்டு. அதைப் பார்த்தால் போதும் அந்த நொடியிலேயே பாவங்களிலிருந்து விலகிவிடுவான்.

## அகத்தியர் தோத்திரம்

அகத்திய முனிவர் இந்த முக்கியமான தீர்த்தங்களில் எல்லாம் நீராடினார்; முறைப்படி வழிபடாற்றினார்; புடார்ஜுனலிங்கத்தையும் கோமதியம்மனையும் வலம்வந்து வணங்கினார். மந்திரங்களையும் தந்திரங்களையும் கொண்டு தூபம், தீபம், கந்தம், புஷ்பம், அட்சதை, நிவேதனம் முதலியவற்றால் சிவனைப் பூஜித்தார். பூஜை முடிந்தபின் பக்தியுடன் தோத்தரித்தார்.

ஓம். எல்லா உயிரினங்களையும் படைத்துக் காத்துச் சம்ஹாரம் பண்ணுகிற திருமூர்த்தியே எல்லாப் பொருட்களுக்கும் காரண ரூபமாக இருப்பவனே மரத்தின் பொந்தில் வாசம் பண்ணுகிறவனே உனக்கு வந்தனம்!

மகாவிஷ்ணுவின் கண்களால் அர்ச்சனை பண்ணப் பெற்றவனே! ஆலகால விஷத்தை அருந்தியவனே! பக்தர்கள் மேன்மையடைய விரும்புபவனே! புடார்ஜுனனே! உன்னை அடியேன் உபாசி க்கிறேன்.

பரிமளம்பூசியவனே! அழகு பொருந்தியவனே! சந்திரப்பிறையைத் தலையில் சூடியவனே! வீரானந்தரசம் என்ற திருநாமம் பெற்றவனே! புடார்ஜுனனே உன்னை நான் உபாசிக்கிறேன்.

கங்கையைத் தரித்தவனே! பிறைசூடிய பெருமானே! உமையொரு பாகனே! வாசுதேவனுக்கு நேசனும் சாந்தனுமாய் இருக்கின்றவனே! புடார்ஜுனனே உன்னை உபாசிக்கிறேன்.

யமனுக்கு யமனே! கலைகளின் ஆதாரமே! பக்தர்களின் அச்சம் நீக்குபவனே! பார்வதியைத் தழுவி இருப்பவனே! மங்கள ரூபியே! புடார்ஜுனனே உன்னை உபாசிக்கிறேன்.

சூரியன் சந்திரன் அக்னி ஆகியவர்களைக் கண்களாக உடையவனே! விஷ்ணு ரூபியே! கோடி சூரிய ஒளிதாங்கியவனே! புடார்ஜுனனே உன்னை உபாசிக்கிறேன்.

சங்கு குருக்குமுல்லை, சந்திரன் ஆகியவற்றைப் போல வெளுத்த நிறமுடையவனே! கர்ப்பூரம்போல் பரிசுத்தமான சரீரம் கொண்டவனே! வளர்ந்த கர்ணாரூபியே! புடார்ஜுனனே உன்னை உபாசிக்கிறேன்.

நிர்மல மூர்த்தியான சிவனுக்கு வந்தனம்! விருப்பங்களை அளிக்கின்ற கற்பக விருட்சத்துக்கு ஒப்பான அர்ஜுன மரத்தின் பொந்தில்வாசம் பண்ணுகிறவனே! சந்திரப் பிறை சூடியவனே! புடார்ஜுனனே உனக்கு வந்தனம்! வந்தனம்!! என்றெல்லாம் துதித்தார் அகத்தியர்.

### முனிவருக்கு அருளுதல்

அகத்தியர் துதிகேட்டு மகிழ்ந்தார் பரமசிவன். லிங்கத்திலிருந்து வெளிப்பட்டார். தன்னிரு கைகளால் முனிவனைத் தூக்கி வெகுமானித்தார். அதன்பின் அவரைநோக்கி, "அகத்திய முனிவரே! தாங்கள் ஏகத முனிவரையும் கவுதமரையும் சமாதானப்படுத்தி நம் உத்தரவுப்படி மலய பர்வதத்துக்குச் செல்ல வேண்டும்" என்று திருவாய் அருளினார். பின்னர் மறைந்தார். முனிவர் அனைவரும் பிரம்மானந்தத்தை உணர்ந்தனர்.

அதன்பின் அகத்தியர் கடனாநதி சங்கமத்தில் காலைக்கடன்களை முடித்தார்; பின் தாத்ரிவனம் எனப்படும் நெல்லிக்காட்டுக்குச் சென்றார். அப்போது ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

## (34)

## பன்றிமுக ராக்ஷசியும் பூதமனிதனும்

ஸ்ரீதாமிரபரணி மகாத்மியத்தில் 18-ஆம் அத்தியாயத்தில் நெல்லிக்காட்டுக்குச் செல்லும் வழியில் நடந்த நிகழ்வுகளைச் சங்கமாமுனிவர் விளக்கும் நிலையில் பின்வருவன விவரிக்கப்பட்டுள்ளன.

### பன்றிமுக ராட்சசி

அகத்திய முனிவர் செல்லும் வழியில் நெருக்கமான மரங்கள் அடர்ந்த காடு ஒன்று காணப்பட்டது. கண்டாலே அச்சம்விளைவிக்கும் நிலையில் அமைந்த காடு அது. அப்படிப்பட்ட காட்டில் கும்பமுனி பிரவேசிக்கும் போது பன்றிமுகமுடைய ராக்ஷசி ஒருத்தியைப் பார்த்தார்.

பன்றிமுகமுடைய அந்த ராட்க்ஷசி தன் பற்களால் அநேக பாறாங்கற்களை கிளப்பிக் கொண்டிருந்தாள்; நகங்களால் பூமியைக் கிறி மோந்து பார்த்துக் கொண்டிருந்தாள்; பார்ப்போருடைய கண்களில் புழுதியைப் பொழியக் கூடியவள்; தன் உறுமலால் உலகத்தைக் குழப்பக்கூடியவள்; ஊழிக் காலத்தின் இறுதியில் ஆதிவராஹம் போல உயிரினங்களை மிரட்டக்கூடியவள்.

அகத்திய முனிவர் காட்டை அடைந்தபோது இத்தகைய துஷ்ட ராக்ஷசியைக் கண்டு ஓடிச்சென்ற உயிரினங்கள் அவர் காலில்விழுந்து அடைக்கலம் கேட்டன. அவரைச் சரணடைந்தன. அகத்தியர் அந்த உயிர்களுக்கு இரங்கி ராக்ஷசியின் மீது கோபம் கொண்டார்.

### பிறந்தது பூதம்; அழிந்தாள் ராட்சஷி

அகத்திய முனிவர் ராட்சஷியின் மீது கோபம் கொண்டு ஹுங்காரச் சப்தம் எழுப்பியவுடன் அந்த ஒலியிலிருந்து ஒரு பூதம் பிறந்தது. அது தீப்பொறி போலச் சிவந்தநிறம் உடையது. உயரம் பொருந்திய பற்களைக் கொண்டது; அடுத்தவர்களுக்கு அச்சம் கொடுக்கும் முகத்தை உடையது. கையில் கதை என்ற ஆயுதம் தரித்தது. இப்படி உருவான பூதமனிதன் அந்தப் பன்றிமுக ராட்க்ஷசியைக் கதாயுதத்தால் அடித்தான்.

கதாயுதத்தின் கடுமையான அடியால் சிதைந்தாள் ராட்க்ஷசி. வஜ்ரம் பாய்ந்த மலையைப் போல விழுந்தாள். பின்னர் மலைபோன்ற ராட்க்ஷசியின் தேகத்தின் ஒவ்வொரு பாகத்திலும் விரைவாக அடித்தான் பூதமனிதன். அவன் அடிதாங்காமல் வருந்தி மரணமடைந்தாள்.

ராட்க்ஷசியின் அழிவுகண்ட அனைவரும் மகிழ்ந்தனர்; அப்போது பூத மனிதனை நோக்கி அகத்தியர் உன் செயல் எனக்கு இன்பத்தை அளித்தது. ராட்க்ஷசியின் உடலானது கல்லாகப்போகட்டும்; உன்னுடைய பலத்தை அனைவரும் உணர்ந்து கொள்ளும் வகையில் நீ யானையின் மீதிலேறி எக்காலத்திலும் இவ்விடத்தில் இருந்து இந்தப் பகுதியைக் காப்பாயாக என்று பூதமனிதனுக்கு உத்தரவு பிறப்பித்தார்.

வானோர் மலர்மாரி பொழிந்தனர் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (35)

## அகத்தியர் அணைத்த லிங்கம்

அகத்தியர் ஊர்க்காட்டில் மணலால் லிங்கம் அமைத்தார். அந்த லிங்கம் உரிய வடிவில் நிற்காமல் குலைந்தது. என் இது கோட்டி செய்தீர் என லிங்கத்தைக் கேட்டு அதனை இறுகத் தழுவினார், அதன்பின் அந்த லிங்கம் நிலைத்தது என்ற வரலாறு திருநெல்வேலிப் புராணம், அம்பைப் புராணம், தாமிரபரணி மகத்துவம் முதலிய நூல்களில் சொல்லப்பட்டுள்ளது. இந்தச் செய்தியும் அதனை ஒட்டிய

*தீர்த்தத் துறைகள் பற்றிய விவரங்களும் தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 18-ஆம் அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.*

## தளர்ந்ததும் நிலைத்ததும்

*அத்திரி, நாரதன், ஹயக்ரீவன் முதலிய முனிவர்களுடன் சுபதினத்தில், சுபலக்னத்தில், சுபக்கிரகங்களின் வீழ்ச்சி உடைய முகூர்த்தத்தில் குரு ஹோரையில் லோபாமுத்திராதேவியுடன் சேர்ந்து சுசியான பிரதேசத்தில் அகத்தியர் மணலால் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார்.*

*அவர் மணல் லிங்கத்தை உண்டுபண்ணும்போது அது லிங்கத்தின் வடிவைப் பெறாமல் குலைந்துவிடுகிறது. மறுபடிமறுபடி உண்டுபண்ணினாலும் அது லிங்க ரூபம் பெறுவதில்லை. இப்படிப் பலமுறை நடந்ததால் அகத்தியர் களைப்படைந்தார். அதனை நோக்கி, ஓ சம்புவே! என்னிடத்தில் ''இதுவென்ன கோட்டி செய்தீர்'' என்று கூறிக் கொண்டு மனவருத்தத்துடன் அகத்திய முனிவர் இரண்டு கைகளாலும் மார்பினாலும் பக்தியுடன் விக்ரஹத்தைச் சரிப்படுத்துபவர்போல லிங்கத்தை அணைக்கத் துன்பமடைந்த பக்தனின் வருத்தத்தைக் காணவிரும்பாமல் மணலால் சமைக்கப் பட்ட லிங்கம் உருவானது சாஸ்வதமாக நிலைக்கச் சிவபெருமான் கருணை செய்தார். இந்த திருவுருவம் கோட்டீஸ்வரர் எனப்பட்டது.*

## அகத்தியர் துதி

*அகத்திய முனிவர் தான் பிரதிஷ்டை செய்த லிங்கத்தில் பகவானை ஆவாஹனம் பண்ணினார்; பிராணப்பிரதிஷ்டை முதலானவற்றைச் செய்தார்; பூஜையின் முடிவில் தன் துணைவியுடன் வணங்கினார்; அதன்பின் சிவனைத் துதிக்கத் தொடங்கினார்.*

*தேவாதி தேவனே! மகாதேவனே! பக்தர்களின் துன்பத்தைத் துடைப்பவனே! ஆதியே! கோட்டீஸ்வரனே! உமக்கு வந்தனம்!*

*தாமிரபரணி மத்தியில் எல்லாக் காலத்திலும் நீ நிலையாக இருக்க வேண்டும். நீருருவில் இருக்கிற சங்கரனே! கோட்டீஸ்வரனே! உனக்கு வந்தனம்!*

*திரிலோகநாதனே! வேதங்களின் முதல்பொருளே! திரிபுரத்தைச் சம்ஹரித்தவனே! கோட்டீஸ்வரனே! உமக்கு வந்தனம்!*

*பிரமன், இந்திரன், குபேந்திரன், யோகிந்திரன் ஆகியவர்களால் பூஜிக்கப்பட்ட திருவடித் தாமரைகளை உடையவனே! பஞ்சப் பிரம்ம ஸ்வரூபனே! கோட்டீஸ்வரனே! உமக்கு வந்தனம்!*

*பிரம்மன் முதலான ஐந்து வகையான தேவதா ரூபியாக இருப்பவனே! சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், அனுக்ரஹம், திரோதானம் என்னும் பஞ்சக் கிருத்யங்களைச் செய்கிறவனே! ஐந்து வகையான மகாபாவங்களைத் தொலைக்கிறவனே! கோட்டீஸ்வரனே! உனக்கு வந்தனம்!*

*பார்வதி தேவியால் ஆலிங்கனம் பண்ணப்பட்ட அவயங்களை உடையவனே! கைலாசவாசியே! உமக்கு வந்தனம்!*

*லோக ரூபியே! கைலாசலோகநாதனே! உலகத்தைக் காப்பவனே! முக்கண்ணனே! கோட்டீஸ்வரனே! உமக்கு வந்தனம்!*

*தாமிரபரணியின் கரைக்கு ஆபரணமாக இருப்பவனே! பக்தர்களுக்குச் சுகத்தைத் தருபவனே! நித்யப்பொருளே! சுத்த வஸ்துவே! களங்கமற்றவனான உமக்கு வந்தனம்!*

*நின்மலசித்தமுடைய பெரியோர்களிடத்தில் வசிப்பவனே! யானையின் தோலைத் தரித்தவனே! இடதுபக்கத்தில் பார்வதியை அணைத்தவனே! கோட்டீஸ்வரனே! உமக்கு வந்தனம்!*

*இன்றுதான் என் பிறவிப்பயன் பெற்றது. இப்போதுதான் என் தவம் சித்தியுற்றது. ஓ சம்புவே! இன்று உன் திருவடிகளைத் தரிசித் ததால் என் அறிவும் பயன்பெற்றது.*

*இறைவா! அடியேன் கிருதார்த்தனாகிவிட்டேன். அதாவது செய்ய வேண்டிய செய்கையை செய்தவன் ஆகிவிட்டேன். பக்தவத்சலனே! இப்பொழுது உன் திருவடிகளைத் தரிசித்தமையால் நான் கிருதார்த்தனாகி விட்டேன்; கிருதார்த்தனாகிவிட்டேன்.*

*முழுமுதற் கடவுளான மகாதேவன் எங்கள் குலதெய்வமாக இருக்கிறபடியால் அவரைத் தரிசித்த நாங்களெல்லோரும் தன்யர்கள் ஆகிவிட்டோம்; தன்யர்கள் ஆகிவிட்டோம்.*

*சிவ சம்பு சிவ சம்பு சிவ சம்பு சிவ சம்பு என்று திருநாமங்களை உச்சரித்துக் கொண்டே எனது காலம் கழியவேண்டும்; இறுதிவரை இந்நிலையிலேயே இருக்க வேண்டும்.*

*சிவனிடத்தில் பக்தியானது ஜன்மம்தோன்றும் உண்டாக வேண்டும்; ஜன்மம்தோறும் உண்டாக வேண்டும். அது எனக்கு எல்லாக் காலத்திலும் இருக்க வேண்டும்.*

என்றெல்லாம் பொருள்படும் வகையில் கோட்டீஸ்வரரைத் தோத்தரித்தார் அகத்தியர். ஆனந்தக்கடலில் ஆழ்ந்த சித்தமுடைய வராகிவிட்டதால் அசைவின்றி யாதொரு பேச்சும் பேசாமல் கொஞ்சநேரம் மவுனமாக இருந்தார்.

## இறைவன் தோன்றுதல்

அந்தநேரத்தில் சதாசிவன் அகத்தியர் அமைத்த லிங்கத்திலிருந்து வெளிப்பட்டார். மரகதப் பச்சை போன்ற பாதிசரீரம்; ஸ்படிகம் போன்ற மீதி சரீரம் உடையவராய் ஸ்த்ரீபுருஷ ரூபம் உடைய அர்த்தநாரீஸ்வர மூர்த்தியாய் வெளிப்பட்டார். உதிக்கின்ற சூரியனைப் போல - ஜொலிக்கின்ற அக்னியைப் போல அவர் தோற்றம் அமைந்தது; அருள் என்கின்ற அமுதத்தைப் பொழியக்கூடிய கடைக்கண் பார்வை பிரகாசிக்கக் காட்சி தந்தார். அவர் கும்பமுனிவரை நோக்கி, ''முனிவரே! நீர் செய்த ஸ்துதியால் நாம் பெரிதும் மகிழ்ந்தோம்; உம்மால் செய்யப்பட்ட தோத்திரத்தைப் படிப்பதும் நம்முடைய லிங்கத்தைத் தரிசிப்பதும் தாமிரபரணியில் புனித நீராடுவதும் நமக்குச் சந்தோஷத்தை அளிக்கும் செயல்களாகின்றன'' என்று அருளிச் செய்ததுடன் சில தீர்த்தங்களைப் பற்றியும் கூறினார் சிவபெருமான்.

## தீர்த்தங்கள்

அகத்திய முனிவர் மற்ற முனிவர்களுடன் ஸ்நானம் செய்த இடம் முனிதீர்த்தம் என்று அழைக்கக்கடவது என்று அருளினார் சிவபெருமான்.

எவனொருவன் தாமிரபரணியின் வடக்குக் கரையில் கோட்டீஸ்வர லிங்கத்துக்குத் தென்பாகமாக இருக்கிற முனி தீர்த்தத்தில் புனித நீராடி லிங்கத்தை வணங்குகிறானோ அவனுக்கு எப்பொழுதும் இல்லற வாழ்க்கை கொடுப்பதுடன் தெய்வ போகங்களையும் அளிப்போம்.

ஸ்ரீதாமிரபரணியானவள் வடக்குநோக்கிச் செல்கிற இடத்தில் நமது சந்நிதானத்துக்கு முன்பாக நீர்த்துளிகள் உண்டாகின்றன. இவ்விடத்தில் ஸ்நானம் பண்ணி நம்மைப் பூஜிப்பவன் இவ்வுலகில் சிறந்த வாழ்க்கையைப் பெற்று இறுதியில் நம்மைச் சேர்வான். யாதொருவன் மனக்களிப்பினைத் தரக்கூடிய தட்சிணாவர்த்த தீர்த்தத்தில் (எனக்குத் தென்பாகத்தில் இருக்கிற நீர்ச்சுழியில்) ஸ்நானம் பண்ணிப் பைரவ மூர்த்தியை வணங்கிப், பன்றிமுகியின் பகைவனை (மாடனை) பூஜைபண்ணி எனது லிங்கத்துக்குத் தேன் அபிஷேகம் செய்கிறானோ அவன் மறுபடியும் பூமியில் பிறக்கமாட்டான்.

அகத்தியரே! நீர் லிங்கத்தைச் செய்யும்போது வருத்தத்துடன் ஆலிங்கனம் பண்ணி இருத்திய அடையாளம் நமது லிங்கத்தில் இருக்கிறது. அப்படிப்பட்ட முத்திரையால் நாம் பக்தர்களுக்கு அருள்செய்வோம் என்பதை ஜனங்களுக்குத் தெரிவித்துக் கொண்டு

சந்திர சூரியர் உள்ளவரை நித்ய சந்தோஷியாக இவ்விடத்திலேயே நாம் வாசம் பண்ணுவோம்.

நமது சிரசில் குடியிருக்கிற சந்திரப் பிரபையில் இருந்து அமுதத் திவலை நமது லிங்கத்தில் எக்காலத்திலும் விழுந்து கொண்டிருக்கும் காரணத்தினால் இது பிந்து ஸ்தானம் என வழங்கக்கடவது.

இந்த க்ஷேத்திரமானது பன்றிமுகி என்னும் ராக்ஷசியால் அவளுடைய அம்புகள் போன்ற நகங்களால் கீறப்பட்ட காரணத்தால் நகாரண்யம் என்ற பெயர்பெறக் கடவது.

உத்தம முனிவரே! தாங்கள் ஒவ்வொரு வருடத்திலும் இவ்விடத்திற்கு வந்து மகாமந்திரங்களால் நமது சந்தோஷத்திற்காகப் பூஜை செய்ய வேண்டும் என்றெல்லாம் சிவபெருமான் கூறினார். அதன்பின் அகத்தியர் மலய பர்வதத்துக்குச் சென்றார்.

அகத்திய முனிவரால் வைக்கப்பட்ட கைமுத்திரையை மாலையைப் போல் தரித்துக் கொண்ட சிவபெருமான் கயிலாய மலையில் அருள்புரிவது போலவே இவ்விடத்தில் அருள்புரிந்து வருகிறார். ஆதலால் மோட்சத்தை விரும்புகின்ற உயிரினங்கள் கோட்டீஸ்வரரைப் பூஜை செய்ய வேண்டும் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (36)

## தேவர்கள் திரும்புதல்

தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் அமைந்த 19-ஆவது அத்தியாயத்தில் இந்திரன் முதலானவர்கள் அகத்திய முனிவரை வந்து தரிசித்த செய்தியும் பின் அகத்திய முனிவரோடு இருந்த முனிவருள் சிலர் தத்தம் இருப்பிடத்துக்குச் சென்ற செய்தியும் விவரிக்கப்பட்டுள்ளது.

### புண்ணிய தீர்த்தம்

இந்நாளில் ஊர்க்காடு எனப்படும் பகுதி பிருகு முனிவரின் ஆசிரமம் இருந்த இடமாகும். இங்கே அகத்தியர் ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்தார். அந்த லிங்கத்தின் அருள்பெற்றபின் ஹயக்ரீவர் முதலிய முனிவர்களுடன் வருணன் முதலிய தேவர்களுடன் மலயபர்வதம் திரும்பினார்.

பூர்ணா நதியும் குமுத்துவ நதியும் தாமிரபரணியுடன் கூடுமிடத்தில் பிரம்மஹத்தியைப் போக்கிப் புண்ணியத்தை விளைவிப்பதான தீர்த்தம் இருக்கிறது. அகத்தியர் அதனருகில் இறங்கி மாத்யானிக ஸ்நானத்தைச் சாஸ்திர முறைப்படிச் செய்தார்.

## இந்திரன் வருகை

அகத்திய முனிவர் மாத்யானிக ஸ்நானம் முறைப்படி செய்து கொண்டிருந்த நேரத்தில் இந்திரன் ஐராவத்தில் ஏறி அவ்விடத்துக்கு வந்தான். அகத்தியர் அவனை வரவேற்று உபசரித்தார். அனைவரும் சந்தோஷமாக அமர்ந்து உரையாடினர். அப்போது இந்திரன் கும்பமுனியைப் பார்த்து ''அகத்திய முனிவரே! தங்களால் உலகத்துக்கு நன்மை உண்டாவதற்குரிய மார்க்கமானது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தங்களால் இந்தப் பூவுலகமானது செ ார்க்கத்தைக் காட்டிலும் சிறப்புடையதாகச் செய்யப்பட்டிருக்கிறது. எவ்வாறு தெரியுமா? சத்தியம், தபம், வணக்கம், நன்மை செய்தல், சமபுத்தி முதலானவை பூலோகத்தில் தென்திசையில் எக்காலத்தும் குடிகொண்டிருக்கின்றன. இவ்விடத்தில் நான்கு வேதங்களும் மந்திரங்களும் சகல தீர்த்தங்களும் இருக்கின்றன. ஆதலால் உங்களைக் காட்டிலும் வேறு யாரையும் இப்படிப்பட்ட நன்மை செய்தவராக நான் அறியவில்லை.

தங்களால் இப்பாரத வருஷமானது சிறப்புற்றதாகச் செய்யப்பட்டிருக்கிறது. தங்களிடத்தில் சிவனும் விஷ்ணுவும் பிரம்மாவும் முப்பெரும் தேவியரும் இருக்கிறபடியால் எல்லாரும் மகிழ்வுடன் இருக்கின்றனர்.

தாங்களே அர்ச்சனை, தாங்களே பூஜை, தாங்களே தியானம், தாங்களே பிரமத்தியானம் எனவே தங்களைத் தரிசிப்பதைப் பிரம்மானந்தத்தை அனுபவிப்பதாகவே நினைக்கிறேன்.

ஓ வாதாபியை வென்றவனே! உம்முடைய மனைவியான லோபாமுத்திரா தேவியைச் சாக்ஷாத் லோகமாதவாய்ப் புண்ணியவதியாய் இருக்கிற லட்சுமிதேவி எனக் கூறவேண்டுமே தவிர வேறில்லை.

மாமுனிவரே! உம்மிருவரையும் தரிசித்ததால் நான் பாக்கியவனாகிவிட்டேன். மலய ராஜகுமாரியான தாமிரபரணி தேவியை இவ்விடத்துக்குக் கொண்டுவந்த தங்களால் இந்தத் தட்சிண பூமியானது மோட்ச பூமியாக்கப்பட்டிருக்கிறது. பிரமன் முதலான தேவர்களும் தாமிரபரணி தீரத்தில் மானிடப் பிறவி எடுத்து வாழவே விரும்புகின்றனர்.

உலக நன்மை கருதி முன்பொரு சமயம் தாங்கள் சமுத்திரத்தைக் கையில் அடக்கினீர்கள். அதுபோலவே விந்திய பர்வதத்தையும் அடக்கினீர்கள். சினம் காரணமாக வாதாபியை அழித்தீர்கள்.

அண்டகோளத்தில் மற்ற யாராலும் செய்ய முடியாத செயல்களைச் செய்து மூன்றுலகங்களையும் பரிசுத்தமாக்கி விட்டீர்கள்.

இப்படிப்பட்ட மகாத்மாவான தங்களை நான் தரிசனம் செய்ததால் புண்ணியவனாகிவிட்டேன்; பாக்கியவனாகிவிட்டேன்; யோக்யதாம்சம் உள்ளவனாகிவிட்டேன். இந்த மலய பர்வதத்தில் என்னுடைய ஏழு மேகங்களும் வேண்டிய சமயங்களெல்லாம் மழை பொழியக்கடவன ஆகட்டும்.

இப்பகுதியில் வாழும் உயிரினங்கள் புண்ணியவான்களாகவே இருப்பர். நோய் பஞ்சம் முதலியன இப்பகுதியில் தோன்றா. வேகத்தையும் மனத்தையும் பாதிக்கும் எந்தத் துன்பங்களும் இங்கு நேரா.

தாமிரபரணியின் இரண்டு கரைகளிலும் எல்லா வகையான பயிரினங்களும் உண்டாகக் கடவன. தேவதைகள் இவ்விடத்தில் நன்மையை விளைவிக்கட்டும். தவம் விருத்தியாக நடக்கட்டும்.

இனி ஒவ்வொரு ஆண்டும் சூரியன் சாப ராசிக்கு வர அதாவது மார்கழி மாதத்தில் அமாவாசை அல்லது பௌர்ணமி தினத்தில் தங்களைத் தரிசிப்பதற்காக நான் வரப்போகிறேன்''

என்று இந்திரன் அகத்தியரைத் துதித்தான்; பிரம்ம ரிஷிகளிடமிருந்து விடைபெற்றான்; அனைவரையும் வலம்வந்து வணங்கினான்; சொர்க்கலோகம் சென்றான்.

## வருணலிங்கம்

அகத்திய முனிவரிடமிருந்து உத்தரவுபெற்ற வருணபகவான் தன்னுடைய பெயர் உள்ள ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வணங்கினார். அந்த லிங்கம் மூன்று நதிகள் சேரும் முக்கூடல் பிரதேசத்துக்கு அக்னி மூலையில் தாமிரபரணியின் கீழக்கரையில் தாரமலைக்கு மேற்காகப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. வருணலிங்கத்தை வணங்குபவர்கள் சகல விருப்பங்களையும் அடைவர்; பாவங்களிலிருந்து விடுபடுவர்.

அந்த வருணலிங்கத்துக்குத் தெற்குப் பக்கத்தில் வருணபுத்திரர்கள் அடுத்தடுத்து லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்துள்ளனர். இந்த லிங்கங்கள் தம்மை வணங்குபவருக்கு முக்தி தரக்கூடியனவாகும்.

## கபில பர்வத முனி லிங்கங்கள்

பாபநாசத்துக்கு வடக்குத் திசையில் பத்ம புஷ்கரம் என்ற நீர் நிலை உண்டு. இதன் தீரத்தில் கபில முனிவர் ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வணங்கினார். இந்த லிங்கத்தைத் தரிசிப்பவர் தம் விருப்பங்களை விரைவில் அடைவர்.

அதே பகுதியில் பர்வத முனிவர் விதிப்படி ஒரு லிங்கம் பிரதிஷ்டை செய்தார். அந்த லிங்கத்தைத் தரிசிக்கக் கமனம், குளிகை முதலான சகலவகையான சித்திகளையும் அடையலாம்.

### இந்திர தீர்த்தமும் சோதி மலையும்

பத்ம புஷ்கரணிக்கு வடக்குத் திசையில் கருமலை என்ற மலை உண்டு. அங்குள்ள காட்டுப்பகுதியில் மூன்று நதிகள் கூடுகின்ற கூடலுக்குத் தென்கரையில் பள்ளத்தாக்கு ஒன்று உண்டு. அங்கே இந்திரனால் கிறப்பட்டு இந்திர தீர்த்தம் என்ற பெயருடைய ஒரு தீர்த்தம் இருக்கிறது. அந்த இந்த தீர்த்தத்தைப் பாபவிநாசம் என்றும் சொல்வார்கள். அவ்விடத்துக்கு அருகிலுள்ள புண்ணியமான சே ாதிமலையில் சதாசிவன் அருள்புரிந்து வருகிறார்.

அவ்விடத்தில் தாமிரபரணிக்குப் பரமசிவன் அருள்செய்தார். அங்கே கும்பமுனிவர் இந்திரனைக் கொண்டாடிப் புண்ணிய நீராடி விதிப்படி ஹோமம் வளர்த்துப் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து அருள்பெற்றார்.

### தேவர்கள் திரும்புதல்

இந்திரகீலத்தில் லிங்கத்தைப் பூஜை செய்த அகத்தியர், அதன்பின் ஹயக்ரீவர் ஆசிரமத்துக்குச் சென்றார். அங்கே மூன்று இரவுகள் தங்கியிருந்தார். அதன்பின் அவர் தன்னுடைய ஆசிரமத்தை அடைந்தார்.

அகத்தியர் தன் ஆசிரமத்துக்குச் சென்றவுடன் வருணன் அவர்களிடமிருந்து விடைபெற்றான். அதன்பின் குபேரன் புஷ்பவிமானம் ஏறி அளகாபுரிக்குப் போனான். வாயு பகவானும், தர்மராஜனும் ஈசானன் முதலிய தேவர்களும் தங்கள் இருப்பிடம் திரும்பினர். அதன்பின் கபிலர், தும்புரு முதலான எல்லா முனிவர்களும் தத்தம் இருப்பிடம் திரும்பினர் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (87)

## எங்கு எவ்வளவு நாட்கள்?

அகத்திய முனிவர் எந்தெந்தத் தலங்களில் எவ்வளவு நாட்கள் தங்கினார் என்ற விவரம் தாமிரபரணி மகாத்மியத்தில் சொல்லப் பட்டுள்ளது.

அகத்தியர் காதம்பரி வனத்தில் சங்கமத்தில் மூன்று இரவு கள் தங்கினார். சோமாரண்யத்தில் (ஆத்தூரில்) மூன்று இரவு

கள் இருந்தார். ரமாபுரத்தில் (ஆழ்வார்திருநகரியில்) ஒரு பகல் தங்கினார். ஸ்ரீவைகுண்டத்தில் ஒருபகல் இருந்தார். சராடவி யில் (நாணல்காட்டில்) இரண்டு பகல்கள் இருந்தார். ஸ்ரீவில்லிப் பேரையில் ஒருபகல் தங்கினார். வேணுவனத்தில் (திருநெல்வேலி யில்) ஐந்து பகல் தங்கினார். வியாசாச்ரமத்தில் (சேரன்மாதேவியில்) ஒருபகல்இருந்தார். இந்திரவிருட்சபகுதியில் (திருப்புடைமருதூரில்) இரண்டு இரவு தங்கினார். இந்திர கீலத்தில் (பாபவிநாசத்தில்) மூன்று பகல்கள் இருந்தார். ஹயக்கீரிவருடைய ஆசிரமத்தில் மூன்று இரவுகள் தங்கினார்.

அதன்பின் அகத்தியர் ஹயக்ரீவ முனிவருடன் ஒரு ஆனிமாதம் சுக்லபட்சம் துவாதசி திதி பானுவாரத்தில் சந்திரன் விசாகத்தோடு இருக்க சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்ட துலா லக்னத்தில் தன்னுடைய ஆசிரமத்தில் பிரவேசித்தார் என்கிறது தாமிரபரணி மகாத்மியம்.

## (38)

## சித்தபூமியின் சிறப்பு

மகா புண்ணியமான இந்திரகீலத்தில் (பாபவிநாசத்தில்) பரமசி வன் ஸ்ரீதாமிரபரணிக்கு எவ்விதத்தில் அருள்செய்தார் என்பதை 20-ஆம் அத்தியாயம் விளக்கியுள்ளது.

### சித்தபூமியானது

அகத்தியர் தாமிரபரணியைச் சமுத்திரராஜனோடு சேர்த்துப் பல்வேறு தலங்களை வணங்கித் தன் ஆசிரமத்தை அடைந்தார். அந்த ஆசிரமத்தில் நான்கு புறங்களிலும் அமைந்த பத்து யோசனை தூரம் அதாவது 80 மைல் சுற்றளவுள்ள பரப்புச் சித்தபூமியாக ஆயிற்று.

மாமுனிவர் வாழ்ந்த இடமல்லவா? அங்கே அநாவிருஷ்டி (மழையின்மை) ஏற்பட்டதே இல்லை. அதாவது கோடையில் உண்டாகக்கூடிய கொடுமைகள் ஏதும் விளையவில்லை. வேண்டிய நேரங்களிலெல்லாம் மழை பொழிந்து கொண்டிருந்தது. சுகமான தென்றல் காற்று எப்போதும் வீசிக் கொண்டிருந்தது. பனிக்காலமும் சரி, இலையுதிர் காலமும் சரி சிறப்புடன் அமைந்து வந்தது. தாமிரபரணி தீரத்தில் வசித்துவருகிற ஜனங்கள் எல்லாக் காலத்திலும் தர்மம் அளிப்பதில் விருப்பமுள்ளவராகவே இருக்கிறார்கள். இப்படி இந்தப்பகுதி சித்தபூமியாக இருந்து சிறப்புடன் திகழ்கிறது.

அங்கு வாழும் பறவைகளிடம்கூட இயற்கையான ஜாதி விரோதத்தைக் காணமுடிவதில்லை. கோட்டானும் காகமும்

விரோதமற்று உலவுகின்றன. அகத்திய முனிவர் அங்கிருப்பதால் எல்லா உயிரினங்களும் இரவும் பகலும் தியானம் பண்ணி யோகீஸ்வரனைப் போலத் தாமிரபரணிக்குப் புனித நீராட வருகின்றன. அவைகளெல்லாம் செவிக்கு இன்பமான பாடல் களையே பாடுகின்றன.

### அகத்தியக் கூடத்தின் நிலை

அகத்தியக் கூடமானது பிரம்மலோகம் போல விளங்குகிறது. அது சிலருக்கு மட்டும் அருமையானது. தகுதியில்லாதவர்களால் வேதங்கள் அடையக்கூடாதது போலவும் பாவிகள் சொர்க்கம் அடைய முடியாததுபோலவும் ஆத்ம ஞானம் இல்லாதவர்களால் அகத்தியக்கூடம் செல்லத்தகாததாக இருக்கிறது.

## (89)

## முகத்தில் தோன்றிய கரும்புள்ளிகள்

அகத்தியர் ஆஸ்சிரமத்துக்கு அருகிலிருந்த சிறப்புற்ற நகரம் விருஷாங்க நகரமாகும். இந்த நகரில் அமைந்த அழகுபொருந்திய அரண்மனையில் தாமிரபரணி தேவி எழுந்தருளியிருந்தாள். அவள் ஸ்நானம், பூச்சு, ஆடை ஆபரணங்களைத் தரித்துத் தேவாரம் (வழிபாடு), யாகம் முதலானவற்றை முடித்து உணவு மற்றும் தாம்பூலங்களைப் பெற்றுத் தோழியருடன் வேடிக்கையாகவும் உற்சகமாகவும் பேசிக் கொண்டு பகலைக் கழிப்பாள். இரவிலும் இவ்விதமாகவே சந்தோஷமாகவே இருப்பாள். தன் சொல்லாலும் செயலாலும் தன் சேவகர்களைக் காப்பாற்றிக் கொண்டு குதூகலமாக இருந்துவந்த நேரத்தில்...

### முகத்தில் புள்ளிகள்

தாமரைமலரைப் போன்ற மிக அழகியதான தாமிரபரணி தேவியின் திருமுகத்தில் ஒருநாள் காலை கரும்புள்ளிகள் தோன்றியிருந்தன. விசேஷமாகத் தோன்றிய அந்த கரும்புள்ளிகளைப் பார்த்த தேவியின் தோழியர் இது என்ன விந்தை? என ஆச்சரியப்பட்டனர்.

அப்போது குமுத்துவவதி என்பவள் தாமிரபரணி தேவியின் வதனத்திலிருந்த பொட்டுக்களைப் பார்த்து அவள் அருகில் சென்றாள். ''தாயே! உன் திருமுகத்தில் கருந்தழும்புகள் காணப்படுகின்றன. இவை எதனால் வந்தன? எப்படி உண்டாயின? என்ற காரணம் தெரியவில்லை'' என்று சொன்னாள். தாமிரபரணி தன் முகத்தில் உள்ள புள்ளிகளைப் பார்க்க வேண்டும் என நினைத்தாள். எனவே ரத்தினக் கண்ணாடியைத் தேவியிடம் தந்தாள் குமுத்துவவதி.

தோழி தந்த கண்ணாடியில் தன் தாமரை முகத்தைக் கண்டாள் தேவி. கருந்தழும்புகள் உருவாகியிருப்பதை ஒரு நொடியில் அறிந்து கொண்டாள். கண்ணாடியை விட்டு முகத்தைத் திருப்பி மனதில் ஆச்சரியம் கொண்டாள்.

## தாமிரபரணியின் விருப்பம்

தன் முகத்தில் கரும்புள்ளிகள் தோன்றியிருப்பதைக் கும்பமுனிக்குத் தெரிவிக்க விருப்பம் கொண்டாள்; படுக்கையை விட்டு எழுந்தாள்; நாட் கடன்களை முடித்தாள்; தோழியருடன் அகத்திய ஆசிரமத்துக்கு எழுந்தருளினாள்.

தாமிரபரணியைச் சித்தர்களும் தேவர்களும் முனிகணங்களும் துதித்தனர். பற்பல ஆயுதங்களைத் தரித்து அநேக சேவகர்கள் நெருக்கமாகச் சென்று சேவித்தனர். நான்கு பக்கங்களிலும் தோழியர்களும் கைகட்டிச் சேவித்தனர். தாமிரபரணி அன்னவாகனத்தில் ஏறினாள்; பயணித்தாள்; இரண்டு பக்கங்களிலும் தோழியர்கள் சாமரங்களை வீசினர்; தலைக்கு வெண்குடை பிடித்தனர். இவ்வாறாக அவள் அகத்திய முனிவர் ஆசிரமத்துக்குச் சென்றாள். வாகனத்திலிருந்து இறங்கி உள்ளே பிரவேசித்தாள்.

## கும்பமுனிவரின் கேள்வி

தன் ஆசிரமத்துக்குத் தாமிரபரணி வந்திருப்பதை அறிந்து கொண்ட அகத்தியர் ஐந்தாறு அடிகள் முன்புறமாக வந்தார். தேவிக்குக் கைலாகு கொடுத்தார். உள்ளே அழைத்துச் சென்றார். ஒரு இருக்கையில் அமர வைத்தார். அவளைப் போற்றிப் புகழ்ந்து,

''தாயே! ஆனந்தக்குழம்பே, மாலிகையே, மலயராஜகுமாரியே, பாவத்தைத் தொலைப்பவளே, உன்னுடைய தீர்த்தத்தினால் மூன்று உலகங்களையும் பரிசுத்தம் செய்து வருகிறாய் அல்லவா? உன்னுடைய விருப்பங்கள் நிறைவேறுகின்றனவா? உன்னுடைய அரண்மனையில் அனைவரும் க்ஷேமமா? சமுத்திரராஜன் நல்உள்ளத்துடன் உன்னிடத்தில் நேசமாக இருக்கிறானா? உன்னிடத்திலிருந்து நல்முத்துக்கள் புத்திரர்களை போல வளர்ந்து வருகின்றனர் அல்லவா? உன் இரு கரைகளிலும் வசிக்கின்ற பக்தர்கள், அந்தணர்கள், பசுக்கள் முதலானவர்களுக்கு நன்மைகள் பெருகி வருகின்றனவா? நீ இவ்விடத்துக்கு உலக நன்மை காரணமாக எழுந்தருளி இருக்கிறாய் என்று நினைக்கிறேன். கல்யாண குணங்கள் கொண்டவளே! நீ எழுந்தருளிய காரணத்தைத் தெரிவிப்பாய் ஆகுக'' என்று சொன்னார்.

## தாமிரபரணியின் வேண்டுகோள்

அன்பும் ஆதரவும் ததும்ப கும்பமுனி இவ்வாறு கேட்டவுடன் மகாநதி கைகூப்பினாள். முனிவனை வணங்கினாள். "ஓ பகவானே! கருணைக்கடலே! உங்களுடைய அருளால் எல்லாம் நலமாகவே இருந்து வருகிறது. எல்லா வேதங்களும் அந்தணர்களும் சித்தர்களும் சுத்தர்களும் நான் தங்களுடைய அடியவளாக இருக்கிற காரணத்தால் எல்லாக் காலத்திலும் என்னை அனுக்ரஹம் பண்ணி வருகிறார்கள். எனினும் அரண்மனையில் சுகவாசம் பண்ணும் எனக்கு ஒருவிதமான வருத்தம் உண்டாகியிருக்கிறது. இரவு சமயம் சென்று காலை எழுந்து பார்க்கும்போது ஒவ்வொரு நாளும் என் முகத்தில் கரும்புள்ளிகள் காணப்படுகின்றன.

காலையில் தெரியும் கரும்புள்ளிகள் மாலையில் மறைந்துவிடுகின்றன. இரவு உறங்கி எழுந்தவுடன் மீண்டும் தென்படுகின்றன. இதற்குரிய காரணமென்ன என்று தெரியவில்லை. எனக்கு இதற்கு மேலும் எந்தவொரு தீங்கும் நீங்காமலிருப்பதற்காக இதுபற்றித் தேவரீரிடம் ஆலோசிக்கவே வந்தேன்" என்று கேட்டுக் கொண்டாள்.

## அகத்தியர் சொன்ன காரணம்

தாமிரபரணி தேவியின் வார்த்தைகளைக் கேட்ட அகத்தியர், ஒருநிமிடம் ஆலோசித்தார். வியப்படைந்தார். கரும்புள்ளிகள் தோன்றுவதற்குரிய காரணத்தைத் தன் ஞானத்தால் உணர்ந்தார். பின்னர் அவளைப் பார்த்துத்,

தாயே உன்னிடத்தில் ஒவ்வொரு நாளும் மகாபாவிகள் ஸ்நானம் செய்து பாம்புகள் சட்டையைக் கழட்டுவதுபோலத் தம்முடைய பாவங்களைத் தொலைத்துச் சென்று கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் மனிதர்கள் கோடிக்கணக்கான பிராமணஹத்தி போன்றவற்றைச் செய்து பின் உன்னிடத்தில் குளித்து உனது புண்ணிய தீர்த்தத்தினால் தூய்மை பெற்றுச் சென்றுவிடுகிறார்கள்.

பசுவதை செய்தவனும் நன்றி அறிவில்லாதவனும் குருவின் மனைவியைக் கூடியவனும் வஞ்சகனும் கோள் சொல்லுகிறவனும் கொடிய மதுவை அருந்துபவனும் உயிரினங்களைத் துன்புறுத்துப வனும் இவர்களைப் போன்ற அநேக பாவிகளும் உனது தீர்த்தத் திவலையைத் தொட்ட காரணத்தினால் பாவங்களைத் தொலைத்துப் புண்ணியவான்களாகிச் சக்கரம் போலத் தடையின்றி விமானமார்க்கமாகச் சென்று வருகிறார்கள்.

இவ்விதம் உன்னிடம் சேர்ந்த பாவமானது உனது திருமுகத்தில் கருப்பாகக் காணப்படுகின்றது. அவ்விதமான பாவமானது சூரியனைக் கண்ட இருள்போல மறுபடியும் மெதுவாக நாசத்தை அடையும். தினந்தோறும் உனது முகத்தில் பாவம் சம்பந்தப்படாமல் இருப்பதற் குரிய தந்திரத்தைத் தெரிவிக்கிறேன்'' என்று சொன்ன அகத்தியர் ''இந்திர கீலம் என்று சொல்கின்ற க்ஷேத்திரம் உண்டு. அவ்விடத்தில் எழுந்தருளிச் சிறந்ததொரு சைவ விரதம் அனுஷ்டிக்க வேண்டும். அதனால் உன் பாவங்கள் தொலையும்'' என்றார்.

அப்போது தாமிரபரணி தேவி இந்திரகீலத்தின் பெருமை என்ன என்று வினவினாள். அதற்கு அகத்தியர் சொன்ன விரிவான விடை அறிவோமே.

# (40)

# தசீசி முனிவரின் சிந்தனை

அகத்திய முனிவர் இந்திர கீலத்தின் பெருமைகளைத் தாமிரபரணி தேவிக்கு விளக்கினார். அப்போது தேவர்கள் தசீசி முனிவரிடம் வேண்டிக் கொண்டமையும் தசீசி முனிவர் சிந்தனையையும் தாம்ரபர்ணீ மகாத்மியம் விளக்கியுள்ளது.

## தேவர்களின் வேண்டுகோள்

முன்னொரு காலத்தில் விருத்திராசுரனுக்குப் பயந்த இந்திரன் அக்னி முதலான தேவதைகளுடன் தசீசி முனிவரிடம் சென்றான். அவருடைய முதுகெலும்பினைத் தனக்குத் தரும்படி வேண்டிக் கொண்டான். அவரும் தேவதைகளுக்கு முறைப்படி மரியாதை செய்தார். அவர்கள் வேண்டிய விஷயத்தில் என்ன முடிவெடுப்பது என்று யோசிக்கலானார்.

## தசீசியின் எண்ண ஓட்டம்

பரமசிவனின் திருவிளையாடல் மிகவும் ஆச்சரியப்படுத்துவதாக இருக்கிறது என்று நினைத்த தசீசி முனிவர் உலகிலுள்ள உயிர்கள் பல ஒன்றுபோல் இருந்தாலும் அவைகளிடையில் ஏராளமான வித்தியாசங்கள் காணப்படுகின்றன. அவ்விதமான வேற்றுமைகள் அமைவதற்குக் காரணங்கள் அறிவும், அறிவீனமே ஆகும். பிறந்தநேரம், இடம், பலம் இவைகளுக்குத் தகுந்தபடி தண்ணீரின் நிறம், புத்தி முதலியவை பற்பலவிதமாகக் காணப்படுவதுபோல யோனி தோஷங்களினால் உயிர்களிலும் வேற்றுமைகள் காணப்படுகின்றன.

## ஜீவனின் நிலை

அறிவின்மையால் பலவிதமான மயக்கங்கள் உண்டாகின்றன. ஞானம், அஞ்ஞானம் இவற்றுடன் உயிர் புத்தியில் வீற்றிருக்கிறது. அவ்விதம் இருக்கும் ஜீவனானது புண்ணியம் அல்லது பாவத்தால் இழுக்கப்படுகிறது. செய்கையே இவ்வாறு இழுக்கப்படுவதற்குக் காரணமாக அமைகிறது. கருமத்தினால்தான் உயிரினங்கள் பூமியில் பிறக்கின்றன மற்றும் இறக்கின்றன.

கருமத்தால்தான் உயிரினங்களுக்குத் துக்கம் விளைகிறது; புண்ணியமும் கிடைக்கிறது. உயிர் சரீரத்தின் சுகதுக்கங்களைப் பற்றி ஆராயும்போது அது மாயாசக்திக்கு இருப்பிடமாகிறது.

ஆகையால்தான் அறிவிலி மாயா சக்தியால் உண்டாகிற மோகத்தை அடைகிறான். கற்றறிந்தவனும் மோகத்தை விடுவதில்லை. ஆனால், உலகத்திலுள்ள எல்லாரும் அவரவருடைய காரியங்களைக் குறிப்பிட்டு முடிக்கவே விரும்புகின்றனர். இத்தகைய தன்மைகளைப் பற்றி யோசிக்கும் விதத்தில் அசையாப் பொருள்களைக் (ஸ்தாபரம்) காட்டிலும் அசையும் பொருள்கள் (ஜங்கமம்) உயர்ந்த நிலையில் இருக்கின்றன. ஜங்கமத்தைக் காட்டிலும் கர்ப்பத்தில் தங்கி உண்டாகிற உயிரினங்கள் (ஜராயுஜம்) சிறந்த முறையில் சிந்திக்கின்றன. அவற்றுள் சிறந்தது மனிதப்பிறப்பு. மனிதர்களுள்ளும் கற்றுணர்ந்தவன் சிறந்தவன்; அவர்களுள்ளும் தேவதைகள் சிறப்புற்றவர்கள்.

## ததீசி எடுத்த முடிவு

தேவதைகளிடத்தில் புத்தி சக்தியும் பலமும் தைரியமும் அறிவும் கைத்தொழிலும் தயையும் தருமமும் சத்தியமும் பொதுநன்மையும் இருக்கின்றன. இவைகள் தேவதைகளிடத்தில் பரமாத்மாவினால் ஏற்படுத்தப்பட்டவை. நந்தவனத்தில் கற்பகக் கொடிபோல் இவர்களிடம் அருள்தொடர்பான முயற்சி மட்டும் விளங்கிக் கொண்டிருக்கின்றது.

இத்தகைய உயர் பண்புகள் கொண்ட தேவதைகள் என்னிடம் வந்து எலும்பினைத் தருமாறு கேட்டுக்கொண்டது கருணைகாரணமாகவா? அல்லது வேறுவிதமாகவா? என விளங்கவில்லை. தங்கள் செயல் ஈடேற வேண்டும் என்ற காரணத்துக்காக என்னிடம் இப்படி வேண்டுவது நியாயமானதா? உலகில் வாழும் உயிரினங்கள் வியாதி முதலானவற்றால் கடுமையாகப் பற்றப்பட்டிருந்தாலும் கூடத் தங்களுடைய சரீரங்களைத் தியாகம் பண்ண விரும்புவதில்லையே?

மொந்தை (பால் கறக்கும் குடுவை) இல்லாவிட்டால் பால் கறக்க முடியாதவல்லவா? அதுபோலச் சரீரம் இல்லாவிட்டால் தர்மம் முதலான நான்கு புருஷார்த்தங்களைப் பெற முடியாதல்லவா?

எல்லாவிதமான தர்மங்களைக் காட்டிலும் மற்றவர்களுக்கு உதவி செய்வது சிறந்த தர்மமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்களும் பரோபகார தர்மத்தைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளன.

தேவதைகளால் உலகில் தர்மம் சம்பாதிக்கக் கருவியாக் ஏற்படுத்தப்பட்டதான என்னுடைய சரீரத்தைத் தேவதைகளிடம் தந்துவிட்டு நான் நற்கதியைப் பெறுகிறேன்.

உயர்ந்தவர்களான தேவர்கள் யாசிக்கிறபடியால் கேவலமான இந்தச் சரீரத்தை அவர்களுக்கு தந்து அவர்களை மகிழ்வித்துத் தேவர்களுக்கும் அரிதான நற்கதியைப் பெறுகிறேன் என்று உறுதி செய்து கொண்டார் தசீசி முனிவர். அவர் அதனைச் செயல்படுத்தியவிதம் சுவாரசியமானது.

(41)

## பிரமலோகம் சென்ற தசீசி

தன்னுடைய எலும்பு, பொதுநலத்துக்குப் பயன்படுத்தப்படுவதை அறிந்த தசீசி முனிவர் பரோபகாரத்தின் மேன்மையைப் பற்றி யோசித்தார். தேவர்களை அழைத்தார். ''நீங்கள் எல்லாரும் மிக விரைவில் நன்மையை அடைவதற்காக உயரிய பாத்திரங்களாகிய தங்களிடம் எனது சரீரத்தைத் தந்துவிடுகிறேன்'' என்று உறுதி தந்தார்.

### ரிஷி செய்த யோகம்

யோகம் வல்லவரான தசீசி முனிவர் தன் உயிரை உடலிலிருந்து வெளியேற்றுவதற்கான யோகம் செய்யத் தொடங்கினார். எடுத்த எடுப்பில் ஆசனத்துவாரத்தின் மூலமாக வெளிப்படக்கூடிய அபான வாயுவை அடக்கினார். அதன்பின் மூலாதாரத்தில் மூண்டெழு கனலில் இருக்கக் கூடிய பிராணவாயுவை இளக்கினார். சுசூம்நா என்கிற நாடியில் ஏற்றினார். பிராண வாயுவைப் பிடித்தார்.

அதன்பின் பஞ்சபூதங்களையும் ப்ருத்வி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாயம் என்கிற ஐந்துகளிலும் குணங்களைக் குணங்களிலுமாகச் செலுத்தினார்.

காம, குரோத, லோப, மோக, மத, மாச்சரியங்கள் என்னும் ஆறு விதமானபகைவர்களைஅடக்கினார். கண்முதலானஇந்திரியங்களின் சக்தியை மெல்ல மெல்லக் குறைத்தார். ஆறு கிரந்திகளுக்குப் (முடிச்சுகளுக்கு) பிராண வாயுவைக் கொண்டுவந்தார்.

### பிரமலோகம் போனது உயிர்

ஆறு கிராந்திகளுக்குக் கொண்டுவந்த பிராண வாயுவைத் தலையின் பின்புறமாகக் கொண்டுசென்று அதனைப் புருவங்களுக்கு மத்தியில் நிறுத்தினார். அதன்பின் பிராணனை அமிர்தாலயத்துக்குக் கொண்டு சென்றார். மகாபத்மத்தில் இளைப்பாறச் செய்தார். உயிர் ஆனந்தமாகிய அமிர்தத்தைப் பெறுவதற்காகப் பிரமரந்திரத்தை அதாவது உச்சியில் இருக்கும் துவாரத்தைப் பிளந்து கொண்டு புறப்பட்டது. அந்த மாசற்ற ஒலி நாதம் முடிவு பெறுகிற உயரத்தில் கிளம்பி விமான வடிவை மிஞ்சி ஆதித்த மண்டலத்தின் வழியாய் மத்தியில் நுழைந்து பிரம லோகத்துக்குச் சென்றது.

நான்முகன் முதலான எல்லாத் தேவர்களும் இதனைக்கண்டு வியந்தனர். தசீசி முனிவரைக் கொண்டாடினர். உடனே தேவ சிற்பியான விஸ்வகர்மா அழைக்கப்பட்டான். அவன் வஜ்ராயுதத்தை வடித்தது எவ்வாறு? விவரம் அறியலாமே.

## (42)

## இந்திர கீலத்தின் பெருமைகள்

தசீச முனிவர் உயிர் விடுத்தார். அதன்பின்னால் விஷ்ணு முதலானவர்கள் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காகத் தேவசிற்பியான விஸ்வகர்மாவை அழைத்து வருமாறு சொன்னார்கள். விஸ்வகர்மாவும் வந்து சேர்ந்தான்.

### கட்டளையை ஏற்ற விஸ்வகர்மா

புத்திசாலியான சிற்பியே! வஜ்ராயுதம் ஒன்றினால் மட்டுமே இந்திரனால் சுலபமாக விருத்தாசுரனைக் கொல்ல முடியும். மற்ற எந்தஆயுதத்தினாலும் முடியாது. வஜ்ராயுதத்தை இந்த எலும்புகளால்தான் உருவாக்க முடியும் என்று தேவர்கள் கட்டளையிட்டனர். கட்டளையை ஏற்ற விஸ்வகர்மா முனிவனுடைய உடல் இருக்குமிடத்தை அடைந்தான். தேவர்கள் செவியில் விழுமாறு, ''எல்லாத் தேவதைகளுடைய உத்தரவினாலும் சூரிய பகவானுக்குரியதான என்னுடைய கைகளால் ரிஷியின் உடலைத் தொடுகிறேன்; அமுத சொரூபியான சந்திரனுடையதான கண்களால் உடலை நோக்குகிறேன்; மகாவிஷ்ணுவினுடைய பலத்தினால் இந்தத் தேகத்தை அசைக்கப் போகிறேன்'' என்று கூறிக் கொண்டே தேகத்தை வலம்வந்தான்; அதற்கு அருகில் சென்று அதைத் தொடப்போனான்.

## பூதம் ஒன்று புறப்பட்டது

வலம்வந்து தசீசி முனிவரின் உடலை எடுப்பதற்காக அதன் அருகில் சென்ற நிலையில் நெருப்பைப் பழிக்கக் கூடியதான சிவந்த நிறமுடைய பூதம் ஒன்று அந்த உடலில் இருந்து புறப்பட்டது. அதன் குரல் இடி இடிப்பதுபோலக் கணீரென்று இருந்தது. அது சிற்பியை நோக்கி, "இந்த உடலை எந்த நிலையிலும் பூமியில் வைக்கக் கூடாது; நற்குணமில்லாத தீயோர்கள் இந்த உடலைக் கண்ணால் காணக்கூடாது; மகாபலசாலியான விஸ்வகர்மனே! இந்த அஸ்திக் கூட்டத்தினால் வஜ்ராயுதத்தை உண்டுபண்ணுக" என்று சொல்லிவிட்டு ஒருநொடியில் மறைந்துவிட்டது.

## இந்திர கீலங்கள் பதினாறு

விஸ்வகர்மன் சிவபெருமானிடம் முறையிட்டு அவர் போர்த்திக் கொண்டிருந்த யானைத் தோலை வாங்கினான். அதைப் பூமியில் பரப்பினான். அந்தத் தோலின் மீது முனிவரின் உடலை எடுத்து வைத்தான். உடலில் உள்ள எலும்புகளைச் சேகரித்து வஜ்ராயுதத்தை உண்டுபண்ணத் தொடங்கினான். அந்தநிலையில், பூமியானது இச்செயலால் விளைந்த பாரத்தைத் தாங்க முடியாமல் கடுமையான புயலில் அகப்பட்ட மரக்கலத்தைப் போலத் தடுமாறத் தொடங்கியது.

தடுமாற்றம் தாங்காமல் பூமியிலுள்ள இரண்டு விதரமான பொருள்களான அசையும் (சர) பொருள்களும் அசையாப் (அசர) பொருள்களும் கூக்குரலிட்டன. அப்போது மகாவிஷ்ணு அங்கு வந்தார். மீதமிருந்த எலும்புத் துண்டுகளை எடுத்துப் பூமி அசையாமல் இருக்கும்படி முளையடிக்குமாறு கட்டளையிட்டார்.

மகாவிஷ்ணுவின் உத்தரவுப்படி இந்திரன் 16 இடங்களில் முளையடித்தான்.

மகேந்திர பர்வதம், மலயபர்வதம், விந்திய பர்வதம், இமாலய பர்வதம், கந்தமாதன பர்வதம், களிந்தம், மணிக்கூடம், கவுரஜனம், கோணாசலம், சந்திரகூடம், மந்தரம், சகியம், சரத்துவதி, அம்பரமலை, சங்ககூடம், மகாமேரு என்ற பதினாறு மலைகள் அந்த நேரத்தில் இந்திரனால் முளையடிக்கப்பட்ட மலைகளாகும்.

வஜ்ரமுளைகள் அடித்து உறுதி செய்யப்பட்டதனால் பூமி அசையாமல் சாந்தமாக இருந்து வருகிறது. ஆதலால் பூமியிலுள்ள இந்தப் பதினாறு இடங்களும் இந்திரகிலம் என்று சொல்லப்படும். அவற்றுள் ஒன்று பாபநாசம்.

## இந்திரகீலங்களின் பெருமை

இந்திரனால் முளையடிக்கப்பட்ட இந்திர கீலங்களுக்குத் தனிப்பெருமைகள் உண்டு. பாபநாசப்பகுதியும் இந்திர கீலமாகும். இந்திர கீலங்கள் தருமங்களுக்கு இருப்பிடமாகத் திகழ்பவை. பாவங்களைத் தொலைப்பவை. இந்த இடங்களில் சிறிதளவு தவம் செய்தாலும் போதும் இந்திரனுடைய அருளால் அட்டமாசித்தி களைச் சுலபமாக அடைந்துவிடலாம்.

பூமியானது இந்த இடங்களால் அசைவின்றிச் செய்யப்பட்ட மையால் எல்லா வகையான உயிரினங்களும் தேவர்களும் பயத்தை விட்டுச் சுகமாக வாழ்ந்து வருகின்றனர்.

### வஜ்ராயுதத்தால்

இந்திர கீலங்களால் பூமி சமனப்பட்டது. நிலையாக நின்றது. விஸ்வகர்மா தொடர்ந்து வஜ்ராயுதத்தைத் தயார்செய்து ஆயுதத்தை உருவாக்கி இந்திரனுக்குத் தந்தான். வஜ்ராயுதம் மட்டுமே விருத்திராசு ரனைக் கொல்லும் சக்திபடைத்ததாகும். இந்திரன் வஜ்ராயுதத்தால் விருத்திராசுரனைக் கொன்றான். அதன்பின் சொர்க்கத்துக்குச் செ ன்றான். இந்திராணியுடன் கூடினான். மற்றத் தேவர்களுடன் மகிழ்ச்சியாகச் செங்கோல் செலுத்திவந்தான். மகாவிஷ்ணுவுடன் சேர்ந்து இந்தப் பதினாறு தலங்கள் சம்பந்தமாகப் பற்பல வரங்களை அளித்திருக்கிறான் என்றார் அகத்திய முனிவர்.

## (48)

## அகத்தியர் சொன்ன விரதம்

இந்திர கீலங்கள் புண்ணிய பூமிகள். அவற்றில் ஒன்றான பாபநாசத் துக்கு தாமிரபரணியைத் தோழியுடன் செல்லுமாறு கட்டளையிட்ட அகத்தியர், அங்கே சென்று தாமிரபரணியின் முகத்தில் தோன்றிய கரும்புள்ளிகள் நீங்குவதற்கான விரதத்தைத் தொடங்க வேண்டும் என்றார்; விரத முறைகளை விவரித்தார்.

### பூசுத்தி

சூரியன் சாபராசிக்கு வரும்போது அதாவது மார்கழி மாதத்தில் விரதத்தைத் தொடங்க வேண்டும். அவன் மகர மாதத்துக்குச் செல் லும்போது அதாவது தை மாதத் துவக்கத்தில் விரதத்தை முடிக்க வேண்டும்.

காலையில் மகாநதியான தாமிரபரணியில் புனித நீராட வேண்டும். அதன்பின் ஆசாரியனைப் பூசிக்க வேண்டும். பின்னர்க் குருவை

வேண்டிக் கொள்ள வேண்டும். நதியின் கரை, மலயபர்வதம், மாட்டுத் தொழுவம், குருவின் இல்லம், தேவாலயம் என்னும் இந்த இடங்களில் ஏதாவதொன்றில் பூஜை செய்யலாம். பூஜை செய்யுமிடத்தைக் கோமயத்தால் சுத்திசெய்ய வேண்டும்.

## நிறுவும் முறை

ஐந்து நிறங்களையுடைய கொடிகளால் ஐந்து நிறத்தில் தாமரை மலரைக் கோலமாக இடவேண்டும். அந்தத் தாமரை மலரைப் பரமேஸ்வரனையும் பார்வதியையும் தியானித்து ருத்ராநுவாகப் பிரகாரமாக ஆவாஹனம் செய்ய வேண்டும். மற்றக் கிரியைகளையும் செய்ய வேண்டும். அட்சதையால் ஸ்ரீசக்கர பூஜாவிதிப்படித் தேவி பூஜை செய்ய வேண்டும்.

அதற்குத் தென்பக்கத்தில் ஸ்வஸ்திக வடிவமான பத்மத்தைக் கோலமாக இடவேண்டும். நூலினால் சுற்றப்பட்ட ஒரு குடத்தைத் தானியத்தால் நிறைக்க வேண்டும். அதனை ஸ்வஸ்திகத்தின் மேல் வைத்து அந்தக் குடத்தில் பூதேவியை ஆவாஹனம் செய்து சந்தனம், அட்சதை முதலியவற்றால் பூஜை செய்ய வேண்டும்.

## பூஜை முறை

தாமரை மலரில் நிறுவப்பட்டுள்ள மகாதேவரை முதலில் பூஜிக்க வேணடும்.

சோமன் - ஈசானன்

சங்கரன் - ஹரன்

கிரிசன் - பீமன்

சாந்தன் - சர்வன்

கங்காதரன் - சசிதரன்

காமதன் - காமதகனன்

சூலி - உக்கிரன்

சம்பு - பர்கன்

என இவ்விதம் இரட்டைகளான சிவநாமங்களை உச்சாடணம் செய்து தூய்மையான வில்வத்தால் சிவனை அர்ச்சிக்க வேண்டும்.

அதன்பின் பார்வதி தேவியைப் பூஜிக்க வேண்டும். பார்வதியைப் பூஜிக்கும்போது

கிரிஜா - ஆர்யா

கவுரீ - அம்பா

*சாம்பவீ - துர்கா*

*மாயா - ஹைமவதீ*

*பஞ்சமீ - காளீ*

*காத்யாயினீ - இலா*

*அன்னதா - சத்யா*

*அருணா - ஸ்ரீ*

என்ற எட்டுவிதமான இரட்டை நாமாக்களை உச்சரித்து அட்சதைகளாலும் தாமரை மலர்களாலும் தேவியை அர்ச்சனை செய்ய வேண்டும். முறைப்படித் தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலம் முதலானவற்றாலும் உபசாரம் செய்ய வேண்டும். இவ்வாறு பூஜை செய்தபின் மந்திரம் ஜபித்து அர்க்யம் தருதல் வேண்டும்.

***நமோஸ்து நீலக்ரீவாய கவுர்யை தேவ்யை நமோ நம:***

***அர்க்யம் தாஸ்யாமி யுவயோ: ப்ரீதௌ மே பவதாம் ஸதா***

என்ற மந்திரத்தைச் சொல்லி மூன்றுதரம் அர்க்யம் தருதல் வேண்டும்.

## முடிவில் தானம்

பூஜை செய்தபின் வேதாந்தக் கருத்துக்களை உள்ளடக்கிய பல்வேறு துதிகளால் துதி செய்தல் வேண்டும். பூஜையில் ஏதாவது குறைபாடு நேர்ந்திருக்குமானால் அதனைப் பொறுத்தருளும்படிப் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும். பின்னர்த் தானியம் நிறைத்திருக்கக் கூடிய குடத்தை ஒரு தாம்பாளத்தில் வெற்றிலைப் பாக்குத் தட்சிணையுடன் வைத்து,

*ஸோமஸ்த்வமஸி விப்ரேந்த்ர பிரதி கிருஹ்ய மதர்பிதம்*

*அபீப்சிதம் பலம்தேஹி பாபம் நாசய மே குரோ*

என்ற மந்திரத்தைச் சொல்லி விரதம் முற்றுப்பெற விருப்பம் தெரிவித்துக் குருவுக்குத் தருதல் வேண்டும். அவரிடம் ஆசிபெற வேண்டும். பிரசாதத்தைக் தரித்துக் கொண்டு எழுந்தருள்வதற்கான உத்யாபனம் பண்ண வேண்டும்.

## விரதம் நிறைவு முறை

மேலே சொன்ன விதிகளின்படி ஒரு மாத காலம் அவிசை உண்டு விரதம் அனுஷ்டிக்க வேண்டும். சூரியன் மகர ராசிக்கு வரும்போது உமாசகிதராகச் செய்த பூஜை முடித்து குருவைத் தெய்வமாகப் பாவித்துத் தானம் தரவேண்டும். காராம்பசு அல்லது வெள்ளை

நிறம் உள்ள பசு அல்லது கருப்பும் வெளுப்பும் சேர்ந்திருக்கிற பசுவைக் கன்றுக்குட்டியோடு தட்சிணையுடன் மந்திரம் சொல்லித் தரவேண்டும்.

பிராமணர்களுக்கு அன்னமளிக்க வேண்டும். அதன்பின் உறவினர்களுடன் உணவு உட்கொள்ள வேண்டும்.

இவ்விதமாகப் பூஜை முறையை அனுசரித்து ஒருநாள் அல்லது மூன்று நாள் அல்லது ஐந்துநாள் விரதமிருந்தாலே போதும். விரதமிருந்தவன் எல்லா வகையான பாவங்களிலிருந்தும் நீங்கி விடுகிறான். சிவபார்வதியின் அனுக்ரகத்தைப் பெறுகிறான். இப்படி விரதமிருப்பவனுக்கு எல்லாச் செல்வங்களும் பெருகுகின்றன; நீண்ட ஆயுள் கிடைக்கிறது என்றெல்லாம் விரதத்தின் மகிமையை விவரித்தார் அகத்தியர்.

## விரதமிருந்தாள் தாமிரபரணி

அகத்திய முனிவர் அருளியவற்றைக் கேட்ட தாமிரபரணி முனிவரிடம் உத்தரவு பெற்றாள். அவருடன் இந்திர கீலத்துக்கு வந்தாள். சூரியன் விருச்சிக ராசியைவிட்டுத் தனூர் ராசிக்கு வர அதாவது மார்கழி முதல்நாள் அகத்தியரைக் குருவாக வரித்து அவரிடம் தீட்சை பெற்றாள்.

அகத்தியர் சொன்ன நியமங்களுடன் தாமிரபரணி ஐந்து நாள் மந்திரம் ஓதி மண்டல பூஜை செய்தாள். ஐந்தாவது நாளன்று பதும இதழ்களின் இடையிலிருந்து சிவபெருமான் பரஞ்ஜோதியாய் லிங்க ரூபியாய்ப் பாதளத்தைப் பிளந்து கொண்டு தோன்றினார். அந்த லிங்கம் பேரழகு பொருந்தியதாக இருந்தது. மூங்கிலின் இளைய முளையைப் பழிக்கும் நிறத்திலிருந்தது. ஆனந்தக் கொடிக்குக் கிழங்காகத் திகழ்ந்தது. நன்மைகளின் இருப்பிடமாக இருந்தது. ஒளிகளுக்கு முதலாகத் திகழ்ந்தது. எல்லா வகையான புண்ணியங்களுக்கும் நிதியாக விளங்கியது. அந்த லிங்கத்தைக் கண்டவர்களெல்லாம் விரும்பியதைப் பெற்றது போன்ற ஆச்சரியத்தை அடைந்தார்கள்.

அப்போது ஆகாயத்திலிருந்து மலர்மழை பொழிந்தது; தேவ துந்துபிகள் முழங்கின; பாபநாச, மகாதேவ, பக்தராக்ஷாமணே விபோ பிரசீத பகவன் பாபாத் பரித்ராகி ஜகத்ரயம் என்ற சுலோகத்தை ஒலித்து அனைவரும் வணங்கினர்.

தன்முன் தோன்றிய லிங்கத்தின் ஒளியைக் கண்டு வியந்தாள் தாம்பிரபரணி. ஆனந்தம் காரணமாக விக்கலானாள் ஜய விஜயீ பவ: எனத் துதித்தாள்; மெய்ம்மயிர் சிலிர்த்தாள். அமர்ந்த நிலையிலிருந்து

எழுந்தாள்; கரம் குவித்தாள்; ஆனந்தக்கண்ணீர் பெருகப் பரமசிவனைத் துதிக்கலானாள். அந்தத் துதி மிகவும் அற்புதமான துதி.

## (44)

## தாமிரபரணி அருளிய துதி

தன் முன் தோன்றிய லிங்கத்தின் ஒளிகண்டு வியந்து தாமிரபரணி போற்றிய துதி நாமாவாளிகளால் ஆனது. பதினோரு பாடல்களால் ஆனது. சிவபெருமானை வணங்கிப் போற்றுதலுக்குரிய அழகிய துதியாகும். அது பின்வருமாறு:

*பவாய பவநாசாய நமப்பாபாப காரணே*
*பரிபூர்ணாய பூர்ணேந்துவதநாய நமோ நம:*
*நமோ விச்வாதி பதயே விச்வரக்ஷாவிநோதிநே*
*வேத வேதாந்த வேத்யாய நமஸ்தே விதிதாத்மநே*
*சர்வாய நிர்விகாராய சம்பவே வேதசே நம:*
*கங்காதராய கௌராய கௌரீசாய நமோ நம:*
*பாபக்நாய பவக்நாய பரஞ்ஜோதி ஸ்வரூபிணே*
*விரூபாக்ஷாய வீராய விதாத்ரே பிரம்மணே நம:*
*கபாலிநே கராளாய கலிகல்மஷநாசிநே*
*நம: பாபவிநாசாய தேஜிஷ்டா யாத்மநே நம:*
*அவ்யக்த்தவ்யக்த ரூபாய வியக்தி விந்யாஸ ஸாக்ஷிணே*
*விச்வராக்ஷாத் வரைகாந்த தீக்ஷிதாய நமோ நம:*
*நமஸ்ஸொமாவதம்ஸாய பாத்ரே பஸ்மாங்க ராகிணே*
*கிரீசாயா கிலேசாய பாபநாசாய தே நம:*
*கர்மிணே நிர்மிதா சேஷ புவநா பாய ஹாரிணே*
*விச்வத்ராணாய வீராய காலருத்ராய தே நம:*
*நம: பாபவிநாசாய பாபநாசாய சம்பவே*
*பாதக த்வாந்தரவயே சிவாயாக்லிஷ்ட மூர்த்தயே*
*நமோ நமோஸ்துப்யம் நமஸ்துப்யம் பிநாகிநே*
*நமஸ்துப்யம் நமஸ்துப்யம் நமஸ்துப்யம் நமோ நம:*
*சிவ சம்போ மகாதேவ தேவ தேவ சதாசிவ*
*ஜெயதேவ ஜகந்நாத பாபநாச நமோ நம:*

என்றெல்லாம் உள்ளன்புடன் தாமிரபரணி தேவி பாபநாசரைப் புகழ்ந்தாள். அனைவரும் மகிழ்ந்தனர்.

## சிவம் தந்த வரம்

அப்போது அந்த லிங்கத்திலிருந்து சிவபெருமான் தோன்றினார். பிறைசூடி இருந்தார்; கங்காதரராய்த் திகழ்ந்தார்; முக்கண்ணுடன் காட்சி தந்தார்; சூலம் முதலான ஆயுதங்களைத் தாங்கி நீலகண்டராக வெளிப்பட்ட அவர் தாமிரபரணியை நோக்கி, ''விரதத்தால் மகிழ்ந்தோம்; உன் விருப்பங்கள் எல்லாம் கைகூடும்; உனது திருநாமங்களை உச்சரிப்பதாலும் உன்னைத் தியானம் செய்வதாலும் உன் தீர்த்தத்தைத் தொடுவதாலும் அதில் புனித நீராடுவதாலும் பிரம்மஹத்தி முதலான மகாபாவங்களெல்லாம் சாம்பலாகிப் போகின்றதல்லவா இனி எதிர்காலத்திலும் கோடிக்கணக்கான பிரம்மஹத்தி முதலான பாவங்களும் உனது தீர்த்தத் துளிகளைத் தொழுத மாத்திரத்தில் நாசமடையக் கடவன.

அதுமட்டுமல்ல உன் திருவடிகளைத் தியானிப்பவன் தருமத்தை வளர்க்கும் உன் தீர்த்தத்தில் புனித நீராடுபவன் இவர்களுடைய கோடிக்கணக்கான பாவங்களும் கடுந்தீயில் அகப்பட்ட பஞ்சினைப் போலச் சாம்பலாகட்டும்.

எல்லா உலகங்களிலும் உள்ள பாவங்களை நீக்குவதையே தொழிலாகக் கொண்ட சகலவிதமான தீர்த்தங்களும் உன்னிடத்தில் வந்து ஆண்டுதோறும் ஸ்நானம் செய்து மாசற்றவைகளாக ஆகி வருகின்றனவல்லவா?

உனது பக்தர்களின் பாவங்கள் உன்னை எப்போதும் இனி வருத்தமாட்டா. நான் உன் பூஜையால் மகிழ்ந்தமையால் உனக்குத் தேவையான வரங்களைத் தருகிறேன் என்று தாமிரபரணியை நோக்கிச் சிவபெருமான் கூறினார்.

## தாமிபரணி கேட்ட வரம்

தனக்கு அருளிய சிவபெருமானை நோக்கித் தாமிரபரணி தேவி, ''இறைவா! தாங்கள் இந்தப் பாபவிநாச க்ஷேத்திரத்தில் இருந்து அருள்செய்து வருதல் வேண்டும். நான் தங்களிடம் அன்புள்ளவளாகத் தாங்கள் கருதும் பட்சத்தில் தாங்கள் இவ்விடத்தில் வந்து வழிபடும் பக்தர்களுக்கு எல்லாக் காலத்திலும் அருள்செய்ய வேண்டும். இந்தத் தலம் எனது பாவத்தைத் தொலைத்த மகத்துவம் காரணமாகப் பாபவிநாசம் என்ற பெயர் பெற்று மூன்றுவுலகங்களிலும் புகழ்பெற வேண்டும்.

மார்கழி மாதத்தில் இவ்விடத்தில் எனது தீர்த்தத்தில் புனித நீராடித் தங்களைத் தரிசிப்போருக்கு மறுபடியும் பூமியில் பிறவாத

நிலையை அளித்தருள வேண்டும் என்றெல்லாம் வேண்டினாள். சிவ பெருமானும் அவ்வண்ணமே அருள்செய்தார்.

அதன்பின் அவள் சூரிய பகவான் மகரராசிக்கு வர ஒரு சிறப்புப் பூஜை செய்து அகத்திய முனிவருக்குக் குருபூஜை முதலானவற்றை விரைவாகச் செய்து முடித்தாள்.

## (45)

## தாமிரபரணியில் புனிதத் துறைகள்

தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் அமைந்த 22-வது அத்தியாயம் இந்த நதியில் உள்ள புண்ணியத் தீர்த்தத்துறைகளைப் பற்றி விரிவாக பட்டியலிட்டுள்ளது.

### நதியின் பெருமை

தொடக்கம் முதல் கடலோடு கலக்கும் வரை தாமிரபரணியின் கரை புண்ணிய பூமி. கரையின் இரண்டு பக்கங்களிலும் ஏராளமான பெருமாள்கோயில்கள், சிவாலயங்கள், பிரமக்ஷேத்திரங்கள், கணபதி தலங்கள், துர்கைத் தலங்கள் அமைந்த சிறப்புடையது இது. இவை மட்டுமன்றிப் பல்வேறு முனிவர்களின் ஆசிரமங்களும் முருகனின் திருக்கோயில்களும் விளங்குவதால் தாமிரபரணியானவள் நித்தம் திருவிழாக் காண்பவளாய் நித்யமங்களையாக இருக்கிறாள்.

இந்தத் தீர்த்தங்களை அல்லது தேவாலயங்களைப் பார்த்த மாத்திரத்திலே மனிதன் பாவங்களிலிருந்து நீங்கி விடுதலை அடைகிறான்.

### தொடக்க நிலையில்

தாமிரபரணி நதி குப்திசிருங்கம் என்ற நகரத்தில் உள்ள ஒரு குகையில் அமைந்த துவாரத்திலிருந்து உற்பத்தியாகிறது. உற்பத்தி நிலையில் இது ஐந்து பிரிவுகளாகப் புறப்படுகிறது.

அந்த ஐந்து பிரிவுகளில் வருணை, கமலை, அம்ருததாரை என்ற மூன்று பிரிவுகளான மகாநதிகள் மேற்குத் திசைநோக்கிச் செல் கின்றன. பின்னர் அவை தென்திசை நோக்கித் திரும்புகின்றன. தம்மில் நீராடுபவர்களுக்குப் புண்ணியத்தை அளித்துக் கொண்டு சமுத்திர ராஜனிடம் சேர்கின்றன.

ஆதிபராசக்தியிடத்திலிருந்து உண்டான மகாநதியானவள் கிழக்குத் திசைநோக்கிப் புறப்பட்டுச் செல்கிறாள். தாமிரபரணி என்ற பெயரோடு சமுத்திர ராஜனிடம் சங்கமிக்கிறாள்.

## தீர்த்தக்கட்டங்கள் - பாணதீர்த்தம் வரை

*தாமிரபரணி நதியில் ஏராளமான தீர்த்தக்கட்டங்கள் உண்டு. கல்யாண தீர்த்தம் வரை அமைந்த தீர்த்தக்கட்டங்கள் பெரும்பாலானவை ரிஷி தீர்த்தங்களும் தேவதீர்த்தங்களாகும். இவை மானிடர் நீராடுவதற்குரிய தீர்த்தங்களல்ல என்பது அறிதற்குரிய செய்தி.*

*தாமிரபரணி உற்பத்தியாகும் குகை விருஷாங்க நகரத்தில் உண்டு. தாமிரபரணி தொடக்கத்தில் பூர்வவாகினியாகப் பயணப்படுகிறாள். இந்தக் குகையின் கிழக்கே தென்கரையில் இருப்பது ஊர்ஜஸ் தீர்த்தம்.*

*குகையின் கிழக்கே வடகரையில் இருப்பது இஷஸ் தீர்த்தம்.*

*அதன் கிழக்கில் இருப்பது விருஷாங்க தீர்த்தம்.*

*அதன்கிழக்கே தென்கரையில் இருப்பது அகத்திய தீர்த்தம். (இங்கு அகத்தீஸ்வரர் என்ற லிங்கம் உண்டு என்பது புராணச் செய்தி.)*

*அதன்கிழக்கில் இருப்பது சக்கர தீர்த்தம்.*

*அதன்கிழக்கில் இருப்பது பாவன தீர்த்தம்.*

*மேலே உள்ள தீர்த்தங்கள் அனைத்தும் தேவ மற்றும் ரிஷி தீர்த்தங்களாகும். மானிடர்கள் நீராடுவதற்குரியவன அல்ல.*

*பாவன தீர்த்தத்தையடுத்துத் தாமிரபரணி உத்தரவாகினியாக வடக்கு நோக்கிப் பயணப்படுகிறாள். அதன் மேலக்கரையில் இருப்பது வாமன தீர்த்தம். அதன் வடபாகத்தில் இருப்பது ஹேரம்ப தீர்த்தம். (இது விக்னேஸ்வர தீர்த்தம் என்றும் சொல்லப்படும்.) அதற்கு முன் பாகத்தில் இருப்பது நாரசிங்க தீர்த்தம்.*

*தாமிரபரணியின் கீழக்கரையில் இருப்பது போகிராஜ தீர்த்தம். (இது அனந்த தீர்த்தம் என்றும் சொல்லப்படும்.)*

### உத்தரவாகினியாக

*போகிராஜ தீர்த்தத்தையடுத்துள்ளது பாண தீர்த்தம். இது மனிதர்களும் நீராடுவதற்குரிய தீர்த்தம். (அருகில் உள்ள லிங்கம் பாணலிங்கம் என புராணங்களில் சொல்லப்படும்.)*

*பாண தீர்த்தத்தையடுத்து நதியின் மேலக்கரையில் உள்ளது பாஞ்ச ஜன்ய தீர்த்தம்.*

*அதற்கருகில் வடதிசையில் உள்ளது சக்கரசிலா தீர்த்தம். அதன் வடதிசையில் உள்ளது வராஹ தீர்த்தம். அதன் வடதிசையில் உள்ளது முனி தீர்த்தம்.*

தாமிரபரணியின் கிழக்கரையில் உள்ளது பிசங்கிலா தீர்த்தம். அதற்கு வடக்கே உள்ளது கன்யா தீர்த்தம். இத்தீர்த்தம் உள்ள பகுதி குங்குமப்பாறை ஆகும்.

அதன் வடக்கே உள்ளது வருண தீர்த்தம்.

மேலக்கரையில் உள்ளது ரமா தீர்த்தம். இப்பகுதி கலைமான் முகப்பாறை என்று சொல்லப்படும்.

### பாபவிநாசம் வரை

கபிலா தீர்த்தத்தையடுத்துள்ளது கல்யாண தீர்த்தம். (இனி வருவன மானிடர்குரியன) அதற்கு மிக அருகில் ஈசான திசையில் உள்ளது நாரத தீர்த்தம். (இது பாபநாசப் புராணத்தில் குறிப்பிடப்படும்.)

அதன் வடதிசையில் உள்ளது வருண தீர்த்தம். இது ஐந்தலை அருவியாகும்.

அதன் வடதிசையில் உள்ளது பிராசேதச தீர்த்தம்.

அதன் தெற்கே உள்ளது தும்புரு தீர்த்தம்.

அதற்கே தெற்கு உள்ளது பர்வத தீர்த்தம்.

பாபவிநாசத்தில் உள்ளது இந்திரகீல தீர்த்தம்.

அதற்கு வடதிசையில் உள்ளது திருமலி சங்கம தீர்த்தம்.

### கல்லிடைக்குறிச்சி வரை

இதுவரை உத்தரவாகினியாகப் பயணப்பட்ட தாமிரபரணி இதன்பின் பூர்வவாகினியாகிறது.

முதலில் மணிமுத்தா சங்கமம். இங்கே தேவி அருள் செய்து வருகிறாள். நதியின் தென்கரையில் இங்குள்ளது தேவி தீர்த்தமாகும்.

நதியின் வடகரையில் பாபவிநாசத்துக்குக் கிழக்காக அமைவது தீபதீர்த்தம்.

தீபதீர்த்தத்தின் கிழக்கில் அமைவது சாலா தீர்த்தம். இது விக்ரமசிங்கபுரத்துக்குரிய புண்ணிய தீர்த்தத்துறை.

அதன் கிழக்காக அமைவது காசிப தீர்த்தம். இது அம்பாசமுத்திரத்துக்குரிய ஸ்நான கட்டமாகும்.

அதற்குத் தெற்காக அமைவது கண்ணுவ தீர்த்தமாகும். இது கல்லிடைக்குறிச்சிக்குரிய தீர்த்தத்துறையாகும்.

அதனையடுத்து அதன் கிழக்கே அமைவது பிருஹ தீர்த்தம்.

### திருப்புடைமருதூர் வரை

கல்லிடைக்குறிச்சியை அடுத்து உத்தரவாகினியாகத் தாமிரபரணி பயணப்படுகிறாள். நதியின் வடபாகத்தில் முதலில் உள்ள ஊர் ஊர்க்காடு. இங்குள்ளது கோஷ்டீஸ்வர தீர்த்தம்.

அதற்கு வடபாகத்தில் உள்ளது சக்கர தீர்த்தம். இது வெள்ளங் கொள்ளித்துறை எனப்படும்.

அதன் வடபாகத்தில் உள்ளது மாண்டவ்ய தீர்த்தம்.

மாண்டவ்ய தீர்த்தத்தின் வடபாகத்தில் அமைவது கடனா ச ங்கமதீர்த்தம்.

அதன்பின் தாமிரபரணி பூர்வவாகினியாகப் பயணப்படுகிறாள்.

இந்நிலையில் இதன் வடகரையில் முதலில் அமையும் ஊர் பாப்பாக்குடி. இங்குள்ளது மானவ தீர்த்தம்.

அதற்கு தென்பகுதியில் அல்லது திருப்புடைமருதூரில் உள்ள லிங்கத்துக்குத் தென்பாகத்தில் அமைவது சுரேந்திர மோட்சதீர்த்தம்.

அதற்குத் தென்பாகத்தில் உள்ளது பைசாச மோசன தீர்த்தம்.

திருப்புடைமருதூருக்கு வடக்குப் பக்கத்தில் அல்லது கடனா சங்கமத்தில் மேற்குப் பாகத்தில் உள்ளது தருமதரன் என்ற தண்டப்பிரம்மச்சாரி தீர்த்தம்.

அதற்கு கீழ்ப்புறத்தில் அமைவது கரும தீர்த்தம்.

திருப்புடைமருதூருக்குத் தெற்காக நதியின் கீழக்கரையில் அமைவது கஜேந்திர மோட்ச தீர்த்தம். இது அமைந்துள்ள பகுதி அத்தாளநல்லூர் ஆகும்.

சேரன்மகாதேவி வரை

அத்தாளநல்லூரில் உள்ள கஜேந்திர மோட்சத் தீர்த்தத்துக்கு அருகில் மருதுண்ணிக் காட்டுப் பகுதியில் உள்ளது புஷ்பவனேச தீர்த்தம்.

அதற்குக் கீழ்ப்பக்கத்தில் வடகரையில் உள்ளது மணிக்ரீவ தீர்த்தம். இது வைரவ தீர்த்தம் என்றும் சொல்லப்படும். இந்தத் தீர்த்தம் உள்ள பகுதி அரியநாயகிபுரம் ஆகும்.

அதன்கீழ்ப்புறம் யக்ஷதீர்த்தமும் அதன்கீழ்ப்புறமும் கோதீர்த்தமும் அதற்கப்பால் தர்மதரிசன தீர்த்தமும் அமைந்துள்ளன.

தாமிரபரணித் தென்கரையில் கோ தீர்த்தத்துக்குத் தெற்காக அமைந்துள்ளது துர்கா தீர்த்தம். இது காருகுறிச்சிக்குரிய தீர்த்தத் துறையாகும்.

அதன் கிழக்காக அமைந்துள்ளது விஷ்ணு தீர்த்தம். இது கூனியூருக்குரியத் துறையாகும்.

அதன் கிழக்காக அமைந்துள்ளது சோமதீர்த்தம். சோம தீர்த்தத்தையடுத்து தென்கரையில் கீழ்ப்பாகமாக அமைந்தது வியாச தீர்த்தம். இது உள்ள பகுதி சேரன்மகாதேவி. வியாச பகவான்

எழுந்தருளியிருக்கும் இடமிது. இது பக்தப்ரியன் சந்நிதிக்கு அருகில் உள்ளது.

## சியாமாநதி கூடல் வரை

சேரன்மகாதேவி தீர்த்தத்துக்கு மிக அருகில் கிழக்கில் உள்ளது மார்க்கண்டேய தீர்த்தம்.

அதற்கு அருகில் உள்ளது ரோமச தீர்த்தம். இது கோடகநல்லூர் பத்தமடைக்குரிய துறையாகும்.

அதன்கிழக்கில்இருப்பதுதுர்வாசதீர்த்தம்.அதன்கிழக்கில்உள்ளது பார்கவ தீர்த்தம். இந்த இரண்டும் கரிசூழ்ந்தமங்கலத்துக்குரிய துறைகளாகும்.

இந்த இடத்துக்கு அருகில் செவலுக்கு நிருதி மூலையில் ஸ்ரீவிஷ்ணு பகவான் கல்கி அவதாரம் செய்ய இருக்கிறார். அந்தக் கரையில் கசாளிகா நதியின் சங்கமத்தில் உள்ளது வைனதேய தீர்த்தம்.

அதற்கு எதிராக வடகரையில் உள்ளது சாயா தீர்த்தம்.

அதன் கீழ்ப்புறம் காந்தர்வ தீர்த்தமும் அதன்கீழ்ப்புறம் பானு தீர்த்தமும் அதே இடத்தில் பிரபாவ தீர்த்தமும் உள்ளன.

செவலில் கவுரி, சரஸ்வதி, விருஷப தீர்த்தங்கள் அமைந்துள்ளன. இவையனைத்தும் சியாமாநதிக் கூடல் வரை அமைந்துள்ளவை. சியாமா நதி கூடலில் உள்ள தீர்த்தம் மந்திர தீர்த்தமாகும். (இங்குள்ள ஆலயம் மந்திரேசுரம் என்கிறது திருநெல்வேலிப் புராணம்)

## உத்தரவாகினியாக

இதன்பின் தாமிரபரணி உத்தரவாகினியாகப் பயணப்படுகிறாள். சியாமா நதிக்கூடலை அடுத்து மேலக்கரையில் உள்ளது யாக தீர்த்தம். அதற்கு வடதிசையில் உள்ளது ருத்திர தீர்த்தம்.

அதற்கு வடதிசையில் உள்ளது க்ஷிப்த புஷ்ப தீர்த்தம். இது சிந்துபூந்துறை என்று சொல்லப்படும்.

அதனையடுத்துள்ளது ரிஷி தீர்த்தம். இங்குள்ள ஆலயம் மூர்த்தீஸ்வரமாகும்.

பின்னர் தென்கரையில் சியாமா கூடலுக்கு முன் அக்னி தீர்த்தம் உள்ளது. இப்பகுதி தருவை எனப்படும். அதன் கீழ்க்கரையில் சமிதி தீர்த்தம் அதற்கு வடதிசையில் தயா தீர்த்தம் பின் வடக்கே புஜங்க மோசன தீர்த்தம் அதன்பின் வடக்கே சூசி தீர்த்தம் ஆகியவை உள்ளன.

தாமிரபரணியின் கீழ்க்கரையில் முறையே சிங்க தீர்த்தம், கேது தீர்த்தம், உஷா தீர்த்தம், ஹலாலன தீர்த்தம் ஆகியவை உள்ளன.

## பாலாமடை வரை

பின் தாமிரபரணி பூர்வவாகினியாகப் பயணப்படுகிறாள். அதன் வடகரையில் முதலில் உள்ளது ராம தீர்த்தம் மற்றும் ஜடாயு தீர்த்தம். இது உள்ள பகுதி ராமேசநல்லூர்.

அடுத்து வடகரையில் உள்ளது ரிஷி தீர்த்தம்.

அதனையடுத்துள்ளது ருத்ரபாத தீர்த்தம். இப்பகுதி திருவண்ணாதபுரம் மற்றும் அரவன்குளமாகும்.

அதனையடுத்து வடகரையில் உள்ளது பாபவிமோசன தீர்த்தம்.

அடுத்துள்ள தீர்த்தங்கள் தென்கரையில் உள்ளவை. தென்கரையில் முதலில் உள்ளது பக்ஷி தீர்த்தம்.

அதற்கப்பால் அச்ரு தீர்த்தம் மற்றும் பாச தீர்த்தங்கள் அமைந்துள்ளன.

பின்னர்த் தாமிரபரணியின் வடகரையில் தீர்த்தங்கள் அமைகின்றன.

முதலில் உள்ளது நதிஸ்தம்பன தீர்த்தம்.

அதனையடுத்து அமைவது பூஷாபதன தீர்த்தம். இது செப்பறைப் பகுதியில் உள்ளதாகும்.

அதனையடுத்து அமைவது துரிதாபக தீர்த்தம்.

அதனையடுத்துள்ளது மங்கள தீர்த்தம். இது பாலாமடைக்குரியதாகும்.

இந்தத் தீர்த்தத்தையடுத்து வடகரையில் உள்ளது மகாலோகித தீர்த்தமாகும்.

## ஸ்ரீவைகுண்டம்வரை

பாலாமடையை அடுத்து ஸ்ரீவைகுண்டம்வரை தாமிரபரணி தட்சிணவாகினியாகப் பயணப்படுகிறாள்.

முதலில்அமைவது சித்ராநதி சங்கமம். இங்குள்ளது சித்ராசங்கம தீர்த்தம்.

அதனையடுத்து விஷ்ணுவனம் என்ற பகுதி உண்டு. இங்கே கோ தீர்த்தம், விஷ்ணு, குசஸ்தம்ப, ம்ருத்யுஞ்ஜய, தைத்ரிய, ராஜசூய, மகாவிரத தீர்த்தங்கள் முதலானவை உண்டு.

அடுத்து அமைவன சாத்திய, விசுவேதேவ தீர்த்தங்களாகும்.

அதனையடுத்துத்தாமிரபரணியின்வடகரையில்தசாவதாரதீர்த்தம் முதலியவை உள்ளன. இந்தத் தீர்த்தங்கள் அகரத்திற்குரியனவாகும்.

பின்னர் உள்ளவன தென்கரையில் உள்ள தீர்த்தங்கள். அவை

சப்த ரிஷி தீர்த்தம், மாஞ்சிஸ்த தீர்த்தம், போகி தீர்த்தம் என்பனவாகும்.

## ஆழ்வார்திருநகரி வரை

இதன்பின் தாமிரபரணி பூர்வவாகினியாகப் பயணப்படுகிறாள். நதியின் வடகரையில் முதலில் உள்ளது கலச தீர்த்தம். இது ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள துறை. அதற்குத் தெற்கே உள்ளது சாரதா தீர்த்தம்.

அதன்பின் தாமிரபரணி மீண்டும் தட்சிணவாகினியாக பயணப்படுகிறாள். தென்கிழக்கில் முறையே ஸ்மராள - மகாகுசூம, குசூம விருத்தி - சதபுத்புத தீர்த்தங்கள் அமைந்துள்ளன.

பின் தாமிரபரணி பூர்வவாகினியாகப் பயணப்படுகிறாள்.

முதலில் வடகரையில் உள்ளது காந்தீஸ்வர தீர்த்தம். (இங்குள்ள ஆலயம் காந்தீசுரம் திருநெல்வேலிப் புராணம்)

இந்தத் தீர்த்தத்துக்கு எதிராகத் தென்கரையில் உள்ளன ரமா தீர்த்தம், போகி தீர்த்தம், தரா தீர்த்தம், சக்ர தீர்த்தம் முதலியனவாகும். இத்தீர்த்தங்கள் ஆழ்வார்திருநகரியில் உள்ளவை.

அதன் கிழக்காக இருப்பது நிதி தீர்த்தம். அதனையடுத்துக் கால, நிஷா, சுருதி, மகர, கலா, மங்கள தீர்த்தங்கள் உள்ளன.

## பெருங்குளம்வரை

இதன்பின் வடகரையில் ஹர்ஷ, லட்சுமிநாராயண தீர்த்தங்கள் உள்ளன.

அதனையடுத்துள்ளது பிருது தீர்த்தம். இது அப்பன்கோயிலுக்குரிய துறையாகும்.

அதனையடுத்துள்ளது அசுவினி தீர்த்தம். இது இரட்டைத் திருப்பதிக்குரியதாகும்.

அதனையடுத்து வடகரையில் மோகாபக, முக்தி முத்ரா, மாதாவள தீர்த்தங்கள் உள்ளன. இவை பெருங்குளத்துக்குரியனவாகும்.

அதனையடுத்துள்ளது ஞான தீர்த்தம். இது வாழைவேளாணுக் குரியதாகும்.

அதனையடுத்து வடகரையில் அமைந்துள்ளது அக்னி தீர்த்தம். இது அக்காசாலைக்குரியதாகும்.

இதன்பின் அமையும் தீர்த்தங்கள் தென்கரைக்குரியவையாகும்.

*தென்கரையில் முதலில் உள்ளது வஸ்து தீர்த்தம்.*

*அதனையடுத்துள்ளது கங்கா தீர்த்தம். இது சொக்கப்பழங் கரைக்குரியதாகும்.*

*அதனையடுத்து அமைவது சோமதீர்த்தம். இது ஆத்தூருக் குரியதாகும்.*

*அதனையடுத்து அமைவது சண்டிகா தீர்த்தம். இது சேர்ந்தமங் கலத்துறை ஆகும்.*

*அதன்கிழக்கே முறையே அடுத்தடுத்து வல்லீ, ஹர்ஷ, கௌரி, சம்புநாராயண, சங்கராஜ தீர்த்தங்கள் உள்ளன.*

### சங்கமத்தில்

*தாமிரபரணி சங்கமப்பகுதிக்கு மேல் வடகரையில் உள்ள இறுதித் தீர்த்தம் அகத்திய தீர்த்தமாகும்.*

*அதனையடுத்து அமைவது சங்கமேஸ்வர தீர்த்தமாகும். காயத்ரி, சாவித்திரி, தீர்த்தங்கள் உள்ளன.*

## (46)
## காலமும் பலனும் மந்திரமும்

*தாமிரபரணியில் எந்த இடத்தில் புனித நீராடினாலும் பண்ணியப் பலன் உண்டு. ஒன்பது கிருச்சிரம் பலன் கிடைப்பதாகக் கூறுகிறது தாம்ரபர்ணீ · மகாத்மியம். எனினும் குறிப்பிட்ட காலத்தில் சில குறிப்பிட்ட துறைகளில் உரிய மந்திரத்தைச் சொல்லி ஸ்நானம் செய்ய விசேஷ பலன் உண்டு என்கிறது இந்நூல்.*

### பாபவிநாசத்தில்

*பாபவிநாசத்தில் உள்ள துறையில் சித்திரை மாதத்தில் ஸ்நானம் செய்வது விசேஷம். அஷ்டாக்ஷரம் அல்லது பஞ்சாக்ஷர மந்திரம் ஜபித்து ஸ்நானம் செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் ராஜசூய யாக பலன் கிடைக்கும்.*

### அத்தாளநல்லூரில்

*அத்தாளநல்லூரில் உள்ள கஜேந்திர மோட்சத்துறையில் வைசாக மாதத்தில் ஸ்நானம் செய்யலாம். துவாதசி அல்லது சிரவணத் துவாதசியில் பிரம விதாக்ருதி மந்திரம் சொல்லி ஸ்நானம் செய்ய ஆயிரம் சந்திராயன பலன் கிடைக்கும். குருவின் மனைவியை விரும்புதல் முதலான தோஷங்களும் நிவர்த்தியாகும்.*

## சோம தீர்த்தத்தில்

ஜ்யேஷ்ட மாதத்தில் சோம தீர்த்தத்தில் வளர்பிறைத் துவாதசியில் ஸ்நானம் செய்வது விசேஷம். விஷ்ணுசூக்தம் சொல்லிப் புனித நீ ராட வேண்டும். எண்ணற்ற பலன் இதனால் கிடைக்கும்.

## பாண தீர்த்தத்தில்

பாண தீர்த்தத்தில் ஆடி அமாவாசையில் நீராடுவது விசேஷம். காயத்ரி மந்திரம் சொல்லி நீராட வேண்டும். சோம யாகம்செய்த பலன் உண்டு.

## சிந்துபூந்துறையில்

சிந்துபூந்துறையில் சிராவண மாதம் அல்லது சித்திரை விஷு புண்ணிய காலத்திலும் சித்ரா பவுர்ணமியிலும் நீராடுவது விசேஷம். ருத்ர சூக்தம் சொல்லி நீராட வேண்டும். சர்வகிரதுக்களின் பலன் கிடைக்கும்.

## ஸ்ரீவைகுண்டத்தில்

ஸ்ரீவைகுண்டத்திலுள்ள துறைகளில் பாத்ரபத மாதம் சுக்லபட்சத் தில் ஏகாதசி அல்லது துவாதசியில் விஷ்ணுசூக்தம் சொல்லி நீராட வேண்டும். ஆயிரம் வாஜபேய யாகம் செய்த பலன் கிடைக்கும்.

## கலச தீர்த்தத்தில்

ஸ்ரீவைகுண்டத்தில் பங்குனி அமாவாசையில் நீராடப் பிரம்மஹத்தி தோஷம் நீங்கும். விஷ்ணு சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

## ராமபாத தீர்த்தத்தில்

ராமநவமி அல்லது ரோகிணி நட்சத்திர நாளில் ராமபாத தீர்த்தத்தில் விஷ்ணு காயத்ரி சொல்லி நீராட எல்லா வகையான பாவங்களும் நீங்கும்.

## கௌரி தீர்த்தத்தில்

புரட்டாசி மாதத்தில் வரும் விஜயதசமி நாளில் கௌரி தீர்த்தத்தில் துர்கா சூக்தம் சொல்லி நீராடப் பூதான பலன் கிடைக்கும். நவராத்திரியில் துர்கா சூக்தம் சொல்லி நீராடச் சர்வகிருத பலன் கிடைக்கும்.

## சங்கமத்துறையில்

தாமிரபரணி சங்கமத்தில் கார்த்திகை மாதத்தில் கார்த்திகை மாதத்துப் பவுர்ணமி நாளில் ஸ்கந்தசூக்தம் சொல்லி நீராட ஆயிரம் கோதான பலன் உண்டு.

### வியாச தீர்த்தத்தில்

*வியாச தீர்த்தத்தில் மார்கழி மாதம் முழுமையும் நீராடலாம். எந்த நாளில்நீராடினாலும் வேத பாராயணம் செய்த பலன் உண்டு.*

### சேரன்மகாதேவியில்

*சேரன்மகாதேவியில் உள்ள வியதீபாத தீர்த்தத்தில் வியதீ பாத யோகத்தில் நீராடுவது விசேஷம். நாராயண உபநிஷத் - புருஷ சூக்தம் சொல்லி நீராடலாம். பரமபத பிராப்தி நிச்சயம்.*

### ஆழ்வார்திருநகரியில்

*சுக்ல துவாதசிகளில் ஆழ்வார்திருநகரியில் நாராயண உபநிஷத் சொல்லி நீராடக் கோடி காராம்பசு தானம் செய்த பலன்கிடைக்கும்.*

*விஷ்ணு காயத்ரி சொல்லிப் புனித நீராட ஆயிரம் பிராமண குடும்பங்களைப் பிரதிஷ்டை செய்த பலன் கிடைக்கும்.*

### திருப்புடைமருதூரில்

*திருப்புடைமருதூரில் உள்ள தீர்த்தங்களில் தைமாத பவுர்ணமியில் ருத்ர சூக்தம் சொல்லி நீராடப் பரமபதம் கிட்டும். சுக்லபட்ச நாட்களில்விஷ்ணு சூக்தம் சொல்லி நீராட நூறு கன்னிகாதானம் செய்த பலன் கிட்டும்.*

### சோமாரண்யத்தில்

*மாசி சிவராத்திரி அல்லது பவுர்ணமியில் சோமாரண்யத்தில் பஞ்சருத்திரம் மற்றும் சிவ ஷடாக்ஷரியைச் சொல்லி நீராடக் கோடி காராம்பசுவைத் தானம் செய்த பலன் கிடைக்கும்.*

### சீவலப்பேரி

*சிவலப்பேரி விஷ்ணுவனம் எனப்படும் பகுதியில் அமைவதாகும். இங்குள்ள தீர்த்தங்களில் சுக்ல ஏகாதசி, துவாதசி ஆகிய நாட்களில் சுதர்சன மந்திரம், நரசிம்ம மந்திரம் சொல்லி நீராட வேண்டும். அப்படி நீராட மகாவிரத பலன் கிடைக்கும்.*

*சியாம நதி எனப்படும் பச்சையாற்றின் கூடலில் பங்குனி மாத அமாவாசை நீராட வேண்டும். இதனால் எல்லாவகையான பாவங்களும் நிவர்த்தியாகும்.*

### மந்திர தீர்த்தத்தில்

*மந்திர தீர்த்தத்தில் பங்குனி மாத அமாவாசையில் நீராட அன்ன தானப் பலன் கிட்டும். நாராயண மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.*

### கல்யாண தீர்த்தத்தில்

*கல்யாண தீர்த்தத்தில் நீராடும்போது சத்யோஜாதம் முதலான ஐந்து ரிஷிகளைச் சொல்லி நீராட வேண்டும். இதனால் கன்றுக்குட்டியைப் பிரித்த தோஷம் மற்றும் மலாடியாவதற்குரிய பாவம் முதலானவை நீங்கும்.*

### பழைய பாபநாசத்தில்

*பழைய பாபநாசத்தில் ஹிரண்யவர்ணா, பௌநாக,யத தஸ் ஸம்பிரயதி முதலான மந்திரங்களைச் சொல்லி நீராட வேண்டும். இப்படி நீராடப் பாம்பு முதலான கொடிய விலங்குகளை வதை செய்ததனால் உண்டான சரும நோய்கள் பல நீங்கும்.*

### பாபவிநாசர் சந்நிதியில்

*பாபவிநாசர் சந்நிதியில் அகமர்ஷண சூக்தம், ருத்திரம், ஜமகம், பஞ்சாக்ஷரம் முதலிய மந்திரங்களைச் சொல்லி நீராட வேண்டும். இப்படி நீராடப் பிரம்மஹத்தி முதலான தோஷங்கள் நீங்கும்.*

## (47)

## இந்தத் துறைக்கு இது மந்திரம்

*பாபவிநாசர் சந்நிதியில் அமைந்துள்ள தீர்த்தத் துறையில் பிரம்மஹத்தி முதலான தோஷங்களிலிருந்து நீங்குவதற்கு அகமர்ஷண சூக்தம், ருத்ரம், ஜமகம், திருவைந்தெழுத்து ஆகியவற்றை ஜபித்துக் கொண்டு குளித்தல் வேண்டும்.*

*இந்தத் துறைக்கு வடபாகமாகத் தேவியின் சந்நிதானத்தின் திருமுன்னிலையில் உள்ள துறையில் குளித்தால் புத்ர பாக்கியம் கிட்டும். அந்நிலையில் ஸ்ரீசூக்தம், தேவீ சூக்தம், இயமேவ ஸாயாப்பிரதமாவ் யெவ்ச்சந்த், காயத்ரீ ஸ்ரீவித்தை ஜபித்துக் குளித்தல் வேண்டும்.*

*அதற்கு வடபாகத்தில் உள்ளது சூரிய தீர்த்தமாகும். இத்தீர்த்தத்தில் குளிக்கக் கண் நோய்கள் நீங்கும். மகாஸௌர மந்திரம் சொல்லிக் குளிக்க வேண்டும்.*

*முக்கூடலிலும் கன்னடியன் அணையிலும் வருண சூக்தம் ஜபித்து நீராடுதல் வேண்டும்.*

*அம்பைக்கு அருகிலுள்ள தீப தீர்த்தத்தில் அக்னி சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.*

*இதனையடுத்துள்ள சாலா தீர்த்தத்தில் கூச்மாண்ட மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.*

இதனையடுத்து அனுமன் சந்நிதிக்கு எதிரில் உள்ளது கிருமிகர தீர்த்தம் என வடமொழியிலும் புழுமாறித் தீர்த்தம் எனத் தமிழிலும் குறிப்பிடப்படும் தீர்த்தமுள்ளது. இத்தீர்த்தம் இதயம் தொடர்பான நோய்களை நீக்கும் சக்தி வாய்ந்தது. புழுக்கடி முதலானவற்றால் ஏற்படும் தொந்தரவுகளையும் நீக்கக் கூடியது. இங்குப் புனித நீராடும்போது 'சிம்மே மந்யு அக்ஷீப்யாந்தே' என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்துள்ளது அம்பாசமுத்திரத்திலுள்ள காசிப தீர்த்தம். இதில் நீராடும் போது பஞ்சருத்ரம், ருத்ரசூக்தம், பஞ்சாட்சரம் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்துத் தெற்காக ஹரிக்கும் சங்கரனுக்கும் இடையில் உள்ளது பிருக தீர்த்தம். இதில் நீராடும்போதும் திரியம்பகம், சத்யோஜாதம் முதலான ஐந்து ருக்குகள் சொல்லி நீராட வேண்டும்.

கல்லிடைக்குறிச்சியில் உள்ளதான மிருகதரேசன் சந்நிதானத்தில் இருப்பது கண்ணுவ தீர்த்தமாகும். இது மனதில் ஏற்படும் துக்கங்களை நீக்கி இன்பத்தை ஊட்டக்கூடியதாகும். இங்கு நீராடும்போது ஹம்ஸச்சுசிஷத் மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கு வடக்குப் பாகத்தில் இருக்கக் கூடியதும் பிதுர்சாப நிவர்த்தி அளிக்கக்கூடியதுமான கோரையாற்றின் சங்கமத்தில் சங்கசத்வம் என்ற மந்திரத்தைச் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கு வடபாகத்தில் உள்ளது தட்சிணாவர்த்த தீர்த்தமாகும். இது தாய், தந்தை முதலான பெரியோர்களால் ஏற்பட்ட சாபத்திலிருந்து நிவர்த்தியளிக்கும் சக்தி வாய்ந்தது. இந்தத் தீர்த்தத்தில் சுவர்ணம், கர்மம், பரிவேத மந்திரம் சொல்லி புனித நீராட வேண்டும்.

காளத்தீஸ்வர சந்நிதானத்தில் உள்ளது மாண்டவ்ய தீர்த்தம். இது நல்ல புதல்வர்களை அளிக்கக் கூடிய சக்தி வாய்ந்த தீர்த்தம். இத்தீர்த்தத்தில் நீராடும் போது பிராமண ஏகஹோதா மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

நமக்கு வரும் மரணாவஸ்தை உள்ளிட்ட பேராபத்துக்களை விலக்கக் கூடியது அத்தாளநல்லூரிலுள்ள கஜேந்திர மோட்ச தீர்த்தமாகும். இத்தீர்த்தத்தில் நீராடும் போது விஷ்ணு சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கு வடபாகத்தில் உள்ளது சிங்க தீர்த்தம். இங்கு நீராடும்போது சிம்ஹேமந்யு மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கு வடபாகத்தில் இருப்பது அகத்திய தீர்த்தம். இந்தத் தீர்த்தத்தில் நீராடும்போது அகஸ்த்ய: கனமான கனித்ரை என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்துள்ள தண்டபிரம்மசாரி தீர்த்தத்தில் (திருப்புடைமருதூர்) நமஸ்சோமாயச என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கடுத்துள்ள பைசாச மோசன தீர்த்தத்தில் யதத்தியச் சதூரகே ஜாதவேதஸே என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அடுத்ததான மானவ தீர்த்தத்துக்குரியது கைவல்யோபநிஷத் ஆகும்.

அதனையடுத்துள்ள பைரவ தீர்த்தத்தில் திராபேஅந்தசஸ்பதே என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

காருகுறிச்சியில் உள்ள துர்கா தீர்த்தத்துக்குரிய துர்கா சூக்தமாகும்.

கூனியூரிலுள்ளது சோம தீர்த்தம். இத்தீர்த்தத்தில் நீராடும் போது சோமசூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

பக்தப்ரியருடைய சந்நிதானத்தின் முன் உள்ளதான வியாச தீர்த்தத்தில் நீராடும் காலத்தில் புருஷ சூக்தம் மற்றும் நாராயணோபநிஷத் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்துக் கோடகநல்லூர், பத்தமடையில் உள்ளதான உரோமச தீர்த்தத்தில் அக்கிநேர்மந்வே என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அடுத்ததான துர்வாச தீர்த்தத்தில் காமோகார்ஷீத் மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அடுத்துள்ள சாயா தீர்த்தத்தில் தஸ்மைவாவிதுஷ மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்து இக்காலத்தில் செவல் என்றழைக்கப்படும் ஜோதிர்வனத்தில் உள்ள நீர்த்துறையில் பிரமவிதாப்நோதி மந்திரம் சொல்லி நீராட வேண்டும். கீழச்செவலில் சிவசங்கல்பம் செய்து கொண்டு நீராட வேண்டும்.

இதனை அடுத்ததான காந்தர்வ தீர்த்தத்தில் வருணசூக்தமும் சத்யோஜாதம் ஐந்தும் சொல்லி நீராட வேண்டும்.

இதனையடுத்து ஓமநல்லூர் என்று இந்நாளில் அழைக்கப்படும் ஓமனூரை அடுத்துள்ளதான பிரணவ தீர்த்தத்தில் ஓமித்யேகாக்ஷரம் பிர்ஹ்ம என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

இதையடுத்து தருவையில் உள்ளதான அக்னி தீர்த்தத்தில் அக்னி சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

அடுத்திருப்பது சியாமாநதி சங்கமம். அங்குப் பித்ரு சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ளதான சிந்துபூந்துறையில் ருத்ரம் சமகம் ஆனோபத்ரா மந்திரங்கள் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்து ரமேசநல்லூரில் உள்ளதான ராம, ஜடாயு தீர்த்தங்களில் ரிக்வேத சம்பந்தமான மந்திரங்களைச் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்துள்ளதான ருத்ரபாத தீர்த்தத்தில் ருத்ரம், பஞ்சாட்சரம், சத்யோஜாதம் ஐந்து சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்துள்ளதான மங்கள தீர்த்தத்தில் ஸ்ரீசூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

சித்ராநதி சங்கமத்தில் ஸங்கச்சதவம், விஷ்ணு காயத்ரி, விஷ்ணு சூக்தம், யோபாம் ஆகிய மந்திரங்களைச் சொல்லி நீராட வேண்டும்.

அகரத்தில் உள்ளதான தசாவாதார தீர்த்தத்தில் தசாவாதார நாமாக்களை ஜபித்து நீராட வேண்டும்.

ஸ்ரீவைகுண்டத்தில் உள்ளதான கலசதீர்த்தத்தில் ஆகல சேஷ~கா வதி மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

ஸ்ரீபுரம் எனப்படும் ஆழ்வார்திருநகரில் உள்ள தீர்த்தத்துறைகளில் வாசுதேவோபநிஷத், ஸ்ரீசூக்தம், விஷ்ணு சூக்தம், லக்ஷ்மிஹ்ருதயம் ஆகிய மந்திரங்களைச் சொல்லி நீராட வேண்டும்.

ஆழ்வார்திருநகரியின் எதிர்க் கரையிலுள்ளதான காந்தீஸ்வர தீர்த்தத்திலும் சதபுத்புத தீர்த்தத்திலும் கடவல்யோபநிஷத் மாத்ருவாருத்ரம், பஞ்சாட்சரம் சொல்லி நீராட வேண்டும்.

அடுத்ததான ஸ்மராள தீர்த்தத்தில் யேதோந்விந்த்ரம் ஸ்தவாம மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்து இருக்கும் ஹர்ஷ தீர்த்தம் மற்றும் லட்சுமி நாராயண தீர்த்தம் ஆகியவற்றில் சரணம் பவித்ரம் என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்குத் தெற்கே உள்ள நிதி தீர்த்தத்தில் பிராதரக்நிம் என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கு வடபாகத்தில் அப்பன்கோவில் அருகிலுள்ள பிதுர் தீர்த்தத்தில் பித்ரு சூக்தம், விஷ்ணு சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

கிழக்கில் இரட்டைத்திருப்பதியில் உள்ளது அஸ்வினி தீர்த்தம். அங்கு ஏஷோஉஷா அபூர்வா என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்குத் தெற்கிலிருக்கும் மகரபூஷண தீர்த்தத்தில் வருணசூக்தம் ஆசுச்சிசாநோ என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கு வடபாகத்தில் உள்ள மாயக்கூத்தன் துறையில் விஷ்ணு சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்குக் கிழக்காக உள்ள ஆறுமுகமங்கலத்தில் இருப்பது ஞான தீர்த்தம்.இங்கே பிரம்மவிதாப்நோதி மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்குக் கிழக்கில் அக்கசாலையில் இருப்பது அக்னி தீர்த்தம். இங்கு அக்னி சூக்தம் சொல்லி நீராட வேண்டும்.

இதற்குத் தெற்கே சொக்கப்பழங்கரையில் இருப்பது கங்கா தீர்த்தம். இமம்மே கங்கே என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்குக் கிழக்கே உள்ளதான சோமாரண்யத்தில் (ஆத்தூர்) சிம்மேவ்யாகிர உதயாப் பிரதாகெள என்ற மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதனையடுத்துள்ள சண்டிகா தீர்த்தத்தில் கடவல்யுபநிஷத் சொல்லி நீராட வேண்டும்.

அதற்கு வடக்கே இருப்பது சங்கமேஸ்வர சந்நிதானம். இங்கே பைரவ நாமம், மந்திரம் சொல்லி நீராட வேண்டும்.

அதற்குக் கிழக்கே இருப்பது மூவாற்றுக் கூடல். இங்கே காயத்ரி, சாவித்திரி, சரஸ்வதி சம்பந்தமான மந்திரங்கள் சொல்லி நீராட வேண்டும். ஸ்ரீதாம்ரா சாகர சங்கமத்தில் அதாவது தாமிரபரணி கடலோடு கலக்கும் இடத்தில் யத்தேவாதேவ ஹேளனம் என்ற மந்திரத்தை உபஸ்தானம் முடிவாக ஜபம் பண்ண வேண்டும்.

## (48)

## தீர்த்த மகிமை

தாமிரபரணி நதியின் இரண்டு தீரங்களிலும் எல்லா இடங்களிலும் மகாதீர்த்தமே வியாபித்திருக்கிறது என்றும் ஒரு குளம்பு இடமாவது மகாதீர்த்தம் இல்லாததாக இருக்கவில்லை என்றும் சங்கமாமுனிவர் வீரசேன மகாராஜனுக்கு விளக்கும் நிலையில் அமைந்தது 23-ஆவது அத்தியாயமாகும்.

நதியின் இருகரைகளிலும் தேவர்கள், ரிஷிகள், சித்தர்கள் ஆகியவர்களும் சிவன், விஷ்ணு முதலானவர்களும் வீற்றியிருக்கிறார்கள். அவர்களால் தாமிரபரணி தேவி வணங்கப்பட்டு வருகிறாள். பிரம்மன் முதலானவர்கள்கூட அஷ்டசித்திகள் அடையும் நோக்கில் இந்நதியை விட்டுப் பிரிவதில்லை.

## வேதங்கள் வாசம் செய்கின்றன

தாமிரபரணியில் உள்ள தீர்த்தங்களில் ஏதோவொன்றில் குளித்தமை காரணமாகவோ அருந்தியமை காரணமாகவோ அநேக பிராணிகள் முக்தியடைந்திருக்கின்றன. புழுப் பூச்சிகளும் மரங்களும் பூண்டுகளும் தாமிரபரணி நதியின் சம்பந்தத்தால் உலக எண்ணங்களை அனுபவித்துச் சித்தியும் பெற்று முடிவில் முக்தியும் அடைந்திருக்கின்றன.அறிவில்லாத அவையே முக்தி பெற்றன என்னும்போது மானிடர்கள் முக்தி பெற்றனர் என்பதை மிகச்சுலபமாக அறிந்து கொள்ளலாம்.

வருத்தமடைவரைக் காப்பதற்காகவே பராசக்தி சிவகலை ஒன்றைப் பெற்றுவந்து மலைய பர்வதத்திலிருந்து தாமிரபரணி என்னும் தீர்த்த ரூபிணியாக வெளிப்பட்டிருக்கிறாள். இவளிடத்தில் வேதங்களும் பிரமாணங்களும் ஸ்மிருதிகளும் யாகங்களும் மந்திரங்களும் தந்திரங்களும் எல்லாக் காலத்திலும் வாசம் செய்து கொண்டிருக்கின்றன.

## முக்கியமானவை 20

தாமிரபரணியில் உள்ள துறைகளில் சிறந்தனவாகச் சொல்லப் படுபவை இருபதாகும். அவை:

சாலா தீர்த்தம், தீபதீர்த்தம், கஜேந்திர மோட்ச தீர்த்தம், புடார்ஜுன தீர்த்தம், துர்கா தீர்த்தம், பைரவ தீர்த்தம், சோம தீர்த்தம், வியாச தீர்த்தம், உரோமச தீர்த்தம், ஜோதிர்வன தீர்த்தம், சாயா தீர்த்தம், மந்திர தீர்த்தம், நான்கு அக்னி தீர்த்தம், க்ஷிப்த புஷ்ப தீர்த்தம், ராம தீர்த்தம், விஷ்ணுவன தீர்த்தம், கலச தீர்த்தம், ஸ்ரீபுர தீர்த்தம், சோமாரண்ய தீர்த்தம், சங்கம தீர்த்தம் என்பனவாகும்.

மானிடரில் அந்தணர் போலவும் பசுக்களில் காராம்பசு போலவும் வேதங்களில் உபநிஷத் போலவும் இந்த இருபதும் சிறந்தனவாகும்.

## நதியின் மகிமைகள்

தாமிரபரணி நதிகளில் சிறந்தது. சிவன் முதலானவர்களால் பூஜிக்கப் பட்டவளாய் இருப்பது. உலகிலுள்ள கோடிகணக்கான தீர்த்தங்களுக்கும் மந்திரங்களுக்கும் அதிஷ்டித்துத் தேவதையாக

இருப்பது. பொன்னைத் திருடுதல் முதலான எல்லாப் பாதகங்களுக்கும் இந்நதியின் இரண்டு தீரங்களும் தீர்ப்புக் கொடுப்பவையாய் இருக்கின்றன.

இருளுக்குச் சூரியனைப் போலவும் தாமரை மலர்களுக்குப் பனி போலவும் கீர்த்திக்குத் துர்நடத்தைப் போலவும் இந்த மகாதீர்த்தம் ஆபத்துக்களுக்கு ஆபத்தாக இருக்கிறது. இந்நதியின் இரண்டு தீரங்களும் பாவங்களை அறுக்கின்றன.

இந்த உலகில் இந்நதியைத் தவிரப் பாவங்களைத் தொலைக்க வேறு கதி இல்லை. பிராணாயாமம் செய்தல், பஞ்சகவ்யம் அருந்துதல், சுஷுும்னா நாடியில் பிராணவாயுவை ஏற்றித் தவம் செய்தல், பிராஜபத்யம் என்ற மலையிலிருந்து விழுதல், அக்னிப் பிரவேசம் செய்தல் முதலானவற்றால் மனிதர்கள் பெறக்கூடிய பலனானது இந்நதியில் ஒரேஒருமுறை நீராடினால் கிடைத்துவிடக்கூடியதாகும்.

## (49)

## வியாசர் சொன்ன கதை

ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் உள்ள 23-ஆம் அத்தியாயத்தில் வியாசர் ஒரு கதையின் மூலம் தாமிரபரணியின் சிறப்பை விளக்கியிருக்கிறார். 24-ஆம் அத்தியாயத்தில் பறவை மற்றும் பிரம்மச்சாரியின் கதைகள் இந்த நதியின் பெருமையை விளக்கும் வகையில் அமைந்துள்ளன.

### கழுகு அபகரித்த கூடை

கிருத யுகத்தில் பாண்டிய நாட்டிலிருந்த காடுகளில் ஒன்றான சிம்சுபாரணியத்தில் கண்டகன் என்ற வேடன் இருந்தான். அவன் காட்டில் வேட்டையாடினான். மரப்பொந்தில் மறைந்து கொண்டு பறவைகளுக்கு நம்பிக்கையூட்டும் வகையில் அவை கூவுவதுபோலக் கூவினான். இதுகேட்டு மயங்கி இரண்டு ஆண் புறாக்களும் இரண்டு பெண் புறாக்களும் ஆசைவலையில் உலகம் விழுவதுபோல அவன் விரித்த வலையில் சிக்கின.

வேடன் அந்தப் புறாக்களை எடுத்து ஒரு கூடையிலிட்டு இறுகக் கட்டினான்; தன் மகனிடம் கொடுத்தான்; மீண்டும் வேட்டையாடச் சென்றுவிட்டான்.

வேடச் சிறுவன் தனக்குத் தன் தகப்பன் கொடுத்த கூடையை ஒரு மரத்தின் கிளையில் கட்டிவிட்டுத் தானும் வேட்டையாடுதலில் ஈடுபட்டான். அப்போது ஒரு கழுகு ஆகாயத்திலிருந்து பறந்துவந்து

தன் மூக்கினால் பெட்டியைக் கவ்வியது; அதனை எடுத்துக் கொண்டு பறந்தது.

## பிரம்மச்சாரியின் சந்தேகம்

கழுகு கூடையை எடுத்துக் கொண்டு ஆகாயத்தில் பறந்தது. அப்போது கடுமையான காற்று வீசிற்று. மரக்கிளைகள் முறியக்கூடிய அளவுக்குக் காற்று வீசியது. அந்தக் காற்றால் சுழற்றப்பட்டுக் கழுகுக்குத் தலை கிறுகிறுத்தது. பூர்வ ஜன்ம புண்ணியம் காரணமாக அந்தக் கூடை தாமிரபரணியில் விழுந்தது; மிதந்தது.

காற்றுப் படிப்படியாகக் குறைந்தபின் ஒரு பிரம்மச்சாரி நதிக்கரைக்கு வந்தான்; அங்குமிங்கும் அலையக்கூடிய கூடையைப் பார்த்தான்; இதில் செல்வம் இருக்கலாம் என்று நினைத்து அதனைக் கைப்பற்றினான்; கட்டப்பட்டிருந்த கயிறுகளை அறுத்தான்; அதனைத் திறந்தான். அப்போது அதிலிருந்த பறவை இணைகள் ஆகாயத்தினை நோக்கிப் பறந்தன.

பறவைகள் ஒரு மரக்கிளையில் அமர்ந்தன; பெருமூச்சு விட்டன; கூக்குரலிட்டு அழுதன. மறுகரையில் இருந்த கழுகு. கூச்சலிட்ட புறாக்கள் இருந்த மரக்கிளையை நோக்கி வந்தது; இயல்பான விரோதத்தைத் தவிர்த்தது; அவற்றுக்கருகில் சென்றது; அப்பறவைகளைத் தன் இறக்கைகளால் தழுவியது; புறாக்களும் கழுகும் ஒன்றோடு ஒன்று கட்டியணைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்து மகிழ்ந்தான் பிரம்மச்சாரி. விரோதமாக இருக்க வேண்டிய கழுகு நேசமாய் இருக்கும் விநோதத்தைப் பார்த்து ஐயம்கொண்டான்; இதற்குக் காரணமென்ன என்று சந்தேகப்பட்டான்.

## கழுகு சொன்ன கதை

பிரம்மச்சாரி பறவைகளிடம், பகைமை பாராட்ட வேண்டிய நீங்கள் நேசமாய் இருப்பதற்கு என்ன காரணம்? உங்கள் சோகத்துக்குக் காரணமென்ன? என்றெல்லாம் கேட்டான். அதற்குக் கழுகு விடை கூறியது.

முற்காலத்தில் காம்போஜம் என்ற நாட்டில் ரத்னாகரம் என்ற பெயர் பெற்ற அழகிய நகரம் இருந்தது. அதனைத் தலைநகராகக் கொண்டு சூரிய வம்சத்தைச் சேர்ந்த விக்ராந்தகேசரி என்பவன் ஆண்டுவந்தான். அவன் ஈஸ்வர பக்தியுள்ளவன்; பிராமணர், தேவர், பித்ருக்களைப் பூஜிப்பவன்; அவன் காலத்தில் தர்மம் நான்கு கால்களையும் பூமியில் பதிப்பித்து நடந்தது; அக்னி முதலான தேவதைகள் அவனுடைய ராஜ்யத்தில் குடியிருந்தனர்.

அவன் பட்டமகரிஷி காளிகை என்பவள். அவளுக்கு இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள். வைஜயந்தன், ஜயந்தன் என்பவர் அவர். உரிய காலத்தில் அவர்களுக்குத் திருமணம் திகழ்ந்தது. தகப்பனின் கட்டளைப்படி வைஜயந்தனும் ஜயந்தனும் மகத தேசத்து அரசி ளங்குமாரிகளான அநங்கமஞ்சரி என்றும் இந்துபதாகினி என்றும் பெயர் கொண்டவர்களை முறையே மணந்தனர். ரதி மன்மதனை அடைந்ததுபோல அநங்கமஞ்சரியை அடைந்த வைஜயந்தன் மகிழ்ந்தான். இந்திராணி இந்திரனைப் பெற்றதுபோல இந்துபதாகினி ஜயந்தனை மணந்து மகிழ்வடைந்தாள்.

## தீமையை விளைவித்த யுகந்திரன்

இவ்வாறு இனிமையாக வாழ்ந்துவந்த நிலையில் தகப்பன் காலமானான். இவ்விரண்டு வீரர்களும் பகைவர்களே இல்லாதவர்களாக இருந்து நாடாண்டு வந்தார்கள்.

ஒருவருக்கொருவர் நேசமாக இருந்த அவர்கள் மனதில் காலத்தின் கோலத்தால் கெட்ட எண்ணம் குடிகொண்டது. தம்பியின் மனைவியைத் தமையன் விரும்பினான். அண்ணன் மனைவியைத் தம்பி காதலித்தான். தம் எண்ணத்தை ஈடேற்றிக் கொள்ளக் காலம் பார்த்துக் காத்திருந்தார்கள்.

அந்தநேரத்தில் வசியம் ஆகர்ஷணம் முதலான நூல்களைக் கற்றுணர்ந்தவனும் சென்ற இடங்களிலெல்லாம் காமிகர்களால் கொண்டாடப்பட்டவனுமான யுகந்திரன் என்ற காபாலிகன் ரத்னாகர நகருக்கு வந்தான். அவன் சேராதவர்களைச் சேர்ப்பிக்க வல்லவன்; சேர்ந்திருப்பவர்களைப் பிரிப்பதில் சமர்த்தன்; கண்கட்டி முதலான வித்தைகளில் வல்லவன்.

இப்படி ஒருவன் தன் நகரத்துக்கு வந்திருப்பதை அறிந்தான் வைஜயந்தன். அவனிடம் சென்றான்; பல்வேறு காணிக்கைகளைத் தந்தான்; காலில் விழுந்து வணங்கினான்; தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டான்.

அரசன் வேண்டியதைச் செவியில் கேட்ட யுகந்திரன் அவனைத் தனியே அழைத்தான்; உங்கள் விருப்பமென்ன? கவலையென்ன? என்று கேட்டான். அதற்கு அரசன் உயிருடன் வந்திருக்கக் கூடிய சிந்தாமணியைப் போல இருக்கும் தங்களை அடைந்ததால் என் விருப்பம் நிறைவேறும் என்பதை அறிந்தேன். நான் என் சகோதரனின் மனைவியிடம் காதல் கொண்டு அவளை அடைய வேண்டும் என நினைத்தேன்; என் பிதாவால் இவ்விஷயத்தில் முன்னால் நான் ஏமாற்றப்பட்டேன். அடியேன் காதல் கொண்டிருக்கும்

மாசிலாமணியைத் தினந்தோறும் நினைத்து நினைத்து ஏங்குகிறேன். இவ்விஷயத்தில்காட்டுத்தீயில்அகப்பட்ட மரம்போல்இருக்கிறேன்; தென்றல் எனக்குத் தீக்கனலாகத் தெரிகிறது; பூமாலை ஊசியாய்த் தைக்கிறது; படுக்கை வஜ்ரம் போல் கடுமையாக இருக்கிறது; ஆகாரம் ஆலகாலவிஷமாகத் தெரிகிறது. கொடியைப் பழிக்கும் அவளுடைய இடையினைக் கட்டியணைக்காததால் எல்லாமே எனக்குச் சூனியமாகவே இருக்கிறது. என் மனத்தாகத்தைத் தாங்கள் தீர்க்க வேண்டுமெனக் காமபரவசனாகி அவர் காலில் விழுந்து வணங்கினான்.

இதுகேட்ட காபாலிக யோகி தங்களுடைய விருப்பத்தை முடித்துத் தருகிறேன் என்றான். வசியகரணி ஆகர்ஷிணி என்னும் இரண்டு குளிகைகளை அரசனிடம் தந்தான். முன்னது மற்றவரை வசீகரிக்கக் கூடியது; பின்னது மற்றவரை ஈர்க்கக் கூடியது. இந்த இரண்டையும் பெற்ற வைஜயந்தன் காபாலிகன் இட்ட கட்டளைப்படி நடந்தான்; அவன் தம்பி மனைவியை அடைந்தான்.

இவனைப்போலவே தம்பியாகிய ஜயந்தனும் யோகீஸ்வரனைச் சரணடைந்து தான் விரும்பியவளைப் பெற்றான். இப்படியாக இவ்விருவரும் காமம் பிடித்தலைந்தார்கள்; அரச குலத்துக்குரிய செயல்பாடுகளைத் தொலைத்தார்கள்; யோகீஸ்வரனுடைய வல்லமையால் மனைவிகளைப் பரிவர்த்தனம் பண்ணிக் கொண்டு உல்லாசத்தில் திளைத்தார்கள்.

## தடுக்காத புரோகிதன்

இந்த இரு அரசர்களுக்கும் உத்தாலகன் என்ற பெயரிலான ஒரு புரோகிதன் இருந்தான். அவன் தர்ம நூல்களை நன்கு கற்றறிந்த அறிஞன்தான். இருந்தபோதிலும் பொருளாசை காரணமாக அவர்களைச் சீர்திருத்தி நல்நடையை உபதேசம் பண்ணாமல் இருந்துவிட்டான். அரசருடைய மனத்துக்கேற்ப இவன் நடந்து கொண்டமையால் ராஜ பாவத்துக்கு ஆளானான்.

## நாடிழந்தனர் சகோதரர்கள்

இப்படி இருவரும் ஒருவர் மனைவியை இன்னொருவர் விரும்பிச் சிற்றின்பத்தில் பற்றுதலுடன் வாழ்ந்தார்கள். பொருளாசை கொண்டு மக்களைத் துன்புறுத்தினார்கள். காம சுகம்பெற வழிகாட்டும் காபாலிகருக்கும் பாவிகளுக்கும் பணத்தை வாரி இறைத்தார்கள். தம் ஆசாரம் கெட்டு இரவும் பகலும் கடமைகளைத் தொலைத்து மாதர்களின் மடிகளிலேயே கிடந்தார்கள்.

இச்செய்தி பிற நாடுகளுக்குப் பரவவே பகையரசர்கள் படையெடுத்தார்கள்; எளிமையாக நாட்டினைக் கைப்பற்றினார்கள்; எல்லாவற்றையும் இழந்த நிலையில் அச்சகோதரர்கள் மனைவியர் மற்றும் புரோகிதருடன் கொடிய காட்டில் நடந்தார்கள்; சஹ்ய பர்வதத்தை அடைந்தார்கள். அங்கே ஒரு பெரிய மரத்தின் பொந்தில் வாழ்ந்து வந்தார்கள்.

இவர்கள் நிலைமையை அறிந்தான் யோகீஸ்வரன். அவர்கள் இருந்த இடத்தைத் தேடிக் கண்டுபிடித்தான்.

## காபாலிகன் சொன்ன வழி

காட்டில் வாழ்ந்த வைஜயந்தன் தன் சகோதரனுடன் அங்குக் கிடைத்த கிழங்கு, பழம் முதலானவற்றை உண்டு வாழ்ந்துவந்தான். ஆங்காங்கே சுற்றித் தனக்குப் பிரியமானவர்களுடன் கூடிக் களித்து வாழ்ந்து கொண்டிருந்த அவன் தெய்வாதீனமாக அங்குவந்த காபாலிகனைப் பார்த்து மகிழ்ந்தான். துக்கத்தில் தவிப்பவர்களுக்கு நிழலாக இருப்பவர் ஆகிய தங்கள் வருகையால் நாங்கள் கரையேறுவோம் என்ற நம்பிக்கை வந்துவிட்டது; எங்களைக் காப்பாற்றுங்கள் என்று கேட்டுக் கொண்டான்.

காபாலிகன் அவர்களுக்குத் தைரியம் சொன்னான்; இனி நாம் மலயாசலத்துக்குச் செல்ல வேண்டும் என்றான். அங்கே அகத்தியரால் பிரவாகிக்கப்பட்ட எல்லாத் தீர்த்தங்களைக் காட்டிலும் சிறந்ததான தாமிரபரணி என்ற நதி இருக்கிறது; இதில் குளிப்பவர்கள் மற்றும் குடிப்பவர்களுக்குப் போகங்களையும் முக்தியையும் அவள் அளிக்கிறாள்; அதன் கரையிலுள்ள காடுகளில் இருக்கும் கொடிகளில் சுரமங்கையர்கள் வசிக்கிறார்கள்; அங்குள்ள அருவிகள் முதலானவற்றில் யக்ஷரும் கந்தர்வர்களும் இளமைக்கோலத்தில் பசியின்றித் திரிகிறார்கள்; அங்குள்ள மலைப்பகுதிகளில் கின்னரர்கள் அழகியருடன் மலையரசனை உபாசிக்கிறார்கள்; எல்லாப் பருவங்களும் இங்கு இனிமையாக இருக்கின்றன. இப்பகுதியில் வாழ்வோர் மாளிகைகளை வெறுப்பர்.

பூங்காவனங்களில் சிறந்ததெனச் சிலர் நந்தவனத்தை ஒப்பிடுவர். சிலர் சைத்ர ரதத்தைத் துதிப்பர்; வேறுசிலர் மாதவிவனம் உயர்ந்தது என்பர்; அநேகர் மதுராபுரியில் இருக்கும் வனத்தைப் பூரித்துப் பேசுவர்; என்னைப்போலச் சகல சாஸ்திரங்களையும் கற்றறிந்து பல்வேறு நாடுகளில் சஞ்சாரம் செய்திருப்பவர்கள் மலயபர்வதத்தின் சிறப்பை விட்டுவிட்டு மற்றச் சிறப்பைப் புகழ்ந்து பேசமுடியாது. மூன்றுலகங்களில் உள்ள சிறப்புக்களைப் பெற்று

உவமை இல்லாமல் இருக்கக் கூடிய மலயபர்வதத்துக்கு ஒப்பானது ஏதுமில்லை என்றெல்லாம் அதன் சிறப்பை விவரித்த காபாலிகன் மலயமலையை நோக்கிச் செல்லலானான். வழியெல்லாம் வளம்பொருந்தியாக இருந்த பாதையில் பயணித்த அவர்கள் மலயமலையை அடைந்தார்கள்.

## தினம் ஒரு தங்கக்காசு

காபாலிகன் முதலான ஆறுபேரும் ஒரு மலையருவிக்குப் பக்கத்திலிருக்கும் குகையில் வசித்தார்கள். அங்கிருந்த புண்ணிய தீர்த்தங்களில் புனித நீராடினர். மலைக்காட்டில் கிடைத்த கிழங்கையும் கனிகளையும் உண்டு சுகமாக வாழ்ந்தார்கள். அப்போது காபாலிகன் ராஜகுமாரர்களைப் பார்த்துத் தான் செயல்படப்போகும் விதத்தைச் சொன்னான்.

நான் உங்களுடைய நன்மைக்காக ஒரு வழியை உபதேசம் செய்வேன். நீங்கள் இரவு நேரத்தில் மனைவியை அழைத்து அவள் மீது யக்ஷிணியை ஆவாஹனம் செய்ய வேண்டும்; விதிப்படிப் பூஜையளிக்க வேண்டும்; பின்னர் அவளுடன் கூடிக்களிக்க வேண்டும். யக்ஷினி தினந்தோறும் ஒரு தங்கக் காசை உறுதியாகக் கொடுப்பாள் என்றான்.

ராஜகுமாரரும் அவ்வாறே செய்வோம் என்று சொல்லிக் காபாலிகனைப் புகழ்ந்தார்கள்.

## ஏழாம் பங்குபெற்ற வேடன்

தினந்தோறும் ஒரு தங்கக்காசு கிடைக்கலாயிற்று. மந்திரவாதியான காபாலிகன் அவர்கள்முன் வந்த ஒரு வேடனை அழைத்தான்; அவனைப் புகழ்ந்தான்; நீ எங்களுடைய நண்பனாக இருக்க வேண்டும்; எங்கள் ஆறு பேருடன் ஏழாமவனாக இருக்க வேண்டும்; நம்பிக்கையாக நடந்து கொள்ள வேண்டும்; அதைச் செய்வாயா? என்றான். வேடனும் சம்மதித்தான்.

தினந்தோறும் ஒரு தங்கக்காசு செலவு செய்து சுகமாக இருக்கலாம்; நீ ஒரு பகலுக்கும் இரவுக்கும் போதுமான பொருள்களை ஒரு காசுக்கு வாங்கிவர வேண்டும்; யாரிடத்தில் எல்லாப் பொருள்களும் தடையில்லாமல் கிடைக்குமோ அங்கே சென்று சாமான்களை வாங்கிவர வேண்டும் என்றான் காபாலிகன்.

அந்த வேடன் காசினைப் பெற்றுக் கொண்டான்; பாணசூகன் என்ற வேடராஜனிடம் சென்றான்; தங்கக்காசினைக் கொடுத்தான்; நான் என் எஜமானர்களுக்கு ஏழாமவனான கூலிக்காரன்; நாங்கள் சுகமான

உணவுக்குத் தேவையான அரிசி முதலான எல்லாப் பொருள்களையும் இந்தத் தங்கக்காசுக்குத் தரவேண்டும் என்றான்.

வேடராஜன் மனமகிழ்ந்தான்; காசைப் பெற்றுக் கொண்டான்; நெய், பாசிப்பயறு முதலான உணவுப் பொருள்களைத் தந்தான்; காய், கிழங்கு, பழம், தேன், பாக்கு, வெற்றிலை கொடுத்தான்; வாசனைத் திரவியங்களும் தந்தான். பின்னர் அவன் வேடனைப் பார்த்துத் தினந்தோறும் காசு கொண்டுவந்தால் நான் சகல சாமான்களும் தருவேன்; இது யோகீஸ்வரர் கொடுத்த காசு. எனவே இதனை வேறு யாருக்கும் கொடுக்கக் கூடாது; காசை என்னிடம் மட்டுமே கொடுத்தால் பரிசும் தருவேன் என்றான்.

காசினைப் பெற்ற பாணசூகன் அதனை யாருக்கும் தெரியாதபடி ஒரு செப்புக் கலசத்தில் வைத்து அதனைத் தன் பொக்கிஷத்தில் பாதுகாத்தான்.

கூலிக்காரவேடன் எல்லாப் பொருள்களையும் காபாலிகன் முன்பு வைத்தான். காபாலிகன் சாமான்களை ஏழு பங்காக்கினான்; ஒரு பாகத்தை வேடனுக்குக் கொடுத்தான்; அதனைப் பெற்றுக் கொண்டு வீட்டுக்குச் சென்றான் வேடன்.

## ஏமாந்த வேடராஜன்

தினந்தோறும் இப்படி ஒரு தங்கக்காசு தந்த வேடனுக்கு வேடராஜன் பொருள்களைக் கொடுத்தான். பொருள்களைப் பெற்ற அவர்கள் இனிதே வாழ்ந்தார்கள்; அரசு இழந்த வீரர்கள் அந்த இரு பெண்களுடன் குகைகள், மண்டபங்களில் காம நூலில் சொல்லப்பட்ட நுட்பங்களைக் கற்று அதன்படிச் சுகித்துக் காலம் கழித்தார்கள். இப்படியாக மூன்று வருட காலம் விரைவில் கழிந்தது.

அந்நிலையில், ஒருநாள்...

மந்திரிமார்களுடன் ஆலோசித்துத் தான் சேர்த்து வைத்திருந்த தங்கக்காசை கணக்கிட்டுத் திட்டம் செய்ய விருப்பமுற்றான் வேடராஜன். பொக்கிஷத்தை அடைந்தான்; காசு இட்ட குடத்தை எடுத்தான்; குடத்தினுள் தங்கக்காசு ஏதும் இல்லாததால் அதிர்ச்சியடைந்தான். இதனைப்பிறர்எவரும்அபரிக்கவாய்ப்பில்லை என்பதை நன்கறிந்த அவன் தங்கத்திற்கு ஓடும் சக்தியில்லை, எனவே சித்தனால் தரப்பட்ட காசுகள் நிச்சயமாக அவனால்தான் அபகரிக்கப்பட்டிருக்க வேண்டும் என முடிவெடுத்தான்.

மறுநாள் தங்கக்காசுடன் வந்த ஊழியனான வேடனை அருகில் அழைத்தான்; ரகசியமாகப் பேசினான். உன்னால் எனக்கு மிகுந்த

செல்வம் கிடைத்தது; உன்னை என்னுடைய சேவகர்களின் தலைவனாக்குகிறேன்; அந்த யோகி எங்கே இருக்கிறார்? நான் அவரைப் பார்த்து வணங்க வேண்டும்; நீ காலதாமதம் செய்யாமல் நாளை அவர் இருக்கும் இடத்துக்கு என்னை அழைத்துச் செல்ல வேண்டும்; இதனை அவரிடமும் கூறலாகாது என்றெல்லாம் வேடனிடம் சாமார்த்தியமாகப் பேசினான்; பரிசும் தந்தான்; எப்போதும் போலச் சாமான்களையும் கொடுத்தான். அவன் கொடுத்த தங்கக்காசினை வேறொரு பாத்திரத்தில் இட்டு அதைப் புதைத்து வைத்தான்; மறுநாள் காலையில் கலயத்தை எடுத்துப் பார்த்தபோது காசில்லை; ஆச்சரியப்பட்டான்.

## வேடராஜன் தந்த தண்டனை

உடனே அவன் தன் படைவீரர்களுக்கு வில்லும் அம்பும் ஏந்தி வருமாறு உத்தரவிட்டான். அவர்கள் அரண்மனை வாசலில் அணிவகுத்து நின்றார்கள்; பல்வேறு ஆயுதங்களைத் தாங்கியிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் தங்கக்காசுடன் வந்தான் வேடன். சேனையுடன் வேடனை அழைத்துக் கொண்டு காபாலிகன் இருந்த இடத்துக்குச் சென்றான்; அங்கிருந்தவர்களை நான்குபுறத்திலும் வளைத்துப் பிடித்தார்கள் வீரர்கள். காபாலிகனைப் பார்த்து வேடராஜன் எனக்கொரு பகைவன் இருக்கிறான்; அவனை அழிக்க உதவவேண்டும் என்றான். தைரியசாலியான காபாலிகன் அரசே அஞ்ச வேண்டாம்; உன்னுடைய உதவிக்காகக் காலப்போக்கில் கோடிப்பொன் தருகிறேன் என்றான்.

கூர்மையான அறிவுபடைத்த வேடராஜன் இது வீண்பேச்சு என்பதைஅறிந்தான். இப்போதே எனக்குக் கோடிப் பொன் வேண்டும் என்றான். காபாலிகன் சொன்ன மறுமொழி வெற்றுப் பேச்சாக இருந்தது. இப்படிப் பேசுவது இல்லையென்பதற்கு இணையானது என்பதை அறிந்த அவன் தன் கத்தியை எடுத்தான்; காபாலிகன் ராஜகுமாரர்கள், ராஜகுமாரிகள், புரோகிதன் ஆகியோருடைய கழுத்தை வெட்டி எறிந்தான்.

இறந்த அவர்கள் தங்களுடைய தீய செயல்களால் எமதூதர்களால் கொண்டு போகப்பட்டார்கள். இவர்கள் ஒன்றாகவே தீமைகளைச் செய்தவர்கள்; ஒன்றாகவே கொலை செய்யப்பட்டவர்கள்; ஒன்றாகவே யமபுரிக்குச் சென்றவர்கள்; யமன் முன்பாகக் கொண்டுபோகப் பட்டவர்கள்.

### தாமிரபரணி மகத்துவம்

தாமிரபரணியில் புனித நீராடிய மகத்துவத்தால் காபாலிகன் முதலான ஆறுபேர்களும் யமப்பட்டணம் போன பிறகும் யம தண்டனையை அனுபவிக்காமல் அனுபவிப்பவர்களுடைய துன்பத்தை மாத்திரம் பார்த்து நீண்டகாலம் அவ்விடத்தில் இருந்தார்கள்.

யமதர்மராஜனுடைய கட்டளைப்படி மண்ணுலகத்தில் பறவை ஜன்மத்தைப் பெற்றார்கள்; தாமிரபரணி ஸ்நான பாக்கியத்தால் முக்காலமும் அறியும் ஞானம் பெற்றார்கள்; இந்த இரண்டு புறாக்கள்தான் சென்ற ஜென்மத்தில் ராஜகுமாரர்கள்; கழுகாக இருக்கும் நான் காபலிகனாக இருந்த யுகந்தரன்; பிரம்மச்சாரியான நீர் புரோகிதனாக இருந்த உத்தாலகன் என்றது கழுகு.

## (50)

## யமன் சொன்ன கதை

யமபுரிக்குக் கொண்டுசெல்லப்பட்ட அவர்களை யமகிங்கரர்கள் பல்வேறு வகையில் தண்டித்தனர். இவர்களை எந்தவகையில் தண்டித்தாலும் பாதிக்கப்படுவதில்லை. கொள்ளிக்கட்டைகளை வைத்தால் அவை மலர்போல் ஆகிவிடுகின்றன; கொடிய விலங்குகள் இவர்களைக் கடிப்பதில்லை; புலிகளை ஏவினாலும் பயன் விளையவில்லை; இவர்களைத் தண்டிக்க எங்களால் முடியவில்லை என யமதர்மனிடம் கிங்கரர்கள் சொன்னார்கள்.

### ஆச்சரியப்பட்ட யமன்

இதுகேட்ட யமதர்மன், யமபடர்கள் மிகப்பலரை அழைத்து விரைந்துவந்து இவர்களைப் பல்வேறு வகைகளில் தண்டிக்க வேண்டும் என்று கட்டளையிட்டான். கொள்ளிக்கட்டைகளால் சுடுங்கள்; வாணலியில் இட்டு வறுத்தெடுங்கள்; கயிறுகளால் கட்டுங்கள்; கனலில் இட்டு அழியுங்கள் என்றெல்லாம் சொன்னான். அவர்களும் யமதர்மன் கூறியவாறு செய்தனர். அவர்கள் செலுத்திய ஆயுதங்கள் வாசனையுடன் கூடிய பூமழை போலாயின. காய்ச்சிய எண்ணை சந்தனக்குழம்புபோல் ஆயிற்று.

இதைப்பார்த்துக் களைத்த அவர்கள் யமனுடைய இருப்பிடத்தில் இந்தப் பாவிகளுக்குத் துன்பமுமில்லை, அழிவுமில்லையே அது எதனால் என்று களைத்தார்கள்.

இதனைப் பார்த்த தர்மராஜன் சிந்தித்தான்; சித்ரகுப்தன் வியந்தான்; காலன் எண்ணிக்கைத் தப்பினான்; ம்ருத்யு தியானத்தில் ஆழ்ந்தான்; கிங்கரர்கள் கிழடங்கினர்; ஓடிச்சாடிய யமபடர்கள் ஒதுங்கினர்.

அப்போது ஆகாயத்தில் ஓர் அசரீரி தோன்றியது. எப்படி மலைகளுக்குச் சேதமில்லையோ அதுபோல அவமரியாதையோடு **தாமிரபரணியில் ஸ்நானம் பண்ணியவர்களுக்குக் கூட எந்தப் பாவங்களாலும் துக்கமில்லை.** எனவே இவர்களைத் தண்டிக்க முடியாது என்றது அசரீரி.

## (51)

## யமன் செய்த ஸ்துதி

ஆகாயவாணி சொன்னதைக் கேட்டு யமதர்மன் பயம்கொண்ட மனதுடையவனாய்க் கரங்களைக் கூப்பினான்; நடுநடுங்கினான்; தழுதழுத்த குரலில் பேசலானான்; துதித்தான்.

தாமிரபரணியை மனதில் நினைத்த மாத்திரத்தில் பிராணிகள் பாவங்களை விட்டு நீங்குகின்றன, அப்படிப்பட்ட ஸ்துதியால் போற்றப்பட்ட தாமிரபரணியின் பெருமையை முன்பொரு சமயம் தற்செயலாகக் கேட்டிருக்கிறேன்.

சதுர்வேதங்களும் அவளைப் பாவத்தை நீக்குபவள் என்றும் மலயராஜகுமாரி என்றும் பூஜிக்கின்றன. முனிவர்கள் இடைவிடாமல் இவளைச் சேவிக்கிறார்கள்.

தாமிரபரணியில் வேதங்களும் மந்திரங்களும் யாகங்களும் பிரம்மதேவனின் கட்டளைப்படித் தீர்த்தத் திவலைகளை அருந்திப் பரிசுத்தமடைந்தன.

தாமிரபரணியின் வெள்ளத்தை ஏகாதச ருத்ரரூபமாகவும் அமுதத்தைப் பழிக்கும் தீர்த்தத்தைப் பிரம்மரூபமாகவும் அதன் சுவையை நாராயண சொரூபமாகவும் கூறுகிறார்கள்.

இராவதி, தேனுமதி, பருஷ்ணி, பாவநீ, சுதா, கருணா என்றெல்லாம் தாமிரபரணித் தேவியை உபநிஷத்துகள் போற்றுகின்றன.

இந்த நதியின் தீர்த்தமானது முடிவில் நன்முத்துக்களாகிறது; இவள் சதாசிவனுடைய கழுத்து மாலையாக இருந்தவள்; மகாவிஷ்ணுவுக்குச் சூடாமணி; பிரம்மதேவனால் தியானிக்கப்படுபவள்.

உயிர்களால் கண்டறியமுடியாதவளான நன்மையே உருவான ஆதிபராசக்தி ஆனவள்; சங்கரானால் பிரார்த்திக்கப்பட்டுத் தீர்த்தரூபம் அடைந்திருக்கிறாள்.

இப்படிப்பட்டவளாய்ப் பிரம்மானந்தம் நல்கும் மலயராஜகுமாரிக்கு வந்தனம். பாவத்தைத் தொலைக்கின்ற இந்த லலிதாதேவியானவள் முன்பாகத்தில் காப்பாற்ற வேண்டும்; சந்தன மலையில் குமாரியாகப் பின்பாகத்தில் ரட்சிக்க வேண்டும்; எக்காலத்தினும் நிச்சயமான இவள் வலதுபாகத்திலும் மாணிக்க கர்ப்பிணியாக இடதுபாகத்திலும் பத்மகர்ப்பிணியாகக் கீழ்ப்பாகத்திலும் மேல்பாகத்திலும் காப்பாற்ற வேண்டும்.

நான் மகாதேவியான தாமிரபரணி தேவியை இரவும் பகலும் ஸ்மரணம் பண்ணுகிறேன்; தீர்த்த தேவதையான சாவித்திரியான லோகமாதாவைக் காலையிலும் மாலையிலும் நினைக்கிறேன்.

என்று இவ்வாறெல்லாம் தர்மராஜன் தலைமேல் கைவைத்துத் துதித்தான்; அவன் கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் பெருக்கெடுத்தது; தாம்பிரபரணி தேவியைத் தியானம் பண்ணித் துதித்து வந்தனம் செய்து ஒருநிமிட காலம் அமைதியாக இருந்தான்.

### யமன் சொன்ன கதை

சபையிலிருந்த பெரியவர்கள் அவனிடம் தாமிரபரணியின் மகத்துவத்தைக் கேட்க விரும்பினர். தம் ஆச்சரியத்தை வெளிப்படுத்தினர். அப்போது அவன் அவர்களிடம் ஹரிஸ்வாமி என்பவன் வரலாற்றைச் சொல்லித் தாமிரபரணியின் பெருமையை விளக்கினான்.

## (52)

## ஹரி ஸ்வாமியின் கதை

யமதர்மராஜன் தாம்பிரபரணி நதியின் சிறப்பினை விளக்கும் வகையில் கூறிய ஹரிஸ்வாமியின் கதை தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 25-ஆம் அத்தியாயத்தில் இடம்பெற்றுள்ளது. அது பின்வருமாறு:

### யாக்ஞவல்கியர் ஆசிரமத்தில்

கிருத யுகத்தில் வேதமும் வேதாந்தங்களிலும் வல்ல அந்தணரான ஹரிஸ்வாமி என்பவர் இருந்தார். ஹரிஸ்வாமி உரிய காலத்தில் தன் மனைவியை மகனிடத்தில் ஒப்படைத்து அக்னியைத் தன்னுள் ஆரோஹணம் செய்து கொண்டு யோகாப்பியாசத்தில் உறுதிகொண்டு வானப்பிரஸ்தாச்ரம தர்மத்தை மேற்கொண்டார். தாம்பிரபரணியின் வடகரையில் நீண்டகாலம் தவம் செய்யலானார். இவர் தவம் செய்த இடம் யாக்ஞவல்கிய முனிவருடைய ஆசிரமமாகும். அவருடைய தவம்கண்டு மகிழ்ந்த வர்ணபகவான் திவ்யமான ஒரு வெள்ளரி

விதையை அவருக்குத் தந்தார். அதனை விதைத்துக் கொடி முளைத்து ஏறிப் படரும்போது அருகிலிருக்கும் மரம் ஒன்றின்மீது படரும்படிச் செய்தார்.

வெள்ளரிக்கொடி நாற்புறமும் படர்ந்தது. நாளொன்றுக்கு ஒருமுழ நீளத்தில் ஒரேஒரு பழம் மட்டும் பழுக்கும் அற்புதமான கொடி அது. அந்தப்பழம் அமுதம் போல ருசியுள்ளதாக இருக்கும். ஹரிஸ்வாமி ஸ்ரீசக்கரத்தில் தேவியைப் பூஜை பண்ணி அதன்பின் அக்கனியைப் புசிப்பது பழக்கம்.

## வெள்ளரிக்காயால் விளைந்த சாபம்

இது இவ்வாறாக வசிஷ்ட கோத்திரத்தில் பிறந்தவனும் வேத சாஸ்திரம் முதலானவற்றை உணர்ந்தவனுமான பானுசித்தன் என்பவன் பணமில்லையாமையால் குடும்பத்தை நிர்வகிக்க முடியாமல் தவித்தான். பணம் சம்பாதிக்க விருப்பம் கொண்டு கொடிய பாவிகளான யுத்த வீரர்களுக்குப் புரோகிதம் பார்த்து அவர்கள் கொடுப்பதைக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தான்.

அவன் ஒருநாள் ஹரிஸ்வாமியைத் தேடி வந்தான். அவரை வணங்கினான். உடன் ஹரிஸ்வாமி பானுசித்தனை உபசரித்து அமர்வித்தார்; அவனைப் பார்த்து 'நண்பனே! உன் இல்லத்தில் எல்லாரும் நலமா?நீ எதற்காக இங்கு வந்திருக்கிறாய்? உனது விருப்பமென்ன?' என்றெல்லாம் கேட்டார்.

அப்போது பானுசித்தன், ''ஸ்வாமிகளே! உங்களருளால் என்வீட்டில் எல்லாரும் நலம். தங்களைத் தரிசித்துச் சங்க்ரம (மாதப்பிறப்பு) ஸ்நானம் செய்து போகலாம் என்று வந்திருக்கிறேன். சூரியன் சிம்மராசியில் சஞ்சரிக்கும்போது (ஆவணிப்பிறப்பு) தாம்பிரபரணியில் ஸ்நானம் செய்தால் அஸ்வமேத பலனைக் காட்டிலும் அதிக பலனுண்டு என்று புராணங்கள் அனைத்தும் கூறியிருக்கின்றன. எனவே நான் தங்களிடம் உத்தரவுபெற்று நதியில் புனித நீராட விரும்புகிறேன்'' என்றான்.

இதுகேட்ட ஹரிஸ்வாமி பெரிதும் மகிழ்ந்தார். விதிப்படி மகாநதியில் ஸ்நானம் பண்ணி இங்கு விருந்துண்டு இரவு தங்கி நாளை காலை வீட்டுக்குச் செல்லலாம் என்றார்.

அதன்படியே அவன் நீராடினான்; தர்ப்பணம் செய்தான்; அனுஷ்டானங்கள் முடித்தான்; ஹரிஸ்வாமியின் ஆசிரமத்துக்கு வந்தான்; அவர் கொடுத்த வெள்ளரிப் பழத்தை உண்டான்; இரவு அங்குத் தங்கினான்; இரவினைக் கழித்தான்.

மறுநாள் காலை வீட்டுக்குச் செல்லும்போது அவன்கண்ணில் வெள்ளரிக்கனி பட்டது. அது அவன் உள்ளத்தில் ஆசையைத் தூண்டியது. அதனைப் பறித்துக் கொண்டு சென்று வீட்டிலுள்ளவர்களிடம் கொடுத்தான். அனைவரும் அதனைப் பகிர்ந்து உண்டார்கள்.

மறுநாள் ஹரிஸ்வாமி பூஜை முதலானவற்றை முடித்துவிட்டுப் பசியுடன் பழத்தைப் பறிக்க வந்தார். அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருள்களையும் தரும் கருவியான அந்தப் பழம் களவு போயிருப்பதைக் கண்டார். அதனைக் கவர்ந்த பாவி குள்ளநரியாகத் திரியட்டும் என்று சபித்தார். பட்டினி கிடந்தார்.

## சாபவிமோசனம்

உத்தமமான ஹரிஸ்வாமியால் சபிக்கப்பட்டதால் பானுசித்தன் குள்ளநரியானான். பெரும் துன்பமடைந்தான்; ஹரிஸ்வாமியின் ஆசிரமத்தையடைந்தான்; அங்குமிங்கும் திரிந்து ஊளையிட்டான்; சத்தம்கேட்டு ஆசிரமத்திலிருந்து வெளிப்பட்ட முனிவர் நரியைப் பார்த்தார்; அது விரைந்துவந்து முனிவரின் காலடிகளில் விழுந்து புரண்டு வருத்தத்தைத் தெரிவிக்கும் நிலையில் ஊளையிட்டது.

ஞான திருஷ்டியால் நரியை நோக்கிய முனிவர், ''பானுசித்தனே நரியாகிவிட்டான் என்பதைப் புரிந்து கொண்டார். உடனே நரியை நோக்கி, ''நான் என் கோபத்தால் உன்னைச் சபித்துவிட்டேன்'' சாந்த புத்தியுள்ளவர்கள் விதியால் விளையும் செயல்களுக்குக் கவலைப்படமாட்டார்கள். நீ என்னிடத்தில் தெரிவித்து அந்தப் பழத்தைப் பெற்றுக் கொள்ளாததால் உனக்கு இத்தகைய அவமானம் நேரிட்டது. நீ நரியாகச் சிலகாலம் இருந்து மறுபடியும் நல்லகதிக்கு வந்துவிடுவாய். உனக்கு பரமசிவனிடத்தில் பக்தியுண்டாகும். உன்னுடைய வாக்குக் கங்கையைப் போல் பிரவாகிக்கும். அடுத்த வருடம் சூரியன் சிம்ம ராசிக்கு வரும்நாளில் நீ சாபத்திலிருந்து நீங்குவாய் என்று சொன்னதுடன் தன் ஆசிரமத்துக்கு அருகிலுள்ள சிலாகர்த்தம் என்ற இடத்தில் வசிக்குமாறு ஆணையிட்டார்.

## நரிக்கு வந்த ஞானம்

நரி சிவசைலத்துக்கு வடக்குப் பகுதியில் இருக்கிற சிலாகர்த்தத்தில் இருந்த காட்டில் வசித்துவந்தது. அப்போது பாண்டிய மன்னனாக இருந்தவன் பரபுஞ்சையன் (பகைவரின் நாடுகளை வென்றவன்) என்பவனாவான். இவன் ஒருநாள் கள்வர்கள் தன்னாட்டில் கொள்ளையிட்டுக் காட்டுக்குச் சென்றதைக் கேள்விபட்டான். பெரும் கோபம் கொண்டான். சேனையுடன் பொதிகை மலையிலிருந்த

காட்டுக்குச் சென்றான். அங்கே பதுங்கியிருந்த கள்வர்களைப் பிடித்துக் கழுவேற்றினான்.

ஏராளமான பாவிகள் இறந்து போனார்கள். அவர்களின் சவத்தி லிருந்து பிணவாடை அப்பகுதியில் வீசலாயிற்று. வாடை காரணமாகக் குள்ளநரி தன் குகையிலிருந்து வெளிப்பட்டன. வாடை புறப்பட்ட சிலாகர்த்தப் பகுதிக்குச் சென்றன. அங்குக் கழுவேற்றப்பட்ட பிணங்களை மிகப்பல காகங்களும் கழுகுகளும் கொத்தித் தள்ளுவதையும் பூமியில் விழுந்த துண்டுகளை நரிகள் தின்பதையும் நாய்களும் செந்நாய் முதலியவையும் பிணங்களை புரட்டிப்போட்டு உண்பதையும் குள்ளநரி பார்த்தது.

அப்போது நரி அவற்றின் கெட்ட செயலைப் பார்த்து வெட்கப்பட்டது; நான் சாமவேதியாகப் பிறந்தவன்; மூடத்தன்மையால் நரிஜன்மம் கிடைத்தது; படிப்பவருக்குத் தாழ்ந்தநிலை நேர்ந்தால் உயர்நிலை அடைய முயற்சிக்க வேண்டும்; கெட்ட நிலைக்கு வந்துவிட்டோம் என மேலும் கெடக்கூடாது. துறவியர் ஒவ்வொரு முறையும் பிணத்தைக் காணும்போது புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தார்கள். இந்த செய்திகளை உணர்ந்த நான் பிணம் தின்பதில் ருசி கொள்ளக்கூடாது என நினைத்தது.

## பாவிகளுக்கும் நற்கதி

நதி மேலும் சிந்தித்தது. முன்னொரு காலத்தில் குந்தள தேசத்தின் அரசனாகயிருந்த நாககேது என்பவன் பர்ணாத மகரிஷியின் சாபத்துக்கு ஆளானான். காட்டில் ஒரு புலியாகப் பிறந்தான். அப்போது அவன் ரிஷிக மகரிஷியினுடைய பசுவை அடித்துத் தின்றான். நாககேதுவின் சாபத்துக்கு விமோசன காலம் வந்தது. அந்தநிலையிலும் அவன் பசுவைக் கொன்ற பாவத்துக்கு ஆளானமையை நரி நினைத்துப் பார்த்தது. பிணத்தைத் தின்னக்கூடாதெனத் திரும்பவும் முடிவெடுத்தது.

அதன்பின் அந்த நரி திருடர்களுக்குப் புரோகிதனாகயிருந்து தட்சிணை வாங்கி வயிற்றை நிரப்பி வந்தேன். நான் தின்ற சோற்றுக்காக இந்தத் திருடர்களுக்கு நற்கதியைக் கொடுக்க வேண்டும்; பட்ட கடனிலிருந்து நீங்க வேண்டும் என நினைத்தது.

நன்றியுணர்வுள்ள மனிதன்போல் பூமியில் சிதறிக்கிடந்த திருடர்களின் எலும்புகளை வாயால் கவ்வித் தாம்பிரபரணி புண்ணிய தீர்த்தத்தில் இட்டது. அதுவும் ஸ்நானம் செய்து சிலாகர்த்தம் திரும்பியது.

### சொர்க்கம் சென்றது நரி

பிறந்ததுமுதல் பாவமே செய்துவந்த திருடர்களின் எலும்புகளைக் கேவலமான நரியானது தாம்பிரபரணி நீரில் எறிந்ததும் அந்தத் தீர்த்தத்தின் மேன்மையால் அவர்கள் பாவநீக்கம் பெற்றார்கள். நரகத்தில் ஏற்பட்ட வருத்தங்கள் நீங்கிச் சூரியன்போல ஒளியுடைய உடலைப் பெற்றார்கள்; தேவவுலகப் பெண்களால் வரவேற்கப்பட்டார்கள்; தங்க விமானம் ஏறிச் சொர்க்கத்துக்குச் சென்றார்கள்; உரிய காலத்தில் நரிக்கும் நல்ல கதி கிடைத்தது என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

## (53)

## யமன் தந்த சாபமும் விமோசனமும்

யமதர்மராஜன் ஹரிஸ்வாமியின் கதையைக் கூறிய பின்னால் தன் சபையில் இருந்தவர்களைப் பார்த்துத் தாம்பிரபரணியின் தீர்த்த மகத்துவத்தைப் பற்றி அமைந்துள்ள கதைகளைச் செ வியாலே கேட்டால் போதும் சகல பாவங்களும் தொலைந்துவிடும்; உச்சரித்தாலும் உன்னத நிலை கிடைக்கும் என்று சொன்னான். அதுமட்டுமன்றி அந்தத் தேவியின் மகிமை விவரிக்க இயலாதது எனவே ஒவ்வொரு நாளும் எம்முடைய ஆணைக்குட்பட்ட நீங்களெல்லாரும் உங்களுடைய ஆத்மசுத்திக்காக அம்மகாநதியை உள்ளன்புடன் வணங்குங்கள் அவளுடைய புண்ணிய நாமாக்களை ஜபம் செய்யுங்கள் என்றார்.

### நரகத்தில் அறுவர்

எமன் பின்னர் எமதூதர்களை அழைத்தான். இந்த ஆறுபேரும் தாமிரபரணி தீர்த்த விசேஷத்தால் பாவம் அற்றவர்களாகிவிட்டார்கள்; அதனால் எமபயம் இல்லாமல் இருக்கிறார்கள். இருந்தாலும்கூட அவர்கள் தம் சித்த சுத்திக்காக இங்குள்ள பல்வேறு நரகங்களைப் பார்த்து வரவேண்டும் அதற்கு ஏற்பாடு செய்யுங்கள் என்றான்.

பின்னர் அவர்கள் ரௌரவம், கர்க்கரம், கும்பிபாகம், காருகம், மகாரௌரம் முதலான அநேக நரகங்களுக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள்; பல்வேறு உயிரினங்கள் கழுவில் ஏற்றப்பட்டிருப்பதையும் பலர் பல்வேறு தண்டனைகளை அனுபவிப்பதையும் பார்த்தார்கள். இப்படி 84 ஆயிரம் ஆண்டுகள் அவர்கள் நரகத்தில் இருந்தார்கள்.

### யமன் தந்த சாபம்

பின்னர் அவர்கள் யமனுடைய சபையில் அவனுக்கருகில் கொண்டு செல்லப்பட்டார்கள். அப்போது நல்ல குலத்தில் பிறந்து வேதங்களை நன்குணர்ந்த இந்த பிராமணன் கொடிய பாவிகளுடன் சேர்ந்திருந்த காலத்திலும் காயத்ரி ஜபத்தை இடைவிடாது செய்தான். அதுமட்டுமல்லாமல் காயத்ரி மந்திரத்தால் அபிமந்திரிக்கப்பட்ட உணவை உண்டான். எனவே இவன் வாழ்வியல் காரணமாக இவன் மறுபடியும் பிராமணனாகவே பிறக்கக்கடவன்.

காபாலிகனாக மாறி ஜனங்களை வஞ்சித்துப் பாவியான அவன் செய்கைக்கேற்பக் கழுகாகப் பிறக்கக் கடவன்.

அரசரும் அவன் மனைவியரும் புறாக்களாகப் பிறக்கக் கடவர். இவர்களனைவரும் ஸ்ரீ தாம்பிரபரணி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும்போது அவர்களுக்கு நல்ல கதி கிடைக்கும்; அதற்கு வழி செய்யும் வகையில் பூர்வஜன்ம வாசனை இருக்கும்'' என்று சொன்னான்.

''இந்தப் பிராமணன் அடுத்த பிறவியில் யாகங்களால் தேவதைகளையும் முன்னோர்களையும் திருப்தி செய்து அழிவற்ற சிவலோகத்தை அடைவானாகுக'' என்றான் யமன்.

## (54)

## பிராமணனுக்குக் கிடைத்தப் பேறு

பிராமணன் கழுகு முதலான ஐந்து பறவைகளையும் தாம்பிரபரணியில் ஸ்நானம் செய்வித்தான். மீண்டும் அவை பழையபடி உயர்நிலையை அடைந்தன; ஸ்ரீவிமானத்தில் ஏறித் தேவலோகம் சென்றன. அதன்பின் வீட்டுக்குச் சென்ற பிராமணன் தாய், தந்தையரை வணங்கினான்; தவம் செய்ய அனுமதிபெற்றான்.

### இந்திர கீலத்தில் தவம்

மக்களுக்கு நன்மையைத் தரக்கூடிய தலமான இந்திரகீலம் எனப்படும் பாபவிநாச க்ஷேத்திரத்தை அடைந்தான். மகாதேவியாய் மலயராஜகுமாரியாய் இருக்கும் ஸ்ரீ தாம்பிரபரணி தேவியை மனதில் தியானித்தான். சிறுவனாக இருந்த போதிலும் தேவர்களும் புகழும் வகையில் கடும்தவம் செய்தான். சில காலம் நீர்மட்டுமே அருந்தினான்; சிலசமயங்களில் காற்றை மட்டுமே சுவாசித்தான்; சில போதுகளில் உதிர்ந்த சருகுகளை மட்டுமே உண்டான். இப்படிக் கடும் தவம் செய்தான். மூன்றாண்டுக் காலம் கடந்தன.

## தாம்பிரபரணி அருள்செய்தமை

பிராமணச் சிறுவனின் கடும்தவத்தால் திருப்தியடைந்தாள் தாம்ப்ரா தேவீ. அவன்முன் தோன்றினாள்; வேண்டும் வரம்கேள் என்றாள். அப்போது பிராமணச் சிறுவன் தன் தியானத்தை நிறுத்திக் கண்களைத் திறந்து பார்த்தான்; பராசக்தியான தேவியைத் தரிசித் தான். அவளைப் பலவாறாக துதித்தான். அவன் துதிகண்டு மகிழ்ந்தாள் தேவி.

உன் விருப்பங்கள் தடையில்லாமல் நிறைவேறும்; 64 கலைகளும் உன்னிடம் குடிகொள்ளும்; ஒரு யாமத்துக்குள் நான்கு வேத ஞானங்களும் உன்னிடத்தில் தோன்றும்; பிரம்மா விஷ்ணு முதலான எல்லாத் தேவர்களும் உனக்கு அனுக்ரஹம் செய்வர். எல்லாரும் புகழக்கூடிய செல்வம் உன்னிடம் குடிகொள்ளும்; நீ மிகப்பல நூறாண்டுகள் ஜீவித்திருப்பாய்; பெரும் செல்வத்துடனும் பிள்ளை, பேரன் முதலானவர்களுடனும் சிறப்புற்று வாழ்வாய்; பல்வேறு யாகங்களைச் செய்து தேவதைகளைத் திருப்திப்படுத்துவாய்; இறுதியில் முக்தியடைவாய் என்று வரமளித்தாள் அவள்.

## உக்ரதபசின் தவம்

வரமளித்த தாமிபரணிதேவி இன்றுமுதல் உன்னை உக்ரதபஸ் என்ற பெயரால் அனைவரும் அழைப்பர். நீ பரமசிவனையும் பார்வதியையும் என்னையும் இடைவிடாமல் ஆராதிக்க வேண்டும், உனக்கு எல்லா விஷயங்களிலும் நன்மையே கிட்டும் என்று வாழ்த்தினாள். அவன் தாய், தந்தையரை வந்துவணங்கினான்; பெற்றோர் பெரிதும் மகிழ்ந்தனர்.

புத்திசாலியான அவன் பரத்வாஜ முனிவரிடம் நான்கு வேதங்களைக் கற்றான். பல்வேறு கலைகளைப் பயின்றான்; குருதட்சிணை தந்து அவர் அனுமதியுடன் மேதாநிதி என்பவரின் மகளான சாலாவதியை மணந்தான்; பல்வேறு யாகங்களைச் செய்தான்; மணிக்ரீவத்தில் இருக்கிற தன் வீட்டில் சுகமாக வாழ்ந்துவந்தான். ஒவ்வொரு ஆண்டும் மலய பர்வதம் தொடங்கிச் சங்கமம் முடிய தாம்பிரபரணியின் இருகரையிலுள்ள தீர்த்தங்களிலும் முறைப்படி நீராடிச் சிரார்த்தம் தந்தான்.

மஞ்சள்பொடியால் தாம்பிரபரணி தேவியின் விக்ரஹத்தைச் செய்து அதில் நான்கு கைகளுடன் கூடிய தேவியைத் தியானிப்பான்; ஆவாஹனம் செய்வான்; பூஜை புரிவான்; பொரி முதலான சத்துமாவு உள்ளவற்றை நிவேதனம் செய்வான்; பின் அவளுடைய சிறந்த திருநாமங்களைச் சொல்லி அர்ச்சனை புரிவான்; பிராமணர்களுக்கு

அன்னதானம் அளிப்பான்; தட்சிணை தந்து அவர்கள் விருப்பப்படி அவர்களை வெகுமதிப்பான்; ஒவ்வொரு நாளும் மூன்று காலமும் புனித நீராடிக் காலத்தைப் போக்குவான். இப்படி உக்ரதபஸ் 5,300 வருடங்கள் வாழ்ந்தான்; மலயபர்வதம் வந்து தவம் செய்து பிரம்மலோகம் சென்றான் என்கிறது தாம்ரபர்ணீ மகாத்மியம்.

### மறுஜன்மத்தில் உக்ரதபஸ்

அடுத்த கல்ப காலத்தில் தாம்பிரபரணி தீர்த்தச் சிறப்பினால் அவன் பிரம்மதேவனிடத்தில் பிறந்து சனகர் என்ற பெயருடன் யோகிகளில் உத்தமமனாக விளங்குகிறார் என்று சொல்லும் தாம்ரபர்ணீ மகாத்மியம் தாம்பிரபரணியின் பெருமை விவரிக்க இயலாதது எனத் திரும்பவும் விளக்கியிருக்கிறது.

## (55)

## வசுமனஸ் வரலாறு அல்லது சாலா தீர்த்த மகிமை

துவாபர யுகத்தில் வாழ்ந்த யயாதி மன்னனின் பேரன் மாதவி என்பவளின் மகன் வசுமனஸ் என்பவன் ஆவான். இவன் திக்விஜயம் செய்து எல்லா உலகங்களையும் ஜயித்தவன்.

### கற்கன் சிரிக்கக் காரணம்

அவன் சபைக்குக் கற்க முனிவன் என்பவர் ஒருசமயம் வந்தார். அவனை மன்னன் முறைப்படி உபசரித்தான். அவர் மன்னனைப் பார்த்து ஏளனமாகப் புன்சிரிப்புச் செய்தார். புன்னகைப்பது ஏன்? என்று கேட்டான் அரசன். ''மன்னவா உன் திக்விஜய காலத்தில் அநேக ஆலயங்களும் புண்ணியத் தீர்த்தங்களும் சோலைகளும் அழிந்தன. அந்தப் பாதகங்கள் உன்னைச் சூழ்ந்திருக்கின்றன. எனவே நீ இன்னும் 12 நாட்கள்தான் உயிரோடு இருப்பாய், அதை நினைத்தேன்; சிரித்தேன்'' என்றார் கற்க முனிவன்.

### முனிவன் சொன்ன வழி

இதுகேட்ட மன்னன் நடுங்கினான். அடியற்ற மரம் போல அவர் பாதத்தில் விழுந்தான். ''சுவாமி நான் பிழைக்க நீங்கள்தான் வழிகாட்ட வேண்டும்'' என்று கேட்டான். பொதிகை மலைக்குச் சென்று அகத்தியரைத் தரிசித்தால் நீ பிழைப்பாய் என்று சொல்லி அகன்றார் கற்கமுனிவன்.

உடனே படைகள்சூழ விரைந்தான்; பொதிகையை அடைந்தான்; அகத்தியரைத் தரிசித்தான்; கற்கர் சொன்ன செய்திகளைச் சொன்னான்; மரணாபத்திலிருந்து நீங்க மாமுனிவரிடம் வழிகேட்டான். அவரும் மனமிரங்கினார்.

## கருத்தது நீர்; கிடைத்தது ஆயுள்

அகத்திய முனிவர் அரசனை ஒரு துறையில் முறைப்படி நீராடுமாறு செய்தார். அவன் நீராடிய இடத்திலிருந்து முன்னும் பின்னும் ஒரு குரோசம் தூரம் இருந்த நீரெல்லாம் கரிய நிறத்தை அடைந்தது; ஓர் ஆரவாரமும் அப்போது எழுந்தது. இதுகண்டு அதிசயித்தான் அரசன்; முனிவனிடம் இது என்ன?'' என்று கேட்டான். அதற்கு அவர், ''உன் பாவத்தை இந்தத் தீர்த்தம் கழுவியதால் சிறிது தூரம் கரிய நிறம் உற்றது. பாவத்தைச் சங்காரம் செய்ததால் கொஞ்சம் சத்தம் உண்டானது'' என்றார். நீ பரிசுத்தனாகிவிட்டாய் உன் நகரத்துக்குச் சென்று ஆட்சி புரியலாம் என்று அனுப்பிவைத்தார்.

## அழிந்தது யாக சாலை

ஆண்டுகள் சில கழிந்தன. வசுமனஸ் ஒரு பெரிய யாகம் செய்ய நினைத்தான். கங்கைக் கரையில் யாகம் செய்ய முடிவெடுத்தான். யாகத்துக்கு வேண்டிய பொருட்களைச் சேகரித்துக் கொண்டு கங்கைக் கரையை அடைந்தான். காசிமாநகரில் கங்கைக் கரையில் யாக மண்டபம் அமைக்கப்பட்டது. யாகம் நடத்திவைக்கும் ரிக்குக்கள் புடைசூழ யாகம் நடைபெறத்தொடங்கியது. அந்நிலையில் ஒருநாள் கங்கையில் பெருவெள்ளம் வந்தது. அந்த வெள்ளம் யாக மண்டபத்தையும் யாகம் செய்தவர்களையும் அடித்துக் கொண்டு சென்றது. அரசன் மட்டும் நீந்திக் கரையேறினான்.

## விஸ்வேஸர் சொன்ன வழி

அந்தணர் பலர் இறக்கவும் யாகம் அழியவும் காரணமான விதியை நொந்து கொண்டு காசி விஸ்வேஸ்வரை நோக்கித் தவம் செய்யலானான். வெகு நாட்கள் தவம் செய்தபின் விஸ்வேசர் தோன்றினான். என் யாகம்அழியக் காரணமென்ன என அவரிடம் கேட்டான் மன்னன். அதற்கு இறைவன், ''உனக்கு உயிர் தந்தது பொருநை நதி. அங்கே யாகம் செய்யாமல் அதனை இகழ்வது போலக் கங்கைக் கரையில் யாகம் செய்தாய்,. கங்கைதீரம் மேலானது என்று மதித்தாய். இதனைப் பொறுத்துக் கொள்ளாத கங்காதேவி யாகத்தை அழித்தாள்; நீயும் பாதகனாய் ஆகிவிட்டாய். பாதகம் தீரவும் உன் யாகசாலை கிட்டவும் நீ பொருநை நதிக்கரையில் உள்ள ஆமலக வனம் சென்று (அம்பாசமுத்திரம்) தவம் செய்க என்று கட்டளையிட்டார்.

## ஆமலக வனத்தில் யாகம்

உடனே தாமிரபரணி நதிக்கரையை அடைந்தான் வசுமனஸ். பொருநையை நினைத்துத் தவம் செய்தான்; தேவி அவன்

முன்தோன்றினாள். உன்னை நான் அவமதித்த பின்னாலும் என்னை மன்னித்து என்முன் தோன்றிய தாயே! கருணையின் வடிவம் நீ என்றெல்லாம் புகழ்ந்தான். நிலவுலகில் உள்ள கங்கை முதலான நதிப்பெண்கள் எல்லாரும் பொருநையின் தோழியராய்த் திகழத் தாமிரபரணி காட்சி தந்தாள். அப்போது கங்கை அவனைப் பார்த்து, ''வசுமனா, நீ சிறு குழந்தைகளைப் போலப் பேதமை காரணமாகப் பொருநை தாழ்ந்ததென்றும் நான் உயர்ந்தவளென்றும் மதித்தாய். அதனால் நான் உன் யாகத்தை அழித்தேன். இனிமேல் நான் வேறென்றும் பொருநை வேறென்றும் நினைக்காதே'' என்று சொன்னாள். இதுகேட்ட அரசன் நடுங்கினான். என் பாதகம் அனைத்தும் நீக்க வேண்டுமென வேண்டினான்.

அந்நிலையில் பொருநை அவனைப் பார்த்து, ''இதோ உன் யாக சாலை வந்துவிட்டது; யாகத்தை முடிக்க'' என்றருளினாள். வரங்கள் தந்தாள்; மற்ற நதிகளுடன் மறைந்தாள். அவனும் அங்கு நீராடி யாகம் முடித்து காசிபேசரை வணங்கித் தந்நகரம் அடைந்தான் என்கிறது அம்பைத் தலபுராணம்.

(இந்த வரலாறு அம்பைத்தலபுராணத்தில் 9-ஆவதான சாலாதீர்த்தச் சருக்கத்தில் 70 பாடல்களில் விவரிக்கப்பட்டுள்ளது. தாம்ரபர்ணீ மகாத்மியத்தில் 27,28-ம் அத்தியாயங்களில் இந்த வரலாறு விவரித்துச் சொல்லப்பட்டுள்ளது.)

## (56)

## காஸ்யபர் செய்த சிவத்துதி

காசிப முனிவர் தன் மனைவியான அதிதி தேவியுடன் மலயகுமாரியான தாம்பிரபரணி தேவியைத் துதித்து அவளிடம் மீண்டும் அனுக்ரஹம் பெற வேண்டும் என்று நினைத்தார். பல்வேறு தேவதைகள் மற்றும் முனிவர்களுடன் சேர்ந்து எல்லா வகையான விருப்பங்களை அளிக்கக் கூடியதான ஆங்கிரஸ் என்ற சிறந்த யாகத்தை செய்யக் கருதினார். அவர் மகானாகையால் பரம சிவனையே குருவாக நினைத்து யாகம் செய்யத் தொடங்கினான்.

### யாகத்தில் தோன்றிய ஜோதிலிங்கம்

காசிப முனிவர் தாம்பிரபரணியில் அபமிர்த ஸ்நானம் பண்ணியவுடன் உத்தரவேதியில் அமைந்த மேடையில் (திட்டாணி) ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து தன் விருப்பங்கள் நிறைவேறுவதற்காகத் தியானத்தில் ஆழ்ந்தார்; பல்வேறு திரவியங்களாலும் வேதவாக்கியங்களாலும் சிவனை வழிபாடு செய்தார். இப்படி மூன்று நூற்றாண்டுகள் சிவனை ஆராதித்தார்.

ஒருசமயம் அருட்கடலான இறைவன் அவருடைய ஜோதியால் ஆகாயத்தை ஒளிபெறச் செய்துகொண்டு அந்தச் சிவலிங்கத்திலிருந்து வெளிப்பட்டார். பார்வதி பரமேஸ்வரராகக் காட்சிதந்தார். இதுகண்டு மகிழ்ந்த காசிப முனிவர் அவரைத் துதிக்கலானார். அந்தத் துதி மிகவும் இனிமையான துதியாகும்.

### காசிபர் செய்த சிவஸ்துதி

காசிபர் சிவனை 15 பாடல்களால் துதித்தார். அத்துதிகள் மிகவும் இனிமையானவை. துதித்து முடித்தபின் சிவபெருமானுக்கு அட்டாங்க நமஸ்காரம் புரிந்தார். அப்போது பரமசிவன் அவரைத் தன் இரு திருக்கரங்களால் தடவிக் கொடுத்தார். அவரை நோக்கி, ''விதிப்படி எனக்குப் பூஜை செய்தாய்; முறைப்படித் துதித்தாய்; அமுதத்தால் தேவதைகள் திருப்தியடைவதுபோல உனது பக்தியால் நான் பெரிதும் மகிழ்கிறேன். நான் இவ்விடத்திலேயே வாசம்செய்து வழிபடுவோர் அனைவருக்கும் முக்தியை அளிக்கப் போகிறோம். தாமிரபரணியில் உனது பெயரைத் தாங்கிய காசிப தீர்த்தத்தில் முறைப்படி ஒரேஒருமுறை புனித நீராடி என்னைத் தரிசிப்பவர்களுக்குப் பிறப்பு, இறப்பு முதலான பந்தங்கள் இல்லை. நமது திருமுன்னிலையில் நீ அருளிய ஸ்தோத்திரத்தைக் காலையும் மாலையும் பாராயணம் செய்வோர் நான்கு புருஷார்த்தங்களையும் அடைவர். நீ அடுத்து வருவதான கல்ப காலத்தில் அமையும் ரதந்தர மனுவின் அதிகாரத்தில் என்னுடைய கலை பொருந்திய கபில முனியாக உற்பவிக்கக் கடவது. அப்போது அனைவரும் உன்னைச் சரணடைவர்; அவர்களுக்குச் சாங்கிய யோகத்தை உபதேசம் பண்ணி நிலைபெற்றிருக்கக் கூடிய என்னைத் தடையின்றி அடைவாய். ஐந்து குரோசம் வியாபித்திருப்பதும் முக்தி முத்திரையாக இருப்பதுமான காசி இவ்விடத்துக்கு அதன் மகத்துவத்துடன் கொண்டுவரப் பட்டிருக்கிறது. எனவே நீ இங்கிருந்து என்னைப் பூஜிப்பாயாக'' என்று கூறித் தன் லிங்கத்தில் மறைந்தார் என்கிறது ஸ்ரீ தாம்ரபர்ணீ மகாத்மியம். இவர் நீராடிய துறை காசிப தீர்த்தமாகும்.

## (57)

## சிவதர்மன் வரலாறு

காசிபருக்கு அருளிய சிவபெருமான் அதன்பின் அந்தச் சந்நிதானத்தில் காசிபரைக் குருவாக ஏற்ற சிவதர்மன் என்பவனுக்கு அருளிய வரலாறு அத்.29-ல் பிற்பகுதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

## வானில் கண்ட அதிசயம்

காசிபரை வணங்கிய சிவதர்மன் முன்னொரு காலத்தில் சாங்க்ருதன் என்ற முனிவருக்குச் சிவதர்மன் என்றொரு மகனிருந்தான். இவன் நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் முற்றும் கற்றவனாவான். சிற்றின்பத்தில் வெறுப்புக்கொண்ட இவன் பேரின்ப நாட்டத்துடன் தீர்த்த யாத்திரைகள் தல யாத்திரைகள் மேற்கொண்டான்.

அவன் தன் யாத்திரையில் மலய மலைக்கு வந்தான். தாமிரபரணியில் முறைப்படி நீராடினான். தாமிரபரணி கரையோரம் நடந்து செல்லும்போது அதன் அழகிலும் தெய்வாம்சத்திலும் ஈடுபாடு காட்டினான்; மகாநதியைக் கொண்டாடினான்; அகஸ்திய கூடத்துக்குச் சென்று கும்ப முனிவரையும் அவர் தேவியையும் வணங்கினான். அவரிடம் விடைபெற்றுப் பாபவிநாசத்தைத் தரிசித்தான்; அங்கு ஓர் இரவு தங்கினான்.

மறுநாள் காலை உதய காலத்தில் தாமிரபரணியில் புனித நீராடும் எண்ணத்துடன் சிறிது தூரம் நடந்தான். அப்போது அவன் காதுகளில் இன்ப நாதம் கேட்டது. நாதம் வந்த திசையைப் பார்த்தான்; அங்கே விமானங்களில் பலரும் சென்று கொண்டிருப்பதைக் கண்டான்.

## காசிப முனிவரைச் சந்தித்தல்

கிழக்குத் திசைநோக்கிப் பலரும் விமானங்களில் செல்வது கண்டு அதிசயித்தான் சிவதர்மன். சீடருடன் விரைவாகப் புனித நீராடி விமானம் சென்ற கிழக்குத் திசைநோக்கி நடக்கலானான். வெகுதூரம் நடந்தான். நண்பகல் நேரம் வந்தது. அந்த நேரத்தில் ஒன்றுக்கொன்று பகையில்லாத மிருகங்களாலும் பறவைகளாலும் சித்தர்களாலும் நான்கு புறமும் சூழப்பட்ட காட்டில் காசிப முனிவர் ஆசிரமம் இருப்பதைப் பார்த்தான். ஆசிரமத்தில் நுழைந்து அதிதி தேவியுடன் அக்னி கோத்திரம் பண்ணிக் கொண்டிருந்த காசிப முனிவரைக் கண்டு கைகூப்பினான். தன்பெயரைக் கூறி வந்தனம் செய்து கொண்டான்.

## முனிவர் அருளுதல்

தன்னை வணங்கிய சிவதர்மனை இருக்கையில் அமரச் சொன்னார் பெரியோர்கள் அறுவகைப் பகைகளை வென்று புலனடக்கிக் கர்ம பலன்களில் விருப்பம் கொள்ளாமல் உலக நன்மைக்காகச் சஞ் சாரம் செய்து வருகிறார்கள்,. அப்படிப்பட்டவர்களில் ஒருவரான நீ என் மதிப்புக்கும் அதிதி பூஜைக்கும் யோக்கியனாக இருக்கிறாய். ஆகையால் சீடர்களுடன் வந்திருக்கும் உனக்கு நான் அதிதி பூஜையை அளிக்கிறேன்.

சந்தன மணம் தாங்கிய புண்ணிய நதியான தாமிரபரணி தீர்த்தத்தில் நீராடித் தர்ப்பணம் பண்ணி தீப தீர்த்தத்தில் அதிதியின குண்டத்திலும் ஸ்நானம் செய்து காசிபேசனை வணங்கி விரைவாக இவ்விடத்துக்கு வருக. நண்பகல் வந்துவிட்டது. எனவே விரைவாக வருக' என்றார் கசாசிபர்.

இதுகேட்ட சிவதர்மன் தான் முறைப்படித் தாமிரபரணியில் நீராடியதாகவும் எனினும் அவர் உத்தரவுப்படி மீண்டும் ஈபுனித நீராடி வருவதாகச் சொல்லி அவ்வாறே செய்தான். பின் காசிப முனிவர் ஆசிரமம் அடைந்து விருந்துண்டான்.

அதன்பின் அவன் காசிப முனிவர் இருந்த இடத்துக்குச் சென் றான். காலையில் தான் அநேக புருஷர்களும் பெண்களும் ஆடை ஆபரணங்களை அணிந்து மாலை சூடி கிழக்குத் திசைநோக்கிச் சென்றதையும் மதுரமான பாடல்களால் திசைகள் இனிமை பெற்றதையும் பற்றிச் சொல்லி அவர்கள் யார்? என விவரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அதற்கு அவர் கூறிய விடையை 30-ஆவது அத்தியாயம் விளக்கியுள்ளது.

## (58)

## தீப தீர்த்த மகிமை

தீப தீர்த்தத்தின் மகிமையையும் பிரமோதன் என்பவனுடைய வரலாற்றையும் காசிபர் விளக்கியதாகத் தாமிரபரணி மகாத்மியம் 30-ஆம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ளது.

### துக்கமடைந்த பிரமோதன்

பாண்டிய நாட்டின் வடக்குப் பக்கத்தில் வேணுவதி தீரத்தில் களபம் என்றொரு கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தில் இருந்த அந்தணர்கள் எல்லாரும் தனவான்களாகத் திகழ்ந்தவர்கள். வேத அத்யயனம் செய்தவர்கள்; யாகம் செய்வதில் விருப்பமுள்ளவர்கள்; சிவபக்தி கொண்டவர்கள்.

அவர்களில் ஒருவனான பிரமோதன் என்பவன் வாத்ஸ்யாயன வம்சத்தில் பிறந்தவன்; நான்மறை ஆறங்கம் வல்லவன். முறைப்படி யோகங்களைச் செய்தவன். அவனுடைய தகப்பன் காலமானபின் அவன் தன் சகோதரனோடு சண்டையிட்டுச் சொத்துக்களைப் பிரித்துக் கொண்டு வேறொரு இடத்தில் குடியிருந்தான்.

ஆண்டுகள் கடந்தன; அவன் மகன் இறந்தான்; மனைவியும் பேரன் பேத்திகளும் காலமாயினர். ஒரே மாத காலத்தில் அத்தனைப்பேரும் காலமாகவே பிரமோதன் சகிக்க முடியாத துன்பத்தை அடைந்தான். எனக்கு ஏன் இப்படிப்பட்ட துன்பம் ஏற்பட்டது? காதுகள் இருந்தும் குண்டலம் அணியமுடியாததைப் போலக் கார்கஸ்த்யம் முதலான கடமைகளை நான் எப்படிச் செய்வேன்? என்றெல்லாம் தவித்தான்.

செல்வத்தை அடைய வேண்டி மூடனைப்போல என் சகோதரனை வஞ்சித்தேன், அதன் காரணமாகவே இத்துன்பம் வந்தது என்பதை உணர்ந்தான். இனிமேலாவது தந்தை சம்பாதித்துத் தந்த சொத்தைச் சகோதரனுக்குக் கொடுத்துவிட்டுத் தீர்த்த யாத்திரை செல்ல வேண்டும் என்ற முடிவெடுத்தான்.

### சந்நியாசி காட்டிய வழி

ஒரு குடம் நிறையப் பணத்தை எடுத்துக் கொண்டு சகோதரனிடம் அதனைத் தந்து சமாதானப்படுத்தினான். அதன்பின்னால் பிரமோதன் மூங்கிலால் ஊன்றுகோல் ஒன்றைச் செய்தான். அதனுள் ரத்தினங்களைச் செலுத்தினான்; திருகிட்டான்; இரும்புப்பிடி வைத்தான். அந்தத் தடியுடன் தீர்த்த யாத்திரைக்காகப் புறப்பட்டான்.

அவன் சகோதரர்களும் உறவினர்களும் தடுத்தபோதும் மறுத்துவிட்டு ஓரிரண்டு மைல் தூரம் சென்றான். முதுமை காரணமாக உடல் களைப்படைந்தது; ஒரு மரத்தடியில் அமர்ந்தான். அப்போது அங்கே ஒரு சந்நியாசி வந்தார். பிரமோதனைப் பார்த்துத் தாங்கள் எங்குச் செல்கிறீர்கள்? இவ்வளவு களைத்த தாங்கள் எவ்வளவுவழி செல்ல வேண்டும் என்றெல்லாம் கேட்டார். அதற்கு அவன் கூறிய மறுமொழியைக் கேட்டபின் அவர் மறுபடியும் பிரமோதனைப் பார்த்து

பலசாலிதான் இளமைக்காலத்திலேயே தீர்த்த யாத்திரை செய்ய வேண்டும், நீ உன் எண்ணத்தைக் கைவிட்டு வீடுதிரும்பு என்றார். அப்படித் திரும்ப மனமில்லாமல் காசிக்குத்தான் போகவேண்டும் என்ற உறுதியிருக்குமானால் அதற்கு நான் ஒரு சுலபமான வழி சொல்கிறேன். தென்திசை சிறந்த புண்ணியம் செய்திருக்கிறது. அங்கே கும்பசம்பவ முனிவர் இருக்கிறார்; அவருடைய திருவடிகளை என்னால் தரிசிக்க முடிந்தது. எனக் கூறிய அந்தச் சந்நியாசி அகத்தியர் பெருமைகளை விவரித்தார்; அவரை விரைவாகச் சரணடைவாய் என்று சொன்னார். ஒரு மந்திரத்தையும் உபதேசித்தார். தாமிரபரணி நதியை அடையுமாறு அறிவுறுத்தினார்.

## தடியை ஒப்படைத்தல்

அதன்பின் பிரமோதன் மிகவிரைவாக நடந்தான். (அம்பை யிலிருந்த) காசிப தீர்த்தத்தை அடைந்தான்; முறைப்படி நீராடினான். அதன்பின் அருகிலிருந்த காசிபேஸ்வரர் கோயிலுக்குச் சென்றான். அங்கே ஒரு சிவபக்தனைப் பார்த்தான்; அந்த சிவபக்தனிடம் நட்புரிமை கொண்டான். அவனை நோக்கி நான் உன்னை நம்புகிறேன்; நான் அகத்திய மனிவரைத் தரிசிக்கச் செல்கிறேன்; திரும்பி வரும்வரை உயிருக்குயிரான இந்தத் தடியை கவனத்துடன் காப்பாற்றி நான் திரும்ப வந்து கேட்கும்போது தரவேண்டும் என்று சொல்லித் தடியை ஒப்படைத்தான்.

## அகத்தியரைத் தரிசித்தல்

பிரமோதன் சிவப்பிராமணனிடத்தில் தடியை அடைக்கலப் படுத்தியபின் மலயபர்வதம் நோக்கி விரைந்தான். கல்யாண தீர்த் தத்தில் அமர்ந்தான்; மனதை அடக்கினான்; அகத்திய முனிவரைத் தியானம்பண்ணிச் சந்நியாசி உபதேசித்த மந்திரத்தை ஜபம் பண்ண லானான்.

ஊனும் உறக்கமும் இல்லாமல் மூன்று நாட்கள் காற்றில்லாத இடத்தில் இருக்கிற விளக்குப்போல அசைவில்லாமல் நியமத்துடன் தியானம் பண்ணினான்.அவன் முன்னால் அகத்திய முனிவர் தோன்றினார்.

அவர் பிரமோதனை நோக்கி உன் ஜபத்தால் மகிழ்வடைந்தேன்; கற்பக விருட்சத்தைப் போல நீ வேண்டியதையெல்லாம் நான் கொடுப்பேன். நீ ஜபித்த மந்திரத்தை மறைத்துக் காப்பாற்றுக; பக்தியுள்ளவர்களுக்கும் சாதுக்களுக்கும் ஏழைகளுக்கும் மட்டும் உபதேசிக்கலாம் மற்றவருக்குக் கூடாது என்றார் அகத்தியர்.

அதன்பின் அவனிடம் உனக்கு என்ன வரம் வேண்டுமென்று கேட்டார்? நான் எல்லா நாட்களிலும் ஸ்ரீ தாம்பிரபரணி தீரத்தில் வசிக்க வேண்டும். ஒரே ஒருமுறை மட்டும் காசி க்ஷேத்திரத்தை தரிசனம் பண்ண விரும்புகிறேன். அது அடியேனுக்குக் கிடைக்க வேண்டும். முதுமை அடைந்த எனக்குத் தங்களைத் தவிர வேறு கதியில்லை என்றான்.

## காசி சென்று திரும்புதல்

அகத்தியர் அவன் விருப்பத்தை நிறைவேற்ற முடிவெடுத்தார்; அவன் கையில் ஒரு தீபத்தைக் கொடுத்தார்; கல்யாண தீர்த்தத்தில் மூழ்குமாறு சொன்னார். அவனும் அப்படியே செய்தான். அகத்திய

முனிவரின் அனுக்கிரகத்தால் ஒரே நொடியில் காசியில் கங்கையில் உள்ள கட்டங்களில் ஒன்றான மணிகர்ணிகை என்ற கட்டத்தில் விளக்கோடு எழுந்தான்.

மணிகர்ணிகா கட்டத்தில் பிரமோதன் விதிப்படி நீராடினான்; க்ஷேத்திரக் காவலாளியான டுண்டீசனையும் தண்டதரனையும் வணங்கினான். பின் விஸ்வேஸ்வரரையும் அன்னபூரணியையும் பைரவரையும் வழிபட்டான்.

தரிசனம் முடித்தபின் உணவருந்திய அவன் மறுபடியும் தாமிரபரணிக்குத் திரும்ப நினைத்தான்; மணிகர்ணிகா கட்டத்துக்கு வந்தான்; அப்போது ஓர் அழகிய இளைஞன் யுவதியோடு வருதலைப் பார்த்தான். அந்த இளைஞன் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்த பிரமோதரனைக் கண்டான்; அவனைத் தன் அருகில் அழைத்தான்; ''உன் விருப்பமென்ன?'' என்று கேட்டான்.

வாலிபன் வினவியவுடன் ''வயது முதிர்ந்த நான் அகத்திய முனிவர் அருளால் காசியை அடைந்தேன், இனி நான் தாமிரபரணிக் கரைக்குச் செல்ல வேண்டும்'' என்று சொன்னான்.

பிரமோதன் வழிகேட்கவே அந்தத் தம்பதிகள் மீண்டும் ஓர் தீபத்தை அவனிடம் தந்தார்கள்; கையில் பிடித்தபடி கங்கையில் மூழ்கச் சொன்னார்கள்; அவனும் அப்படியே செய்தான். மறுகணம் அவன் தாமிரபரணியில் ஓரிடத்தில் எழுந்தான்; அப்போது அவன் பதினாறு வயதுடைய இளைஞனாக அழகிய உருவத்துடன் வெளிப்பட்டான். அதன்பின் அந்தத் தீர்த்தம் தீபதீர்த்தம் என்று சொல்லப்பட்டது.

## (59)

## முனிவன் சொன்ன மந்திரம்

சிவதர்மன் காசிப முனிவரிடம் பிரமோதனுக்கு ஒரு முனிவர் ஒரு மந்திரத்தை உபதேசித்தார், அந்த மந்திரத்தின் மகிமையால் அவன் அகத்தியரைத் தரிசித்தான் என்று சொன்னீர்களே. அந்த மந்திரம் என்ன? என்று கேட்டான். அதற்குரிய விடை தாம்ரபரணீ மகாத்மியத்தில் 31-ஆம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ளது. அந்த விவரம் வருமாறு:

### தியானம்

அகத்தியரைத் தரிசிப்பதற்காக முனிவர் சொன்ன மந்திரம் மிகவும் சக்தி படைத்ததாகும். அது மிகவும் மந்தணத்துக்குரியதாகும். உரியவர்களுக்கு மட்டுமே உபதேசிக்க தக்கதாகும். வேதவன்மை

இல்லாதவர்களுக்கும் பாவிகளுக்கும் வேதமார்க்க விரோதிகளுக்கும் ஸ்தோத்திர ரூபமான இந்த மந்திரத்தைச் சொல்லக்கூடாது. இந்த மந்திரத்தைத் தெரிந்து கொண்டால் அஷ்ட ஐஸ்வர்யங்களும் தாமே வந்துசேரும்.

இந்த மந்திரத்துக்கு இந்திரன் ரிஷி, அனுஷ்டுப் சந்தஸ், கடோத்பவன் (அகத்தியர்) தேவதை. எல்லாவிதமான விருப்பங்களையும் அடைய இந்த ஜபம் உதவி செய்யக்கூடியதாகும்.

## தியானம்

*பாடீர சைல கோடீர மணிபீடாய வேதஸே*

*முனையே கும்ப ஜாயோத்யத் அநுகம் பாப்தயே நம:*

*லோபா முத்ரா ஸமாயுக்தம் மகாயோகா ஸனேஸ்திதம்*

*ப்ரஸன்னம் தபஸாம் ராசிம் ப்ரணாம: கும்பஸம்பவம்*

## மந்திர ஜபம்

மேலே சொன்ன மந்திரத்தைச் சொல்லி வணங்கி அதன்பின் நாமாவளி ரூபமாக அமைந்த மந்திரத்தை ஜபம் செய்ய வேண்டும். இந்த ஜபம் பின்வருமாறு:

*அகஸ்த்ய: கும்ப ஸம்பூதோ மைத்ராவருணி ரப்திப:*

*லோபாமுத்ரா பதி: ஸ்ரீமான் வாதாபீல் வல பக்ஷண:*

*விந்த்யாத்ரிமதனோ யோகீ மஹாமலய கேதன:*

*தீர்வதீர்த்தாத்மகபத: ஸர்வாபீஷ்ட பலப்ரத:*

*லோபா முத்ராஸ மாச்லேஷ ஹர்ஷ ரோமாஞ்ச மூர்த்திமான்*

## மந்திரத்தின் பெருமை

அகத்திய முனிவருடைய இந்தப் பன்னிரண்டு திருநாமங்களை ஜபிப்பவர்கள் மற்றும் கேட்பவர்கள் மகா புண்ணியசாலியாகின்றனர். இவர்களுடைய எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்காக அகத்தியர் தம் கையை உயர்த்தி அபயம் தந்து கொண்டிருக்கிறார். கீர்த்தி, தனம், ஆயுள், அறிவு, போகங்கள் மற்றும் முக்தியைக் கொடுப்பதாய் நாமாவளி மந்திரமாய் இருக்கும் இந்த மகாமந்திரத்தை ஜபம் பண்ணுவர்களுடைய உள்ளங்கையில் தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்ற நான்கும் விளங்குகின்றன என்கிறது மகாத்மியம்.

## வந்தனம் தருதல்

மேற்படி மந்திர ஜபத்தைச் செய்தபின் ஒரு சுலோகம் சொல்லி அகத்தியரை வந்தனம் பண்ண வேண்டும். அது பின்வருமாறு:

***விமலா ஹ்ருதய முச்சைர்வேத வேதாந்த வேத்யம்***

***விதிமுகஸுரபூஜ்யம் பூதி ருத்ராக்ஷ பூஷம்***

***முனிவர மமலாம்பா தர்ம பத்ந்யாப் தபாகம்***

***கலச ஜமபிராமம் நௌமி காருண்ய மூர்த்திம்***

இவ்வாறு பரம ரகசியமாக இருக்கக்கூடிய இந்த மந்திரத்தைச் சந்நியாசியிடம் உபதேசம் பெற்ற பிரமோதன் எல்லாச் செ ல்வங்களையும் அடைந்து தர்மசிந்தனையுடையவனாக வாழ்ந்தான் என்கிறது மகாத்மியம்.

## இன்னும் ஒரு மந்திரம்

அகத்திய முனிவரை நேரில் தரிசிக்க வேண்டும் அவர் தயவைப் பெறவேண்டும் என்றால் ஜபிக்க வேண்டிய மந்திரம் ஒன்று உண்டு என்று சிவதர்மனுக்கு காசிபர் கூறிய செய்தி 31-ஆம் அத்யாயத்தில் 19-ம் சுலோகத்தில் சொல்லப்பட்டுள்ளது.

*சந்தநாத் ரிஸமத்பூதே தன்யே சங்கர லாலிதே*

*த்வயி ஸ்நாஸ்யே ஸுப்ரஸன்னபாஹிமாம் பவ ஸாகராத்*

என்ற மந்திரத்தைச் சொல்லி ஜபம் செய்து தாம்பிரபரணியில் புனித நீராட வேண்டும். அதன்பின் பித்ருக்களுக்கும் தேவதைகளும் தர்ப்பணம் தரவேண்டும். தொப்புள் வரை மூழ்கும்படியான தண்ணீரில் நின்று கொண்டு இந்திரியங்களை அடக்கி முன்னே சொன்ன மகாமந்திரத்தை மூன்று தரம் வீதம் ஆறு மாத காலம் ஜபம் பண்ணினால் அகத்திய முனிவர் அருள் நிச்சயம் கிடைக்கும் என்றார் காசிப முனிவர் என்கிறது மகாத்மியம்.

இதனையடுத்துப் பிரமோதனுக்காகச் சிவபெருமான் வெளிப்பட்ட வரலாறு அறிதற்குரிய வரலாறாகும்.

## (60)

## எரிச்சாளுடையார் வரலாறு

காசிபேசுவரத்திலிருந்த சிவபிராமணனிடம் கைத்தடியை ஒப்படைத்து அகத்தியரைத் தரிசிக்கச் சென்றான் பிரோமதன். அவரைத் தரிசித்தபின் அவர் அருளால் காசியை அடைந்தான்; காசியைத் தரிசித்தபின் தாமிரபரணி நதி தீரத்தில் அம்பாசமுத்திரத்துக்கு அருகிலுள்ள தீபதீர்த்தத் துறையில் எழுந்தான். எழும்போது முதுமை நீங்கி இளைஞனாக எழுந்திருந்தான்.

## மறுத்தான் சிவப்பிராமணன்

தீபத்துடன் நீரிலிருந்து எழுந்த ஒளிபொருந்திய இளைஞனைக் கண்டவர் அனைவரும் ஆச்சரியமடைந்தனர். நடந்த நிகழ்வுகளை அவர்களுக்குப் பிரமோதன் விளக்கினான்; பின் மாத்யானிகக் கடமைகளைச் செய்து முன்பு தான் சிவபிராமணனிடம் அளித்த தண்டத்தைக் கேட்பதற்காக ஆலயத்தை அடைந்தான்.

அவனிடத்திலிருந்து தண்டத்தை அடைக்கலமாகப் பெற்றுக் கொண்ட சிவபிராமணன் மறுத்துப் பேசினான். பலவிதமாகப் பிரமோதன் கெஞ்சிக் கூத்தாடியும்கூட வஞ்சகனான அவன் தடியைக் கொடுக்க மறுத்துக் கோபமாகப் பேசலானான்.

நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? என்றெல்லாம் அவனை அறியாதவன் போலக் கோபமாகப் பேசினான்; அதன்பின் உன்னுடன் எனக்குச் சிநேகம் என்பது இருளும் வெளிச்சமும் ஸ்நேகம் பண்ணிற்று என்பது போல நம்பக்கூடியதாக இல்லை என்றான்.

அதன்பின்னாலும் பிரமோதன் அவனைச் சமாதானப்படுத்தினான். நான் உன்னிடம் தடியைக் கொடுத்தபோது கிழவனாக இருந்தேன்; சிவனுடைய அனுக்ரகம் பெற்றால் கிழவனும் இளைஞனாகி விடுவான்; என் வகையில் அப்படி நேர்ந்துவிட்டது; நவரத்தினங்கள் நிரப்பப்பட்டதும் முன்னால் உன்னிடத்தில் அடைக்கலமாகத் தரப்பட்டதுமான என்னுடைய மூங்கில் தடியைத் திருப்பிக் கொடு என்றான். சிநேகிதனை ஏமாற்றுபவனுக்கு வேதங்களிலும் தர்மசாஸ்திரங்களிலும் பிராயசித்தம் கூறப்படவில்லை. நீ மித்ரத் துரோகத்துக்கு ஆளாக வேண்டாம் என்றெல்லாம் கூறினான்.

## வஞ்சகம் வெளிப்படுதல்

பேராசை கொண்ட வஞ்சகனான சிவப்பிராமணன் உன்னை நான் பார்த்ததே கிடையாது. ஆனால் நீ பேசியதாகச் சொல்கிறாய் எல்லாப் பொருள்களிலும் வியாபித்துச் சகல சாட்சியாக இருக்கிற சிவபெருமான் இவ்விடத்திலும் சாட்சியாக இருக்கிறார். சிவனைச் சாட்சியாக வைத்துச் சிவசந்நிதானத்தில் பிராமணம் செய்து கொடுப்பதில் எனக்கு ஆட்சேபனை இல்லை. இதுதொடர்பாகச் சிவன் தீர்ப்புக் கொடுப்பார் என்றான் சிவபிராமணன். அதனைக் கேட்ட எல்லாரும் நன்று நன்று என ஒப்புக் கொண்டார்கள். மறுநாள் காலை சிவ சந்நிதானத்தில் பிரமாணம்செய்ய முடிவெடுக்கப்பட்டது.

இரவுப் பொழுது வந்தது. வஞ்சக எண்ணம் படைத்த சிவ பிராமணன் காசிபேசர் சந்நிதானத்துக்குச் சென்றான்; முறைப்படி

பூஜித்தான்; அவன் பூஜைக்கு மகிழ்ந்தார் சிவபெருமான். சிவப் பிராமணன் அவரைத் தண்ணீர்க் குடம் ஒன்றில் ஆவாஹனம் செய்தான். நான் பிரமாணம் செய்யும்வரை குடத்தில் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அவரும் அவ்வாறே செய்வதாக ஒப்புக்கொண்டார். அவரை ஆவாஹனம் செய்யக் குடத்தை எதிரிலிருந்த புளியமரம் ஒன்றின் அடியில் புதைத்தான்; வீட்டுக்குச் சென்று உறங்கலானான்.

பிரமோதன் பேரில் அன்புகொண்ட காசிபேஸ்வரர் அவர் கனவில் தோன்றினார். பக்தனே! உன் செல்வம் உனக்குக் கிடைக்கும்; எனது க்ஷேத்திரத்தில் என் முன்னிலையில் நாளை பிரமாணம் பண்ணக்கூடாது; ஒப்புக் கொள்ளவும் கூடாது. ஆனால் புளிய மரத்தின் அடியிலிருந்து பிரமாணம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ள வேண்டும். அங்கேயே நான் வாசம் பண்ணுவேன். மரத்தின் அடியில் இருக்கிற தண்ணீர்க் குடத்தைப் பார்த்த நிமிடத்திலேயே அவன் தண்டனை அடைவான் என்று சொன்னார்.

## எரித்தாட்கொண்டார்

பொழுது புலர்ந்தது; சபையோர் கோயிலில் கூடினர். அப்போது அங்குவந்த வஞ்ச நெஞ்சம் படைத்த சிவபிராமணன் நான் பிரமாணம் செய்து தருகிறேன் என்று சொன்னான். அப்போது பிரமோதன் இறைவனுடைய சந்நிதானத்தில் உண்மை சொல்லுகிற பிராமணனும் அதைப் பார்ப்பவனும் அதற்கு மத்தியஸ்தம் செய்பவனும் ரௌரம் என்ற நரகத்திற்குச் செல்ல வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. எனவே தெய்வ சந்நிதானத்தில் சத்தியம் செய்ய வேண்டாம்; பக்கத்திலிருக்கிற இந்தப் புளியமரத்தின் கீழ் நீ சத்தியம் செய். நான் அதனைப் பார்க்க வேண்டும். அல்லது நான் சத்தியம் செய்கிறேன் அதை நீ பார்க்க வேண்டும் என்றான்.

கடவுள் எங்கும் நிறைந்திருப்பவர் இந்த புளியமரத்தின் கீழ் அவர் இல்லாமல் போகமாட்டார்.எனவே இங்குச் சத்தியம் செய் எனப் பிரமோதன் வலியுறுத்தவே சபையோரும் வழிமொழிந்தனர்.

சிவபிராமணன் தர்மசங்கடத்துக்கு ஆளானான். புளியமரத்தின் கீழ் உண்மை கூறுவதில் அவனுக்கு விருப்பமில்லை என்றாலும் எல்லாரும் வற்புறுத்துவதால் மறுக்கவும் முடியவில்லை. அவன் நவரத்தினங்கள் நிறைந்த தடி என்னிடத்தில் கொடுக்கப்படவில்லை; நான் அதைப் பெற்றதும் இல்லை என்பதில் சாட்சியாக இந்த மகாதேவர் இருக்கிறார், என்று சொன்னான்.

அப்படிச் சொன்ன மாத்திரத்திலேயே புளிய மரப் பொந்திலிருந்து ஜுவாலைகள் உடைய காட்டுத்தீக் கிளம்பியது. அந்த நொடியில் அந்த மரம் எரிந்தது; அந்தத் தீயால் வஞ்சகனான சிவப்பிராமணனும் அழிந்தான்.

### தோன்றியது லிங்கம்

அந்த தீயின் மத்தியிலிருந்து சிவபெருமான் லிங்க ரூபியாகத் தோன்றினார். மங்கள வாத்தியங்கள் முழங்கின.; பூமாரி பொழிந்தது; பிரமோதன் கைகூட்டி அந்த லிங்கத்தைத் தொழுதான். அவரைத் துதிகளால் வணங்கினான். தேவர்களுக்கு இடைவிடாமல் அருள்புரிகிற கடவுள் நீ ஆதலால் உன்னைத்தவிர மற்றொரு தெய்வத்தை நான் பற்றாகக் கொள்ளமாட்டேன் என்றெல்லாம் பலவாறாகத் துதித்தான். அவனுடைய ஸ்தோத்திரம் கண்டு மகிழ்ந்தார். பின்னர் அவன் எனக்கு வரம் கொடுக்கப்படுமானால் இறந்த பிராமணன் உயிர் பெறவேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அவரும் அவ்வாறே செய்தார்.

வஞ்சகன் தன்னிடம் கொடுக்கப்பட்டிருந்த தடியைப் பிரமோதனிடத்தில் தந்தான். பிரமோதன் சிவக்கிருபையால் அங்கே திருமணம் செய்து கொண்டு வாழ்ந்தான்; என்றெல்லாம்30-வது அத்தியாயமான தீப தீர்த்த மகிமை விளக்கப்பட்டுள்ளன.

## (61)

## கஜேந்திர மோட்சம்

வீரசேன மகாராஜன் வேண்டிக் கொண்டபடி ஸ்ரீஹரியினுடைய கருணையும் மேன்மையும் பொருந்திய கஜேந்திர மோட்ச வரலாறு ஸ்ரீ வேத வியாசரால் சுகப்பிரம்ம ரிஷிக்குக் கூறப்பட்டதென்றும் இவ்வாறு கலியால் உண்டாகிற துன்பம் என்னும் வியாதிக்குச் சிறந்த ஔஷதமென்றும் விவரிக்கும் தாம்ப்ரபர்ணீ மகாத்மியத்தில் 32-வது அத்தியாயம் கஜேந்திர மோட்சம் என்ற பெயரால் அமைந்துள்ளது. அதில் சொல்லப்பட்டுள்ள வரலாறு வருமாறு:

### இந்திரத்யும்னனின் தீர்த்த யாத்திரை

முன்னொரு காலத்தில் பாண்டிய நாட்டை இந்திரத்யும்னன் என்பவன் ஆண்டுவந்தான். இவன் கீர்த்திமான்; குபேரனை ஒத்த செல்வந்தன்; 64 கலைகளில் வல்லவன்; திருமகள் உறைவிடம்; நீதி தவறாத அவனாட்சியால் தர்மதேவதை நான்கு பாதங்களையும் பூமியில் பதித்து நடந்தது; அவன் அநேக வாஜபேயங்களையும்

ராஜசூயயாகங்களையும் அஸ்வமேத யாகங்களையும் அடிக்கடிச் செய்து தன்னைப் பரிசுத்தனாக்கிக் கொண்டவன்; 12 ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்தவன்.

வயது முதிர்ந்தபின் தன் நாட்டினை மணிவர்மன் என்பவனிடம் ஒப்படைத்தான்; தீர்த்த யாத்திரை செல்ல விருப்பம் கொண்டான்; மணலூரிலிருந்து புறப்பட்ட அவன் தாமிரபரணியின் இரு கரைகளிலும் உள்ள எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தான்.

## பத்ம தீர்த்தத்தில் பூஜை

தாமிரபரணியில் உள்ள நதித்துறைகளில் நாராயணனுக்குச் சந்தோஷத்தை விளைவிப்பது பத்மதீர்த்தம் என்னும் துறையாகும். கஜேந்திரவரதர் என்று திருநாமத்துக்குரியவரான திருமாலுக்குப் பிரியமான துறை இது. இது மாமரத்தோப்பிலிருக்கும் துறை. இந்த பத்மதீர்த்தத்தில் அரசன் ஸ்நானம் செய்தான்; ரிஷிகளுக்கும் தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் தர்ப்பணம் தந்தான்; சாஸ்திர முறைப்படித் தீர்த்த சிரார்த்தம், க்ஷேத்ர பிண்டம் அளித்தான்; புரோகிதரை முன்னிறுத்தித் தக்கவர்க்குப் பல்வேறு தானங்களைச் செய்தான்.

பின் உச்சிக்காலம் முடித்தான். நாராயணரை விரிவாகப் பூஜிக்கலானான். ஸ்தோத்திரங்களைச் சொன்னான். அந்த நேரத்தில் அங்கே விரைந்துவந்தார் அகத்தியர். அப்போது அகத்தியரை மன்னனின் புரோகிதரான தாந்தன் என்பவர் தடுத்தார்; அரசர் ஓரிரு நிமிடங்களில் தங்கள் திருவடிகளைச் சேவிக்க இங்கு வந்துவிடுவார்; அவர் ஹரிக்குப் பூஜை செய்து கொண்டிருக்கிறார்; அவர் வரும்வரை தேவரீர் இந்த இருக்கையில் அமரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

## அகத்தியர் சாபமும் விமோசனமும்

அகத்தியர் ராஜபுரோகிதரான தாந்தனின் வார்த்தைகளைப் பொருட்படுத்தவில்லை. அரசன் இருந்த இடம்நோக்கிச் சென்றார். அப்போது அரசன் ஹரி பூஜையில் கவனமாக இருந்தபடியினால் அகத்தியரைக் கண்டும் எழவில்லை. விக்னம் நேரிடக்கூடாது என்பதிலேயே குறியாகயிருந்தான். இதுகண்ட அகத்தியர் கோபம் கொண்டார்.

நான் காடு மேடுகளைக் கடந்து நடந்து வந்திருக்கிறேன்; இப்படிக் களைத்து வந்திருக்கும் என்னை வரவேற்காமல் இருந்துவிட்டாய்; என்னை ஆதரிக்காமல் இருந்ததற்காக நீ யானையாகக் கடவாய் என்று சபித்தார்.

அரசன் விரைந்து பூஜையை முடித்தான்; பயந்து நடுங்கி அகத்தியர் முன் வந்தான்; நான் எந்த ஒரு குற்றமும் செய்யாத நிலையில் இப்படிக் கொடுமையான சாபம் கொடுத்துவிட்டீர்களே? எனக்கு விதிவசத்தால் இந்தச் சாபம் நேரிட்டதாகக் கருதுகிறேன்.இவ்வளவு ஆண்டுகளாக என்னை நேசமாகக் காத்துவிட்டு இப்போது துக்கக் கடலில் தள்ளிவிட்டீர்களே? நான் செய்யாததைச் செய்திருந்தாலும் தேவரீர் பொறுத்தல்லவா இருக்க வேண்டும் என்றெல்லாம் கலங்கினான்; புலம்பினான்; அடியேனைக் காக்க வேண்டும் என மன்றாடினான்.

மன்னனின் துன்பம்கண்ட அகத்தியர் மனமிரங்கினார். உனக்கு யானை ஜென்மம் கிடைத்தாலும் திரிகால ஞானமுள்ளவனாய் இருப்பாய்; உன் ஹரி பக்தி இன்னும் மேலிடும்; உன்னுடைய நன்மைக்குப் பயன்படும்; நீ திருமாலின் பாதகமலங்களை மறவாமால் இருப்பாயாகுக; நீ மும்மலமற்றுச் சுகமாக வாழ்வாய் ஆகுக; உனக்கு திருமாலின் அருளால் சாபவிமோசனம் கிடைக்கும் என்று சொல்லி அகத்தியர் மறைந்தார்.

## பஞ்சம் வந்தது

அகத்தியர்சாபத்தால் இந்திரத்யும்ன மகாராஜன் பத்தாயிரம் யானை பலத்தோடு கூடிய பெரிய யானையாகக் காட்டில் வாழ்ந்தான். காட்டு யானைகளுக்கு அரசனாகத் திகழ்ந்தான். தினந்தோறும் முக்கியமான தீர்த்தங்களில் நீராடித் திருமாலைப் பூஜித்துவந்தான். 500 ஆண்டுகள் கடந்தன. அந்தநிலையில் பாண்டிய நாட்டில் அரசனுடைய தோஷம் காரணமாகப் பெரும் வறட்சி ஏற்பட்டது. ஏரி, குளங்கள் வறண்டன. உயிரினங்கள் தம்மைக் காத்துக் கொள்வதற்காகப் பிற நாடுகளுக்குச் சென்றன. அப்படிப்பட்ட நிலையிலும் கஜேந்திரன் நெடுந்தொலைவு சென்று தாமரை மலர்களை சேகரித்து ஹரி பூஜையைத் தொடர்ந்து செய்யலானான்.

## தாமிரபரணியில்

ஒருநாள் கஜேந்திரன் மலர் கொய்யக் காடுகளில் அலைந்தான்; மாலை வந்துவிட்டது; தாமிரபரணியில் தாமரை மலர்கள் நிறைந்த ஒரு மடுவைப் பார்த்தான்; அது மிகவும் ஆழமானதாக இருந்தது. அங்கே தாமிரபரணி உத்தரவாகினியாகச் சென்று கொண்டிருந்தாள்.

கஜேந்திரன் அந்த நதியில் நீராடினான்; மடுவிற்குச் சென்றான்; நடுப்பகுதியை அடைந்தான்; மலர் பறிக்கலானான். அப்போது யானையை ஒரு முதலை பிடித்து இழுத்தது, அவனும் முதலையைப் பிடித்து இழுத்தான். இருவரும் சளைக்காமல் களைப்பின்றி 12

நாட்கள் போரிட்டுக் கொண்டனர். அப்போது கஜேந்திரன் வழிநடைக் களைப்பினாலும் உணவில்லாததாலும் பலம் குறைந்தான்; தன்னை தியானிப்பவரின் குறைகளை களையும் ஸ்ரீ ஹரியை மனதில் நினைத்தான்.

## தோத்திரத்துக்குப் பயன்

ஹரியைத் தோத்திரம் செய்யத் தொடங்கினான் கஜேந்திரன்; ஏழையாகிய என்னிடம் கிருபை பாலிக்க வேண்டும். தீனபந்துவே, தயாசிந்துவே, ஆதிமூலமே என்னை ரட்சிக்க வேண்டும். தாமரைக் கண்ணனே தங்களைச் சரணடைகிறேன் அடியேனைக் காக்க வேண்டும் என்று பலவாறாகப் பிரார்த்தித்தான்.

இதனைக் கேட்டார் திருமால். திகைப்புற்றார்; மகாலட்சுமியின் மடியிலிருந்து எழுந்தார்; தன் பக்தனை விரைந்து காக்கும் நோக்கில் எந்த அலங்காரமுமின்றிப் பாதரட்சைகூடத் தரிக்காமல் தயார்நிலையில் இருந்த கருடன் மீதேறி யானை இருந்த மடுவை அடைந்தார்.

## கஜேந்திர மோட்சம்

கஜேந்திரன் முன் வந்த திருமால் பயப்பட வேண்டாம் என்று அபயம் அளித்தார். பக்தனைக் காலதாமதம் இல்லாமல் காக்கும் எண்ணத்தில் கொடிய முதலையைக் கொல்வதற்கு சக்கராயுதத்தைப் பிரயோகம் செய்தார். அது முதலையைக் கொன்று திருமாலின் கைக்கே திரும்பியது.

கஜேந்திரன் தன்னைக் காத்த இறைவனைத் தரிசனம் செய்தது; தாமரை மலர்களைக் கொண்டு ஓம் நமோ நாராயணனாய என்ற அஷ்டாக்ஷர மந்திரம் சொல்லித் திருமாலின் திருவடிகளை அர்ச்சித்தது.

இதனால் மகிழ்ந்த திருமால் நீ விரும்பிய வரம் கேட்டுப் பெறலாம் என்றார். அது துதிக்கையை வானுயர நிமிர்த்தி ஜய விஜயிபவ என்று சொல்லி வணங்கிற்று. நான் பிறந்திருந்து சலித்தேன்; இன்று உங்கள் திருவடி தரிசனம் கிட்டியது. நான் மறுபடியும் சம்சாரக் கடலில் விழுந்துவிடக் கூடாது; கர்மம் என்னும் பாதாளக் கிடங்கில் மறுபடியும் விழுந்துவிடக் கூடாது என்றெல்லாம் கேட்டுக் கொண்டார்.

கஜேந்திரனின் விருப்பத்துக்குத் திருமால் செவிசாய்த்தார்; இந்தத் தீர்த்தத்தில் குளிப்பவர்களுக்கும் மோட்சம் கிடைக்கும் என்றார்.

*சந்திரன் ரோகிணியுடனும், சூரியன் சிம்மராசியில் இருக்கும்போது (அதாவது மாசி மாதத்து ரோகிணி நாளில்) இத்துறையில் குளிப்பவர்களுக்கும் தன்னை வணங்குபவர்களுக்கும் இக்கதை கேட்பவர்களுக்கும் எல்லாச் செல்வங்களையும் கொடுப்பேன் என்றருளினார்.*

*அந்நிலையில் யானையிலிருந்து இந்திரத்யும்ன மகாராஜன் வெளிப்பட்டான்; ஹரியைப் போற்றினான்; மோட்சம் அடைந்தான். அத்தீர்த்தக் கட்டம் அத்தாளநல்லூருக்கு அருகிலுள்ளது. கஜேந்திர மோட்ச தீர்த்தம் என்பதாகும்.*

✱✱✱

இதுவரை உள்ள செய்திகள் ஸ்ரீ தாம்ப்ரபர்ணீ மகாத்மியத்தின் முதலாம் பகுதியாகும். இது பூர்வகாண்டம் எனப்படுவது. 32 அத்தியாயங்களை உடையது. கஜேந்திர மோட்ச சருக்கமே 32-வது அத்தியாயமாகும். அதை அடுத்துள்ள 32 சருக்கங்கள் உத்தரகாண்டமாகும். உத்தரகாண்டம் தாமிரபரணி அந்தபுஷ்கரத்தில் வெளியிடப்பெறும்.

